# நானும் கடவுளும் நாற்பது ஆண்டுகளும்



ஞானி

காவ்யா

# நானும் கடவுளும் நாற்பது ஆண்டுகளும்



**ஞானி**

காவ்யா

நூல் : நானும் கடவுளும் நாற்பது ஆண்டுகளும்

ஆசிரியர் : ஞானி (கி.பழனிச்சாமி)
24, வி.ஆர்.வி. நகர்
ஞானாம்பிகா ஆலை(அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 029.

முதற்பதிப்பு : செப்டம்பர் 2006

வெளியீடு : காவ்யா, 16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 600 024.
போன் : 23726882

ஒளி அச்சு : மயூரா அச்சகம், கோவை

அச்சாக்கம் : உதயம் ஆப்செட், சென்னை.

பக்கங்கள் : XII + 113 = 125

விலை : ரூ.60.00

# முன்னுரை

1957–58 ஆண்டுகளில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான் படித்தபோது, எனக்கு ஏற்பட்ட சமய அனுபவத்தை ஆழமாகவும் விரிவாகவும் பொருள் படுத்தும் முறையில் நான் தொடர்ந்து சிந்தித்தேன். தமிழகத்தில் வாழும் எவரும் பெரியாரின் சிந்தனைத் தாக்கத்திலிருந்து தப்பமுடியாது. எனினும் அதன் பாதிப்பிலிருந்து விரைவாக என்னை விடுவித்துக்கொண்டு, மார்க்சிய அடிப்படையிலான புரிதலில் ஈடுபட்டேன். வானம், பூமி, உயிர்கள், மனிதர்கள் ஆகிய அனைத்துமே பிரம்மம் என்ற புரிதலை விவேகானந்தர் நெறியில் சமதர்மம் என்று பொருள்படுத்துவதுதான் மார்க்சியத்திற்கும் ஒத்ததாக இருந்தது. பாரதியும், தாகூரும் எனக்குக் கை கொடுத்தனர்.

எனது புரிதலின் அடிப்படையில் டாக்டர் இராதாகிருஷ்ணன், மகாத்மா காந்தி, ஜெ. கிருஷ்ணமூர்த்தி, வேதாத்திரி மகரிஷி, இராகுல சாங்கிருத்தியாயன் என்று தொடங்கி, பகவத்கீதை முதலிய நூல்களையும் ஆராய்ந்து, கடவுள் எஃன்பது ஒரு கருத்தாக்கம் என்றபோதிலும் கடவுளை மறுத்துரைக்கும் நாத்திகவாதம் முதலியவற்றால் கடவுள் என்ற உணர்வில் இருந்து மக்கள் ஏன் இன்னும் விடுபடவில்லை என்ற ஆய்வைத் தொடர்ந்தேன். "கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை?" என்ற நூலை எழுதி வெளியிட்டேன். மேலும் தொடர்ந்த என் ஆய்வின் விளைவாக இந்த இரண்டாவது நூல் வெளிவருகிறது. கடவுள் குறித்த என் ஆய்வு இனியும் தொடரும் என்றுதான் நான் கருதுகிறேன்.

கடந்த சிலமாதங்களுக்கு முன்பு தமிழகத்தைக் கடுமையாகத் தாக்கிய சுனாமி–ஆழிப்பேரலை, மக்கள் மனத்திலிருக்கிற கடவுள் நம்பிக்கையை முற்றாகத் தகர்த்திருக்க வேண்டும். மதவாதிகளுக்கும் இது ஒரு பேரிடி என்ற உணர்வு ஏற்பட்டிருக்க வேண்டும். இப்படியெல்லாம் எதுவும் நேர்ந்துவிடவில்லை. தொடர்ந்து பெய்த பெருமழையில் தமிழகத்தில் ஏற்பட்ட பெருவெள்ளம் சுனாமியைக் காட்டிலும் பலமடங்கு பேரழிவையும் பேரதிர்வையும் நமக்கு ஏற்படுத்தியது. கொள்ளிடத்தில் ஒரு வினாடிக்கு நான்கு இலட்சம் கனஅடிநீர் என்ற முறையில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கை மக்களால் எப்படித் தாங்கமுடியும்? வீராணம்ஏரியை ஒரு கடல் என்று கூடச் சொல்லமுடியும். இந்த ஏரியில் தொடர்ந்து வெள்ளம் நிறைந்து கொண்டிருக்கிறது என்ற

செய்தி எனக்குள் ஏற்படுத்திய அதிர்வையும், அச்சத்தையும் இன்றும் எனக்குள் உணர்கிறேன். அந்த ஏரியை ஒருமுறை நான் பார்த்திருக்கிறேன். வீராணம் ஏரியின் கரை உடையுமென்றால் பல நூறு கிராமங்கள் இருந்த இடம் தெரியாமல் அழிந்துபோகும். பலலட்சம் மக்களும் கால்நடைகளும் வெள்ளத்தில் காணாமல் போய்விடுவர். இந்தச் சமயத்தில் எனக்குள் எழுந்த உணர்வை இங்கு தயக்கமில்லாமல் உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன்.

எனக்கு கடவுள் நம்பிக்கை இல்லை. என் குடும்பத்தில் சில சமயங்களில் ஏற்பட்ட துயரத்தின் போதும் எனக்குள் கடவுள் நம்பிக்கை எழவில்லை. வீராணம் ஏரியால் எத்தனை இலட்சம் மக்களும் கால்நடைகளும் அழிவுக்குள்ளாவர் என்று பகலும் இரவும் நான் அச்சத்தோடு இருந்த நிலையில், எனக்குள் கடவுள் இந்த மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டது. கடவுள் நம்பிக்கை எனக்குள் இல்லையென்ற போதிலும் இப்படி ஏற்பட்ட உணர்விலிருந்து என்னை உடனடியாக விடுவித்துக்கொள்ள இயலவில்லை. கைகூப்பி நான் தொழவில்லை. வாய்விட்டுக் குரல் எழுப்பவில்லை. எனக்குள் கேட்டுக்கொண்டேன். நல்லவேளை வீராணம் ஏரி உடையவில்லை. என் வழிபாடு இதற்குக் காரணமாக இருந்திருக்கவே முடியாது. பின் எப்படி இந்த உணர்வு எனக்குள் ஏற்பட்டது?

இளம் வயதில் எனக்குள் ஆழமாகப் பதிந்த உணர்வு அடிமனத்தில் இன்னும் எங்கோ மிச்சமிருக்கிறது. அறிவார்ந்த முறையில் எத்தனையோ விளக்கங்களோடு கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம் அன்றி வேறில்லை என்பதை எனக்கு நானே நிறுவிக்கொள்கிறேன். இல்லாத கடவுள் இன்னும் எனக்குள் எப்படித் தங்கியிருக்கிறார்? எனது நிலை இப்படிஎன்றால், வாழ்வின் துயரங்களோடு தொடர்ந்து போராடும் மக்களிடமிருந்து கடவுள் நம்பிக்கையை எப்படி வெளியேற்ற முடியும்?

மக்கள் சீனத்தில் அரசு கிறித்தவப் பாதிரிமார்களை எப்படியெல்லாம் தொல்லைகளுக் குள்ளாக்கியது என்று மக்கள் சீனத்திற்கு எதிராக எழுதி, குறைந்த விலையில் வெளியிட்ட அமெரிக்க நூல் ஒன்றை சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு நான் படித்ததை இங்கு குறிப்பிட வேண்டும். கிறித்தவப் பாதிரிமார்கள் அமெரிக்காவிலிருந்து நிறையப் பணம் பெற்றுக் கொண்டிருந்ததைத் தடுக்கும் முறையில் மக்கள் சீன அரசு முதலில் ஓர் ஆணை

வெளியிட்டதாம். அதாவது சீனாவில் மக்கள் மத்தியில் மதத்தை போதிக்க மக்களிமிருந்துதான் செலவுத் தொகையைப் பெற்றுக்கொள்ளவேண்டுமேயன்றி வெளியிலிருந்து பணம் பெற்று மத நிறுவனங்களைக் காப்பாற்ற வேண்டியதில்லை. அந்நியர் ஆதரவில் மதம் வளர்க்க வேண்டியதில்லை. குறிப்பாக அமெரிக்கரின் பணம் தேவையில்லை. இப்படி சீனஅரசு முதலில் வெளியிட்ட ஆணையை பெரும்பாலான பாதிரிமார்கள் மறுக்கவில்லை. ஏற்றுக்கொண்டார்களாம். மறுத்தவர்கள் வெளியேற்றப்பட்டார்கள், அல்லது சிறைபடுத்தப் பட்டார்களாம். இரண்டொரு ஆண்டுகள் கழித்து இன்னொரு ஆணையை சீன அரசு வெளியிட்டதாம். கோவில் நிர்வாகம் மக்கள் தரும் நன்கொடைகளைக் கொண்டே நடைபெறவேண்டும். கோவிலுக்கு நிலம் முதலிய சொத்துக்கள் தேவையில்லை. இவை உழவர்களுக்கும் மக்களுக்கும் தேவை. உழைப்பவருக்குத்தான் நிலஉரிமை இருக்கமுடியும். இந்த ஆணையையும் பெரும்பாலான பாதிரிமார்களால் மறுக்க இயலவில்லை. மறுத்தவர்கள் மக்களின் எதிரிகள். அவர்கள் சிறையிலிடப்பட்டார்களாம். இப்படி சோசலிச அரசு செய்ததன் மூலம் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருந்த மத உணர்வுக்குப் பாதிப்பை ஏற்படுத்தியதாம்.

மார்க்கியத்திற்கெதிராக, மக்கள் சீனத்திற்கெதிராக அமெரிக்கா செய்த எத்தனையோ பரப்புரைகளில் இப்படியும் ஒன்று. இது எந்த அளவுக்கு உண்மை என்பது எனக்கு இன்றுவரை தெரியாது. எனினும் சில உண்மைகள் நமக்குப் புரிகின்றன. மதபீடங்களுக்கு நிலம் முதலிய சொத்துக்கள் தேவையில்லை. அந்நியரின் பணம் தேவையில்லை. மத நிறுவனங்கள் நிலக்கிழார்கள் போலச் செயல்படுவது தேவையில்லை. கடவுளை இத்தகைய அதிகார பீடங்கள் தாங்க வேண்டியதில்லை. மக்கள் மத்தியில் மத நம்பிக்கைகள் எவ்வாறெல்லாம் திணிக்கப்படுகின்றன. தங்கியிருக்கின்றன. இவற்றிற்கு யார் காரணம்? என்றெல்லாம் நாம் சிந்திக்கத்தான் வேண்டும்.

இந்த நூலின் இறுதியில் "பகவத் கீதை – என் வாசிப்பு" என்னும் கட்டுரையை இணைத்துள்ளேன். கீதை பற்றியும் வேதங்கள் பற்றியும் அண்மைக்காலத்தில் சமயவாதிகள் உட்படப் பலரும் உரத்துப் பேசுகிறார்கள். வாழ்வின் அடிப்படை உண்மைகள் நமக்குத் தெளிவுபடவேண்டும். பிரபஞ்சம், இயற்கை, வரலாறு, சமூகம்

பற்றிய அறிவு நமக்குத் தேவை. சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகள், ஆதிக்கங்கள் எந்த வடிவிலும் நமக்குத் தேவையில்லை. சமத்துவமும் சமதர்மமும் இல்லாமல் நமக்கு வாழ்வில்லை. இயற்கையை எக்காரணம் கொண்டும் ஆதிக்க வாதிகள் அழிப்பதை நாம் ஏற்கமுடியாது. தேசத்தின் மீது முதல் உரிமை உழைக்கும் மக்களுக்குத்தான் இருக்க முடியும். பிரபஞ்சத்தின் பேரியக்கத்தினுள் நாமும் இருக்கிறோம். வரலாறு நமக்குள்ளும் இயங்குகிறது. தனியுடைமை என்பது வாழ்வின் அடிப்படையாக இருக்க வேண்டியதில்லை. மத பீடங்கள்தான் கடவுளைக் காப்பாற்ற வேண்டும் என்பதுமில்லை. உழைப்பும் பகிர்வுமே வாழ்விற்கு அர்த்தமும் அழகும் தருபவை. இவற்றையெல்லாம் ஒதுக்கிவிட்டு வாழ்வில் அமைதி, வாய்மை, அன்பு, பரவசம், பேரின்பம் என்றெல்லாம் பேச முடியாது. இவையன்றி தெய்வமென்றும் வேமென்றும் கிதையென்றும் எதுவும் இருக்கமுடியாது. இவற்றையெல்லாம் ஒப்புக்கொள்கிற புதிய கிதைகள் நமக்குத் தேவை. புதிய வேதங்கள் நமக்குத் தேவை. வேதங்கள் மனித வாழ்வின் அர்த்தங்களை, அடிப்படைகளைச் சொல்ல வேண்டும். மந்திரத்தால் மாங்காய் காய்க்க முடியாது. வேள்விகள் செய்து மழை பெய்விக்க முடியாது. பூணூலில் புனிதம் இல்லை. பொய்யர்களின் வேதம் நமக்கு வேண்டாம். சமதர்மமே நமக்கு புதிய கிதை. மற்றும் புதிய வேதம்.

இந்தத் தொகுப்பிலுள்ள கட்டுரைகளை அழகுற ஒளியச்சு செய்த மயூரா அச்சகத்தினருக்கும், அணிந்துரை வழங்கிய நண்பர் திரு. க. அறிவன் அவர்களுக்கும், பிழை திருத்தம் செய்து உதவிய நண்பர் திரு ஜவஹர், என் உதவியாளர் செல்வி. தேவி அவர்களுக்கும் என் வேண்டுகோளை உடனடியாக ஏற்று நூலை வெளியிடுகிற என் அருமை நண்பர் "காவ்யா" திரு. சண்முக சுந்தரம் அவர்களுக்கும் என் மனம் நிறைந்த நன்றிகள் உரியவை.

– ஞானி

# அணிந்துரை

இறை ஏற்பாளர், இறை மறுப்பாளர் இருவரையும் இணைக்கும் புள்ளியாகக் கடவுள் வாழ்ந்து கொண்டிருக்கிறார். கடவுள் இறந்துவிட்டார் என்ற நீட்சேயின் கூற்றுக்குப் பின்பும் மனிதர்கள் கடவுள் நம்பிக்கையைக் கைவிடப் போதுமான வாழ்க்கைச் சூழல் இல்லை. கடவுள் இல்லை. கடவுள் இல்லை. கடவுள் இல்லவே இல்லை என்று எத்தனைமுறை மறுத்தாலும் நூறு நூறு பிள்ளையார் சிலைகளை உடைத்து நொறுக்கினாலும், முன் இருந்ததைவிடவும் பன்மடங்கு இறையுணர்வு மக்களை ஆட்கொண்டு வளர்ந்தே வருகிறது.

இலக்கியம் முதலிய படைப்புகள் வாழ்க்கையைப் புரிந்து கொள்வதற்கான முயற்சி. படைப்புத் தொழில் மனிதர்களுக்கானது என்பதால் கடவுள் மனிதரின் படைப்பாக உருவானது. இயற்கையோடு இயைந்த மனிதர்க்கு அந்த இயற்கையின் பேரழகில், அதன் பேரியக்கத்தில் தம்மை இனம்கண்டு வெளிப்படுத்திக்கொள்ளக் கிடைத்த ஓர் உண்மை, கடவுள். தன்னைப்போல் படைத்து, அதற்கு தன்னைவிடவும் அழகையும், ஆற்றலையும் கொடுத்து, தன்னை ஆளும் தலைமைக்கு உயர்த்தி, பின் அது தன்னைத்தானே படைத்துக் கொண்டது என்ற பெருமையையும் வழங்கி, அந்தக் கடவுளுக்கு முன் தான் அற்று நிற்கும் அருளாளர், மனிதர். இந்த வரலாற்றில் கலை உரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடவும் துணிந்தனர்.

"கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை?" என்ற தன் நூலின் தொடர்ச்சியாக ஞானி தன்னுடைய இரண்டாவது நூலையும் கடவுள், சமயம் பற்றிய ஆய்வாக வெளிக்கொணர்கிறார். இருபது வயதில் கடவுள் நம்பிக்கையை விட்டொழித்த ஞானி, இந்த நூலின் 22 பகுதிகளிலும் தன்னுடைய கடவுள், சமயம் பற்றிய அனுபவங்களை நம்மோடு பகிர்ந்துகொள்கிறார். நம்மை முன் அமர்த்தி அவர் நிகழ்த்தும் ஓர் உரையாடலாக நூல் தொடர்கிறது. கடவுள் என்ற கருத்தாக்கம் பொருண்மை ஆற்றலோடு மனித வாழ்வில் எப்படியெல்லாம் ஊடுருவி நிற்கிறது என்பதைத் தன் வரலாறு, மெய்யியல் சார்ந்த அறிவால் விளக்க முனைகிறார். "ஐம்புலன்களோடு நாம் வாழ்கிறோம். பகுத்தறிவோடு நாம் வாழ்கிறோம். இவற்றிற்கு அப்பாலான இன்னொன்றின் தொடர்பிலும் நாம் இருக்கிறோம்" என்று கூறும் ஞானி, அந்த

- இது மனிதர்களின் உலகம். இங்கு தெய்வங்கள் வந்து போகலாம். மனிதனும் தெய்வமாகலாம். இங்கு மனிதனுக்கே முதன்மை.

- இறைவன்தான் எல்லாவற்றையும் படைத்தான், தந்தான் என்பதை உண்மையாக நம்பும் எவரும் தனக்கென எதையும் வைத்துக் கொள்ள முடியாது. எல்லாவற்றையும் பிறரோடு பகிர்ந்து கொள்வதன் மூலமே இறைவனுக்குச் சேவை செய்யமுடியும்.

- வாழ்வில் இதுவரை கண்டவை பொய்யென்றும் போலித்தனங்களென்றும் உணரும்போது நாம் என்ன ஆகிறோம். மயானத்தில், சுடலையில் சாம்பலைப் பூசிக்கொண்டு வெற்றுடம்போடு நிற்கிறோம். ஆதாரமற்ற பாழ்வெளியில் நிற்கிறோம்.

- ஜே.கே. நம் மனதிற்குள் கரையும்பொழுது நம்மால் பக்தி செய்ய முடியாது. அதிகாரம் செய்ய முடியாது. வணிகத்தில் ஈடுபாடு கொள்ளமுடியாது. ஜே.கே.வை மேற்கோள் காட்டி சொற்பொழிவு செய்ய முடியாது.

# 1

> கடவுள் பற்றிய கருத்தில் பகுத்தறிவாளரும் மார்க்சியரும் ஒன்றுபோல் பேசமுடியாது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் படித்த காலத்தில் எனக்கு ஏற்பட்ட சமய அனுபவங் களைப் பல ஆண்டுகள் கழிந்த பிறகு இரு கட்டுரையாக எழுதி வைத்தேன். அந்தக் கட்டுரையை 'சமயம் என் அனுபவம்' என்னும் தலைப்பில் 'கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை' என்ற எனது நூலின் இறுதிக் கட்டுரையாக இணைத்து 1996 இல் வெளியிட்டேன். 40 ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு ஏற்பட்ட தெளிவான சமய அனுபவம் எனக்குள் பல திசைகளிலும் என் சிந்தனையைத் தொடர்ந்து தூண்டி வருகிறது. சமய அனுபவத்திற்குப் பின்னர் தொடர்ந்து சுமார் 10/15 ஆண்டுகள் என் அனுபவத்தை நாத்திக வாதத்திற்கு அனுசரணையாகப் புரிந்து கொண்டு நான் விவாதித்தேன்.

வகுப்பறைகளில் மணிமேகலை, பெரிய புராணம் போன்ற காப்பியங்களில் வரும் பாடப் பகுதிகளில் இடம் பெற்ற இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் மற்றும் கடவுளின் அருளிச் செயல்களை மறுக்கும் முறையில் என் மாணவர்களோடு விவாதித்தேன். சில மாணவர்கள் முகம் சுளிப்பதையும் பார்த்திருக்கிறேன். 'புதிய தலைமுறை' இதழ் நடத்திய காலத்தில் எனக்குள்ளே இது ஒரு கடும் சிக்கலாக இருந்தது. அப்பொழுது இது குறித்து ஒரு விரிவான கட்டுரை எழுதினேன். கடவுள் நம்பிக்கை இருக்கிற வரை மக்களை மார்க்சிய நோக்கில் நகர்த்த முடியாது என்று அந்தக் கட்டுரையில் எழுதியிருந்தேன். வெளியிடுவதற்கு என்று இல்லாமல் என் கருத்தை நானே தெளிவுபடுத்திக் கொள்ளும் முறையில் எழுதிய கட்டுரை அது.

அப்பொழுதெல்லாம் பகுத்தறிவாளர்கள் கடவுள் மறுப்பைத் தீவிரமாகப் பரப்புரை செய்து கொண்டிருந்தனர். என்ன காரணத்தினாலோ அவர்களோடு எனக்கு ஒத்த உணர்வு இல்லை. அறவே சமய அனுபவம் என்று எதுவும் இல்லாமல் அவர்கள் கடவுளை முற்றாக மறுத்துப் பேசிக் கொண்டிருந்தனர். இவர்களைப் போல என்னால் பேச முடியாது. நாளடைவில் தான் எனக்குள் மெல்ல மெல்ல தெளிவு ஏற்பட்டது. மதம் பற்றிய கருத்தில் ஒரு பகுத்தறிவாளரும், ஒரு மார்க்சியரும் ஒன்று போல பேச முடியாது. இருவருடைய அணுகுமுறையும் வேறு வேறானவை.

மார்க்சின் அணுகுமுறையை நான் புரிந்து கொண்டிருந்தேன். இத்தகைய புரிதலுக்கு தோழர் எஸ்.என். நாகராசன் அவர்களும் எனக்குப் பெரிதும் அனுசரணையாக இருந்திருக்கிறார். புதிய தலைமுறையில் இருந்த என் நெருக்கமான நண்பர்களுக்கு இடையிலும் இது குறித்து மாறுபட்ட கருத்துகள் இருந்தன. நஞ்சப்பன் என்ற என் நெருக்கமான நண்பர் பெரியாரியக் கருத்தில் அன்றும் சரி, இன்றும் சரி, உறுதியாகவே இருந்து வருகிறார். இன்னும் சிலரும் இதைப் போன்ற கருத்தோடு இருந்தனர்.

இடையில் ஒரு நிகழ்ச்சியை நான் இங்கு சொல்ல வேண்டும். 'நிகழ்' இதழில் இது குறித்து எழுதியிருக்கிறேன். என் மனைவி முற்றான கடவுள் நம்பிக்கை உடையவர். சமயச் சார்பான சடங்குகளை விடாப்பிடியாக செய்து வருபவர். என்னோடு எத்தனையோ வகைகளில் முரண்பட்ட கருத்துடையவர். என் அரசியல் சார்பு முதலிய போக்குகள் என் மனைவிக்கு உடன்பாடு இல்லை. குடும்ப நிர்வாகத்தை முழு அளவில் அவர் விருப்பத்தோடு செய்பவர். குடும்ப நிர்வாகத்தில் என் பங்கு மிகவும் குறைவு. என்னைச் சில சமயம் கடுமையாக அவர் சாடுவார். கணவனை மதிக்காத உனக்கு கடவுள் நம்பிக்கை ஏன் தேவை? என்பது அன்று என் கருத்தாக இருந்தது.

ஒரு சமயம் ஏதோ ஒரு கடுமையான சிக்கல். என்னை என் மனைவி மரியாதைக் குறைவாக பேசுவதை என்னால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. ஒரு அழகிய முருகன் படத்தை வைத்துக் கொண்டு, அதற்கு அவர் வழிபாடு செய்துவந்தார். கடுமையான ஆத்திரத்தோடு அந்தப் படத்தை உடைத்து நொறுக்கினேன். கண்ணாடியும் சட்டகமும் உடைந்து நொறுங்கின. முருகன் ஓவியக் காகிதம் கிழிபட்டது; தரையில் அவை கொட்டிக்கிடந்தன. என் மனைவி தரையில் அமர்ந்து அந்தத் துண்டங்களை எல்லாம் பொறுக்கி எடுத்து ஒரு துணியில் வைத்துக் கொண்டு கதறி அழுதார். அவர் அழுகை நெடு நேரம் ஓயவில்லை. எனக்குள் இப்பொழுது கோபம் இல்லை. இப்படிச் செய்திருக்க வேண்டாமோ என்று சிந்தித்தேன்.

பல நாளும் என் மனைவி பலமுறை அழுதாள். அந்த அழகிய முருகன் படம் அவரை பெரிதாக ஈர்த்து ஒரு வகையில் பிணைத்து வைத்திருந்தது. எனக்குள் பல சிந்தனைகள். கடவுள் நம்பிக்கை என்பதற்கு இத்தனை வலிமை உண்டா? கடவுள் நம்பிக்கையிலிருந்து என்ன செய்தாலும் எந்த நிலையிலும் என் மனைவியை மாற்ற

முடியாது. நான் இப்படி செய்திருக்க வேண்டாம். இந்த அனுபவமும் பல நாட்கள் எனக்குள் அதிர்வு அலைகளைத் தந்தது. என் மனைவி மட்டுமல்லாமல் நம் சமூகத்தில் உள்ள இலட்சக்கணக்கானவர்கள் இப்படி ஆழமான நம்பிக்கையோடு வாழ்ந்து கொண்டிருக் கிறார்கள். ஏதேனும் சில சூழல்களில் அவர்களுக்கு கடவுளைப் பற்றி ஐயங்கள் எழுந்த போதிலும் கடவுள் நம்பிக்கையிலிருந்து அவர்களால் தம்மை விடுவித்துக் கொள்ள முடியாது. போலிகளைப் பற்றி நாம் இங்கு பேச வேண்டியதில்லை. கடவுள் குறித்து இப்படி ஆழமான நம்பிக்கை உடையவர்களைப் பற்றித் தான் இங்கு பேச வேண்டியிருக்கிறது.

இதன் தொடர்பாக இன்னொன்றையும் நான் இங்குச் சொல்லவேண்டும். எனக்கு அன்றும் சரி இன்றும் சரி ஒன்றும் புரியவில்லை. இளமையில் கடவுள் நம்பிக்கை உடையவர் வளர்ந்து வரும் காலத்தில் வாழ்வின் சிக்கல்கள் சிலவற்றில் அடிபட்டு கடவுள் நம்பிக்கையைக் கைவிடுகின்றனர். இவர்கள் இறுதி வரை கடவுள் நம்பிக்கை இன்றி வாழ்ந்து விடலாம். அல்லது இவர்கள் வேறு சில சூழலில் மீண்டும் கடவுள் நம்பிக்கைக்குத் திரும்பி வரலாம். இவர்களைப் பொறுத்தவரை கடவுள் என்பது குறித்து ஆழமான ஆய்வு இல்லாமல் ஒரு நம்பிக்கை என ஏற்றுக் கொண்டவர்கள். இன்னொரு வகையான மனிதர்கள் தான் எனக்குள் சிக்கலாக இருப்பவர்கள். உதாரணமாக கவிஞர் கண்ணதாசன் கடுமையான கடவுள் நம்பிக்கைக்குத் திரும்புகிறார். நிறைய எழுதுகிறார். ஒரு நாத்திகராக அதுவும் பெரியாரியராக இருக்கும் ஒருவர், அப்புறம் நாத்திக உணர்வை முற்றாக கைவிட்டு தீவிரமான கடவுள் நம்பிக்கையாளராக எப்படி மாற முடியும்? இப்படி மேலும் சிலரை நண்பர்கள் அறிவார்கள். இதில் மேலும் ஒரு சிக்கல். அறிஞர் அண்ணாவைப் பொறுத்தவரை பெரியாரிடம் முற்றான நம்பிக்கையோடு இருந்தவர். பெரியாரை விட்டுப் பிரிந்து அப்புறம் தனக்கென ஒரு அரசியல் இயக்கத்தை ஆரம்பித்த நிலையில் ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்று பேசத் தொடங்கினார். கட்சி அரசியல் காரணமாக இப்படி ஒரு முடிவுக்கு வந்தார் என்று நான் கருதவில்லை. இது குறித்து அண்ணா அவர்கள் ஏதேனும் விளக்கம் தந்தாரா? என்பதும் எனக்குத் தெரியவில்லை.

என் மனைவி மட்டுமல்லாமல் இன்னும் ஆயிரக் கணக்கானவர்கள் கடவுள் என்று ஒருவர் இருக்கிறார். அப்படி ஒருவர் இருக்கத்தான் வேண்டும். அப்படி ஒருவர் இல்லாமல் இந்த

உலகமோ அண்டமோ உயிர் வகைகளோ தோன்றி இருக்கவே முடியாது என்று இவர்கள் நம்புகிறார்கள். அப்புறம் அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்ற நம்பிக்கையை வாழ்வின் அனைத்து இயக்கங்களிலும் காண்கிறார்கள். இவை பற்றி நான் இங்குப் பேச வரவில்லை. எனது சமய அனுபவத்தை நான் எப்படி எல்லாம் தொடர்ந்து புரிந்து கொண்டேன் என்பதை நான் விளக்க வேண்டும். என் மனைவியைப் போலவே தம்மிலிருந்து எந்த வகையிலும் பிரித்துப் பார்க்க முடியாத அளவுக்கு கடவுள் நம்பிக்கையோடு ஒன்றிக் கிடப்பவர்கள் பற்றித்தான் நாம் சிந்திக்க வேண்டும். பகுத்தறிவு வாதம் இவர்களின் நம்பிக்கையை தகர்த்து விட முடியாது. அதைப் போலவே மேலோட்டமாக மார்க்சியத்தை ஏற்பவரையும் கடவுள் நம்பிக்கை உடையவர் என்பதனாலேயே மார்க்சிய கட்சியில் உறுப்பினராக சேரும் தகுதி இல்லாதவர் என்று கட்சி அமைப்பாளர்கள் கருத வேண்டியதில்லை.

இப்படி ஒரு நிலைப்பாட்டை கட்சி அமைப்பாளர்கள் கருத வேண்டியதில்லை. இப்படி ஒரு நிலைப்பாட்டை கட்சி சார்ந்த மார்க்சியர்கள் மேற்கொள்கின்றனர். இவர்கள் தமக்கு ஆதாரமாக லெனினை மேற்கோள் காட்டுகின்றனர். இவர்களைப் போல் திராவிட இயக்கத்தினர் பெரும்பாலும் பேசுவதில்லை. அண்மைக் காலத்தில் தான் தம்மை பகுத்தறிவாளர் என்றும் அதே சமயம் தமக்குள் கடவுள் நம்பிக்கை உண்டு என்றும் ஆனால் கோவிலுக்குத் தாங்சள் போவதில்லை என்றும் பேசுபவர் சிலரை நான் பார்க்கிறேன். பெரியாரை இவர்கள் இப்படிக் கேவலப்படுத்த வேண்டாம் என்று நாம் கருதுகிறோம். இவை எல்லாம் போலித்தனங்களோடு சேர்ந்ததா, இல்லையா என்றெல்லாம் கூட நாம் ஆராயத்தான் வேண்டும். என் மனைவியோடு எனக்கு ஏற்பட்ட அனுபவத்திற்குப் பிறகு நான் எனக்குள் என் சமயம் அனுபவம் குறித்து கூடுதலான அக்கறையோடு ஆராய்ந்திருக்கிறேன். கடவுள் என்பதை இன்னும் ஆழமாக நான் புரிந்து கொள்ள வேண்டும். மேலும் சில 10 ஆண்டுகள் இதுபற்றி நான் எனக்குள் ஆராய்ந்திருக்கிறேன். இது குறித்து நான் சொல்வதற்கு முன்பு இன்னும் சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன்.

## 2

## ஆதிக்கவாதிகளின் கையில் மதம் அகப்படும்பொழுது மக்கள் விடுதலைக்குச் சார்பான இறையியல்

'கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை?' என்ற நூலை நான் எழுதிய அனுபவங்கள் குறித்து இப்பொழுது சொல்ல வேண்டியதில்லை. நூலின் முன்னுரையில் சுருக்கமாக எழுதி இருக்கிறேன். எனது நூல் எதற்கும் வெளியீட்டுவிழா என ஒன்றை நான் நடத்தவில்லை. ஆனால் இந்த நூலின் வெளியீட்டு விழாவை நண்பர்கள் மூலம் கவிஞர் சிற்பி அவர்களின் தலைமையில் கோவையில் நடத்தினேன். பகுத்தறிவாளர்கள் அல்லாமல் மார்க்சியரும் கோவையில் நிறையப்பேர் உள்ளனர். மதம் என்றால் என்ன? கடவுள் என்பதை வரலாற்றுச் சூழலில் தோன்றிய ஒரு கருத்தாக்கம் என்பதை நண்பர்கள் புரிந்து கொள்ளவில்லை. இதற்காக இந்த வெளியீட்டு விழா உதவியாக இருக்கும் என்பது என் நோக்கம். கருத்தரங்கில், இன்னும் நான் என் அனுபவங்களை விரிவாக எழுதி இருக்க வேண்டும் என்று சிற்பி அவர்கள் கூறினார். நண்பர் அறிவன் என்னோடு ஒத்தக் கருத்து உடையவர். கருத்தரங்கில் கலந்து கொண்ட பிற நண்பர்களைப் பொறுத்த வரை தம் கருத்தில் உறுதியாக இருந்தனர். எனது நூல் அவர்களை அசைக்கவில்லை.

என் நூல் வெளியான இரண்டொரு மாதத்திற்குள் மேலைச் சிவபுரியிலிருந்து பாரதி என்பவர் எனக்கு ஒரு மடல் எழுதியிருந்தார். எனது நூலின் மூலம் தனக்கு ஏற்பட்ட தெளிவையும் மகிழ்வையும், நன்றியையும் எனக்குத் தெரிவித்தார். இவரும் என்னைப் போலக் கடவுள் பற்றிய ஆழமான தேடலோடு இருந்திருக்க வேண்டும் என்று கருதினேன். இப்படி என்னோடு உடன்பட்டோ, மறுத்தோ மேலும் சிலர் எனக்கு அவ்வப்பொழுது எழுதினர். பகுத்தறிவாளர் அல்லது மார்க்சியர் என்று தன்னை நம்பும் எவரும் என் நூல் பற்றி எனக்கு எழுதியதில்லை. கோவையில் உள்ள என் நண்பர் அக்னிபுத்திரன் அவர்கள், 'கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை என்று தான் ஞானி கேட்கிறார்'. 'ஞானியைப் பொருத்தவரை அவர் கடவுள் இன்னும் சாகவில்லை' என்று கருத்துரைத்தார் என்பதை எனது நண்பர்கள் மூலம் அறிந்தேன். ஏதோ, என்னுடைய கடவுள் எனக்குள் சாகவில்லை, எனக்குள் இன்னும் அவர் உயிருடன் தான் இருக்கிறார் என்று நான் ஒப்புதல் வாக்குமூலம் வழங்கியதைப் போல நண்பர்

அக்னி கேலியாக என்னைப் பற்றிக் கூறியிருக்க வேண்டும் என்று கருதிக் கொண்டேன். கடவுள் என்று ஒருவர் அறவே இல்லை என்ற நிலையில் கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை? என்று ஞானிக்கு ஏன் சந்தேகம் ஏற்பட வேண்டும்? அப்படியானால் ஞானியைப் பொருத்தவரை கடவுள் இன்னும் சாகாமல்தான் இருக்கிறார் என்றும் வேறு சிலர் கூறியதையும் கேள்விப்பட்டிருக்கிறேன். எனது நூலில் நான் முன் வைத்திருக்கிற என் ஆய்வு பற்றியோ என் அனுபவம் பற்றியோ இவர்கள் சிறிய அளவுக்கேனும் கண்டு கொள்ளும் மனநிலையில் இல்லை என்றுதான் நான் புரிந்து கொண்டேன்.

இன்னும் ஒரு அனுபவம் பற்றி இங்கு நான் சொல்லலாம். கோவையில் சித்தர் இயக்கம் என ஒன்றை செயல்படுத்தி வருகிற ஒருவர், ஒரு நாள் தன் நண்பர்கள் இருவரோடு என்னைத் தேடி வந்தார். கடவுளைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? என்றுத் தொடங்கி அவர் இடைவிடாது பேசினார். அவரோடு வந்த நண்பர்கள், அவருடைய சீடர்களாக இருக்க வேண்டும். அவர்கள் முன்னிலையில் என்னை வாயடைக்க செய்ய வேண்டும் என்பது அவர் எண்ணமாக இருந்திருக்கக் கூடும். கடவுள் உண்டு என்றோ, இல்லை என்றோ என் நூலில் நான் விவாதிக்கவே இல்லை. கடவுள் என்பது கருத்தாக்கம். வரலாற்றுச் சூழலில் மனிதன் செய்து கொண்ட ஒரு தர்க்கம் – ஒரு கண்டுபிடிப்பு. இப்படித்தான் நான் எழுதி இருக்கிறேன் என்று அவரை இடைமறித்துச் சிலவற்றைக் கூற முயன்றேன். அவர் மீண்டும் மீண்டும் என்னை மறுத்துக் கூறினார். அவர் தனக்கே உரிய கடவுளை, பலருக்கும் தான் மெய்பித்துக் கொண்டிருக்கிற கடவுளை, அவருக்கு ஒத்த அனுபவம் இல்லாத என்னைப் போன்ற ஒருவர் எப்படி மறுக்கலாம்? என்பது தான் அவருடைய உறுதியான கருத்து. கடவுள் என ஒருவர் இல்லாமல் எப்படி இந்த உலகமும் அவரும் மட்டுமல்லாமல் நானும் உயிர் வாழ முடியும் என்பது கூட அவரது கவலையாக இருந்திருக்க வேண்டும். அரைகுறையாக தன் விவாதத்தை முடித்துக் கொண்டுச் சென்ற அவர், இன்னொரு முறையும் என்னைப் பார்க்க வந்திருந்தார். மீண்டும் அதே விவாதம். என்னைத் திருத்தவே முடியாது என்று இப்பொழுதாவது முடிவு செய்துக் கொண்டு போனவர் பிறகு திரும்பி வரவில்லை.

என்னுடைய புத்தகம், நான் எதிர்பார்த்ததற்கும் மாறாக விரைவில் விற்றுத் தீர்ந்தது. திருச்சியில் தூய பவுல் இறையியல்

கல்லூரியில் அப்பொழுது அங்கு பேராசிரியராக இருந்த அருள்திரு ச.த. செல்வராசு அவர்கள் என் புத்தகம் பற்றி ஒரு கலந்தாய்வுக்கு ஏற்பாடு செய்திருந்தார். தமிழகத்தில் விடுதலை இறையியல் என்ற கருத்தியல் பல்வேறு கத்தோலிக்க வட்டாரங்களில் அப்பொழுது விரிவாக விவாதிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இறையியல் கல்வி பயிலும் சகோதரர்களும் சகோதரிகளும் மிகுந்த அக்கறையோடு விடுதலைக்கான சமூக மாற்றத்தில் கிருத்துவ இறையியலின் பங்கு பற்றி ஆழ்ந்த அக்கறையோடு படித்தனர். இவர்களின் வட்டாரத்தில் என் நூல் அதிக அளவில் விற்பனை ஆயிற்று. இவர்கள் தான் இறைவனைத் தமக்குள்ளும், சமூகத்திற்குள்ளும், வரலாற்றினுள்ளும் தேடியவர்கள். ஏசுவை ஒரு அசலான ஆன்மீகராக மட்டுமில்லாமல் புரட்சியாளராகவும் கண்டவர்கள். தெய்வம் கோயிலுக்குள் மட்டுமில்லை மக்களோடு வாழ்கிறவர், கடவுள். மக்களின் எல்லாச் செயல்பாடுகளோடும் கடவுள் வாழ்கிறார். விடுதலைச் செயல்பாடுகளில் தன்னை வெளிபடுத்திக் கொள்கிறார். இறைவனைப் பற்றி இத்தகைய கருத்து உடையவர்களுக்கு எனது நூலின் பால் ஈடுபாடு ஏற்பட்டதில் வியப்பில்லை. கடவுள் என்பதை இவர்கள் முற்றாக நம்புகிறவர்கள் அதே சமயம் வெறும் பூசனைக்கு மட்டுமே உரியவராக கடவுளை வைத்துக் கொண்டாடுவதை இவர்கள் விரும்புவதில்லை. கடவுளை விண்ணுலகில் உயர வைத்துப் புனிதராகக் காண்பதில் இவர்களுக்கு உடன்பாடு இல்லை. கடவுள் நம்மோடு வாழ்கிறவராக, நமக்காக வாழ்கிறவராக, இருப்பவர் என்று இவர்கள் நம்புகிறார்கள். இப்படிக் கடவுளைப் பற்றிச் சிந்திப்பதற்கு ஏசு கிறிஸ்துவின் வாழ்க்கை இவர்களைப் பொறுத்தவரை ஆதாரமாக இருக்கிறது. இறைவன் மனிதராக வரலாற்றுக்குள் வந்தவர். மனிதத் துயரங்களில் பங்கு கொண்டவர். மனிதர்களுக்காக சிலுவை சுமந்தவர். சிலுவையில் மறித்தவர். கடவுள் என்பவர் இத்தகையவராகத் தான் இருந்தாக வேண்டும். இப்படி இவர்கள் கருதுகிறார்கள்.

விடுதலை இறையியல் பற்றி அருள்திரு. செல்வராசு அவர்கள் மூலமும் பிரிது ஒரு சமயத்தில் பேராசிரியர் பாஸ்டின் விளங்கா அவர்கள் மூலமும் நான் அறிந்து கொண்டேன். விடுதலை இறையியல் மார்க்சியத்தோடு ஒத்துச் செல்கின்ற ஒரு கருத்தியல். மதம் பற்றி சமூகவியல் நோக்கில், இறைவன் என்பது ஒரு கருத்தாக்கம் தான் என்ற புரிதலுக்கு அழுத்தமான ஆதாரம் தருகிற ஒரு கருத்தியல். கிறிஸ்தவ சமயம் மட்டுமில்லாமல் அனைத்து வகையான சமயங்களின் உள்ளும் இவ்வகை கருத்தியலுக்கு இடம் உண்டு.

ஆதிக்கவாதிகளின் கையில் மதம் அகப்படும் பொழுது மக்கள் விடுதலைக்குச் சார்பான இந்த இறையியல் மறைக்கப்படுகிறது. அல்லது இறை உண்மைக்கு எதிரான நாத்திகமென ஒதுக்கப்படுகிறது. மதம் மக்கட் சார்புடையவர் கைக்கு வரும்பொழுது, இறைவன் மக்களுக்கு நெருக்கமாகிறான். மக்களின் துயரங்களில் பங்கு கொள்கிறான். மக்களைத் துயரத்தில் ஆழ்த்துபவர்களுக்கு எதிராக இறைவன் செயல்படுகிறான். விடுதலை தருகிறான். இராமனைப் பற்றியும் கண்ணனைப் பற்றியும் ஓயாமல் பேசுபவர்களுக்கு இந்த உண்மை தெரிந்திருக்க வேண்டும். மக்களைத் துயரங்களில் ஆழ்த்துபவர்களுக்கு எதிராக இறைவனை இவர்கள் நிறுத்தியிருக்க வேண்டும். எப்பொழுதாவது அவதாரம் செய்து மக்களை இறைவன் காப்பாற்றுவான் என்பதற்கு மாறாக இறைவனை நிகழ்காலத்திற்குள்ளும் கண்டிருக்க வேண்டும். மக்கள் மீது திணிக்கப்படும் கொடுமைகளுக்கு எதிரான போரில் இறைவன் சார்பாக தன்னை நிறுத்தியிருக்க வேண்டும். இவ்வாறெல்லாம் இறைவனை தமக்குள்ளும் சமூகத்திற்குள்ளும் வரலாற்றினுள்ளும் காணும் விருப்பமற்ற இவர்களை மக்கள் மதிக்க வேண்டியதில்லை. இவர்கள் வெறும் புரோகிதர்கள். மக்களுக்கு எதிராகக் கடவுளை நிறுத்துபவர்கள். கோவில் வழிபாடு சடங்கு என்பதிலேயே கடவுளைப் புதைப்பவர்கள். எனது நூல் பற்றியும் நான் இப்படிச் சொல்ல முடியும். விடுதலை இறையியலின் வழியே எனது சமய அனுபவங்களைத் தொடர்ந்து புரிந்து கொண்டிருந்தேன்.

ஒரு வகையில் விவேகானந்தர் பற்றியும், பாரதி பற்றியும் முன்பே எனக்கு இருந்த புரிதல் எனது சமய அனுபவத்தை ஆழமாக நான் புரிந்து கொள்வதற்குக் காரணமாக இருந்திருக்க முடியும். பெரியார் முதலிய பகுத்தறிவுவாதிகளோடு எப்பொழுதும் நான் மதம் என்பதைப் பொருத்தவரை ஒத்த கருத்துடையவனாக இருந்தது இல்லை. நான் தமிழ் இலக்கிய மாணவன். தமிழ் இலக்கியக் கல்வியோடு நான் வளர்ந்தவன். தமிழிலக்கியத்தையும், இலக்கணங்களையும் நான் ஆழமாகக் கற்றுக் கொள்வதற்குக் காரணமாக இருந்த ஆசிரியர்களும் பேராசிரியர்களும் என் மரியாதைக்கு உரியவர்கள் மட்டுமல்ல, என் வணக்கத்திற்கும் உரியவர்கள். தமிழ் இலக்கியத்தில் ஒரு பெரும்பகுதியாக இருப்பது பக்தி இலக்கியம். இந்தத் தமிழ் இலக்கியத்தை என்னால் இகழ

முடியாது. பாரதிதாசன் தமிழ் இலக்கியத்தை எந்த அளவுக்கு நேசித்தார் என்பது தமிழ் இலக்கிய மாணவர்களுக்குத் தெரியும். பெரியார் அளவுக்கு பாரதிதாசனுக்கு கடவுள் மீது வெறுப்பு இல்லை. 'ஒரு கடவுள் உண்டு என்றும் உருவணக்கத்தை ஒழிப்போம்' என்றும் கூட பாரதிதாசன் பாடி இருக்கிறார். இதற்காக பாரதிதாசனைப் பெரியார் சினந்தும் இருக்கிறார். குமரகுருபரரை பாரதிதாசன் நேசித்தார். பாரதிதாசனிடம் இடம்பெற்ற வளமான தமிழில் குமரகுருபரனின் பாதிப்புக்கு இடம் உண்டு. வள்ளுவர், இளங்கோ என்று கற்றவர்கள் கடவுளை மூடத்தனம் என்று இகழ்ந்து விட முடியாது. கடவுள் என்பதை இவர்களின் வழியிலும் புரிந்து கொள்வது சரியாக இருக்கும். மனிதனின் வறுமையில் கடவுளுக்கு பங்கு இருக்க முடியாது. நாட்டில் அநீதி நடைபெறுவதை கடவுள் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. இப்படி இவர்கள் கருதினார்கள். கடவுள் இல்லை என்று இவர்கள் அடித்துப் பேசவில்லை.

மேலும் ஒரு உண்மை. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எனது அனுபவத்திற்குள் வந்த கடவுளை, நான் இல்லை என்று எப்படி மறுக்க முடியும். அது எவ்வளவு அற்புதமான பேரனுபவம். எல்லோருக்கும் இத்தகைய அனுபவம் வாய்ப்பதில்லை. என்னைத் தேடி கடவுள் வந்தார் என்றோ, என்னைக் கடவுள் கண்டு கொண்டார் என்றோ நான் பேச மாட்டேன். இப்படிப் பேசி என்னை ஒரு பெரியவனாக நிறுவுகிறேன் என்று சிலர் கருதியிருக்கக் கூடும். இப்படி ஒரு பொய்யனாக என்னால் இருக்க முடியாது. ஆகவே தான் எனக்குள் வந்த கடவுளுக்கு நான் தொடர்ந்து பொருள் காண, உண்மை காணத் தேடினேன். என் இளமைக்கால வாழ்க்கையை என் துயரங்களை ஆராய்ந்தேன். என் அனுபவத்தை புரிந்து கொள்ளும் வகையில் 'கார்லைல்' என்றும் வில்லியம் ஜேம்ஸ் என்றும் தேடிப் படித்தேன். தாகூரின் அனுபவங்கள் எனக்கும் வாய்த்த அனுபவங்கள். தாகூர் தன் சமயத்தை ஒரு கவிஞனின் சமயம் என்று கூறியதை என் அனுபவத்தின் மூலம் புரிந்து கொண்டேன். சமயம் என்பது மந்திரம் சொல்வதோ, சடங்குகள் செய்வதோ உருவங்களை வைத்து வழிபடுவதாகவோ இருக்க முடியாது என்பதை சித்தர்கள் வழியே எளிதாக புரிந்து கொள்ள முடியும். இயற்கையில், வானத்தில், சூரியனில், சந்திரனில், நெருப்பில், காற்றில் கடவுளை காண்பது என்பதில் உள்ள உண்மையை எவரும் புரிந்து கொள்ள முடியும்.

## 3

> பிரபஞ்சம் கணிக்கமுடியாத அளவுக்கு ஒரு பேரியக்கம். இதை கணிக்கவேண்டு மென்பது மனித உணர்வு. இப்படி கணிக்க முயன்ற ஐன்ஸ்டீன் கடவுள் உணர்வுக்கு ஆட்பட்டார்.

கடவுளைப் பற்றி பகுத்தறிவாளர்களோடு முரண்பட்டு, மார்க்சியரிடமிருந்து வேறுபட்டு நான் பேசுவதை வைத்து மறைமுகமாக கடவுள் நம்பிக்கையோடு தான் நான் இருக்கிறேன் என்று சில நண்பர்கள் என்னைப் பற்றிப் பேசி இருக்கிறார்கள். கடவுள் உண்டு என்று சொல்ல வேண்டும். அல்லது இல்லை என்று மறுக்க வேண்டும். இப்படி இரண்டு வகையிலும் இல்லாமல் கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம் என்று நான் சொல்வதை நண்பர்களால் ஏற்க இயல்வில்லை. அன்றியும் நான் விவாதிக்கிறபோது அறிஞர் இராதாகிருஷ்ணனைக் கீழ்கண்டவாறு மேற்கோள் காட்டுகிறேன். 'கடவுள் உண்டு என்று மெய்ப்பிப்பதும் கடினம். இல்லை என்று மறுப்பதும் கடினம்'. பிறகு ஒரு மேற்கோள். 'பிரபஞ்சத்தில் பல்வேறு அண்டங்களின் இயக்கம் பற்றி ஆராயும்பொழுது கடவுளைப்பற்றி உணர்வு கொள்ளாமல் இருக்க முடியாது'. இப்படிச் சொன்னவர் ஐன்ஸ்டீன்.

இப்படி எல்லாம் சிலரை மேற்கோள் காட்டி நான் விவாதிக்க வேண்டிய தேவை ஏன் ஏற்படுகிறது? இதனைப் பெரிய அறிஞர்கள் இப்படிச் சிலவற்றைச் சொல்லும் பொழுது இவர்கள் அளவுக்கு அறிவில்லாத நம்மைப் பொறுத்தவரை மிக எளிதாக கடவுள் அறவே இல்லை என்று அடித்துப் பேசுவது பற்றி நமக்குக் கொஞ்சமேனும் தயக்கம் வரவேண்டாமா? அப்படியானால் கடவுளைக் குறித்து இன்னும் ஆழமாகப் பார்க்க வேண்டும் என்பது தான் என் கருத்தே ஒழிய உண்டு அல்லது இல்லை என்ற எல்லைக்கு உடனே போய்விடக் கூடாது என்பது தான். இதைப் போலத்தான் கடவுள் என்ற நம்பிக்கையை தம் அளவில் முற்றாகக் கொண்டிருப்பதோடு கடவுள் நம்பிக்கையை கேள்விக்குட்படுத்த விரும்பும் ஒருவரை, அறிவற்றவர் என்றோ தமிழ்ப் பண்பாடு அறியாதவர் என்றோ இகழ்ந்து சொல்பவரோடும் எனக்கு விவாதம் உண்டு.

கடவுளைக் குறித்து எந்த அறிவும் ஆராய்ச்சியும் இல்லாமலும இவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். கடவுள் உண்டு என்று மெய்ப்பிப்பது கடினம் என்றும் நம்காலத்தில் கடவுளே ஒரு

மனிதராகப் பிறந்து வந்தாலும் அவர் நாத்திகம் தான் பேசுவார் என்றும் அறிஞர் இராதாகிருஷ்ணன் கூறி இருக்கிறார். நிலைமை இப்படி இருக்க சில சாதாரணக் கேள்விகளோடு கடவுள் உண்டு என்பதை சிலர் மெய்ப்பிக்கத் துணிந்து விடுவதை நாம் இப்படி மறுக்க முடியும். எது ஒன்றையும் படைக்க ஒருவர் வேண்டும். மண்பானையை படைக்க ஒரு குயவன் வேண்டும். பெற்றோர் இல்லாமல் நாம் இங்கு வந்துவிடுவதில்லை. இப்படி ஒரு தர்க்கம் செய்துப் பிரபஞ்சத்தையும் படைக்க ஒருவன் வேண்டும். பெரும் விஞ்ஞானிகளும் கண்டுபிடிக்காத இந்தப் பேருண்மையை எங்கள் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். இப்படி இவர்கள் விவாதிக்கிறார்கள. இந்த விவாதத்தை முறியடிப்பது மிக எளிது. பிரபஞ்சத்தை படைக்க ஒருவன் வேண்டுமென்றால் அவனைப் படைத்தது யார்? என்று கேள்வி எழுப்பியவுடன் இவருடைய தர்க்கம் முறிந்துவிடுகிறது?

பிரபஞ்சம் எப்பொழுதும் இருக்கிறது. இயங்குகிறது. தொடர்ந்து விரிந்து செல்கிற பிரபஞ்சம் பிறிதொரு காலத்தில் தனக்குள் சுருங்கிப் பந்து போல மாறி மாறி பிறகு அதன் முரண்பாட்டினால் மீண்டும் வெடித்து விரிவடையும். இந்தப் பிரபஞ்சம் இல்லாமல் போய்விடுவதில்லை. தொடர்ந்து இயக்கத்தில் இருக்கிறது.

கடவுள் என்பது மனிதனின் படைப்பு. விலங்குகளோ, பறவைகளோ கடவுள் என்பதை படைத்துக் கொள்வதில்லை. மனிதன் மட்டுமே கடவுளை படைத்துக் கொண்டாடி வணங்குகிறான். எப்படி படைத்தான் என்பது தான் நாம் கேட்க வேண்டிய கேள்வி.

இல்லாத ஒன்றைப் படைக்க முடியாது. இருப்பதை அழிக்க முடியாது என்பது இன்னொரு இயற்கை விதி. இதைக் கொண்டு எங்கோ இருக்கிற கடவுளைத் தான் தனக்குள் கண்டு கொண்டான் என்றும் விவாதிக்க முடியும். உண்மைதான் மனிதனுக்குள் கடவுள் என்ற உணர்வு எங்கிருந்து வந்தது? எப்படி வந்தது? இதற்கும் நாம் விடை காண வேண்டும். எத்தகைய உணர்வு கடவுளாக வெளிப்பட்டது. மனிதனுக்கும் கடவுளுக்கும் இப்படி ஒரு உறவு எப்படி ஏற்பட்டது. இவ்வகை கேள்விகள் நம் ஆய்வுக்குரியவை. சமய நம்பிக்கைகளிலிருந்து இந்த ஆய்வைச் செய்வது கடினம். இன்னும் ஒன்றை இங்குச் சொல்லலாம். பிரபஞ்சத்தின் பேரியக்கத்தை ஆராய்கிற போது ஐன்ஸ்டீனுக்குள் கடவுள்தன்மை என்ற ஒரு

உணர்வு ஏற்பட்டது. பிரபஞ்சம், கணிக்க முடியாத அளவுக்கு ஒரு பேரியக்கம். கணித்து விட வேண்டுமென்பது மனிதனின் அடக்க முடியாத ஓர் உணர்வு.

இந்தப் பேரியக்கம் ஒரு புதிராக தோன்றுகிறது. இந்தப் புதிரை உடனடியாக விடுவிக்க இயலவில்லை. ஐன்ஸ்டீனுக்குள் ஏற்பட்டது ஒரு மாபெரும் வியப்பு. விடை சொல்ல முடியாத ஒரு புதிர் உணர்வு. இப்படித்தான் அணுவுக்குள் ஆய்ந்து செல்கிற போதும் ஒரு மாபெரும் புதிர். இங்கு மனிதன் தடுமாறுகிறான். என்னவென்று புரிந்து கொள்ள இயலாத நிலை. அது கடவுளாகத்தான் இருக்க வேண்டும் என்பதும் கூட இல்லை. புதிர் என்ற அளவில் இவனால் திரும்பி வரவும் இயலாது. எக்ஸ் என்று பெயரிட்டு பின்னர் யாராவது எப்பொழுதாவது இந்தப் புதிரை விடுவிக்கக்கூடும் என்றும் இருந்து விட முடியவில்லை. இது மனிதனின் உண்மையான துயரம். கேள்வி.

புத்தரைக் கேட்டால் அவர் இப்படி பதில் சொல்லுகிறார். அது எதுவாகவோ இருக்கட்டும். இப்பொழுது உன்னால் தீர்க்க முடியாது. உடனடியாக உனக்கு இருக்கும் துயரங்கள் பற்றி ஆராய்ச்சி செய். துயரங்களைத் தீர்க்க வழி கண்டுபிடி. இதைத்தான் இப்பொழுது உன்னால் செய்ய முடியும். கடவுள் என்று சொல்லி அதற்கு ஒரு உருவம் கொடுத்து அப்புறம் கோயில் கட்டி, புரோகிதரை வைத்து மந்திரம் சொல்லி பல மூடத்தனங்களை தொடர்ச்சியாக செய்து உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு. இதன் மூலமாகவும் உடன் துயரங்களைப் பெருக்கிக் கொள்ள முடியுமே ஒழிய தீர்த்துக் கொள்ள முடியாது. ஆகவே அந்த இருட்குகையிலிருந்து வெளிச்சத்திற்கு வா. இங்குள்ள உலகத்தைப் பார். மனிதர்களைப் பார். இங்குள்ள சிக்கலைப் புரிந்து கொள். இப்படித்தான் புத்தரால் கூறமுடியும் பெரியாரும் இப்படித்தான் பேசினார். யாரையோ நம்பி, எதனையோ செய்து பயன் இல்லை என்பது இவர்களின் கருத்து. மீண்டும் என்னைப் பற்றிய ஐயம் குறித்து நண்பர்களின் கேள்விக்கு வருகிறேன். நான் கடவுளை மறைமுகமாக வைத்துக் கொண்டு இருக்கிறேனா? வழிபடுகிறேனா?

ஒரு சமயம் என் இளைய மகன் கடுமையான மனநோய்க்கு ஆளான போது எனக்குள் ஏற்பட்ட வேதனைக்கு அளவில்லை. வேதனை மிக்க நிலையில் கடவுள் என்ற நம்பிக்கை இருந்தால் கூட நல்லது என்று நினைத்தேன். அந்த நம்பிக்கை எனக்குள் வரவில்லை. ஒரு வேளை கடவுள் என ஒருவர் இருந்து அவரை நம்பி என் துயரத்தை அவர் பொறுப்பில் விட்டு விட்டால் அவர் தீர்த்துத்

தருவார் என்று பிறர் நம்புவதைப் போல் என்னால் நம்பமுடியவில்லை. என் மகனின் மனநோய்க்கான காரணம் என்ன என்பதை நான் விடாப்பிடியாகத் தேடிக்கொண்டு இருந்தேன். ஓரளவு கண்டுபிடித்தேன். மனநோய் மருத்துவரிடம் சென்றேன். மருத்துவர் சில மருந்துகளைத் தந்தார். மருந்துகள் என் மகனது மனச்சிக்கலின் கடுமையைக் குறைத்தன. என் மகனது மனநோய்க்கான மூலக்காரணம் பற்றி மருத்துவர் கவலைப்படவில்லை. ஆராய்ந்து கண்டுபிடிக்கவும் இல்லை. ஓரளவுக்கு நான் புரிந்து கொண்டேன். இது மனிதனின் அடிப்படையான சிக்கல். தத்துவச் சிக்கல் - மரணம் ஏன் ஏற்பட வேண்டும் என்பதான சிக்கல். இதுபற்றி நான் இன்னொரு சந்தர்பத்தில் சொல்ல வேண்டும். நோயின் கடுமை ஒருவாறு தணிந்தால் போதும். அப்புறம் மெல்ல மெல்ல என் மகன் இயல்பான நிலைக்கு வந்துவிட்டான். என் இளைய மகனை இன்றைக்குப் பார்க்கிறேன். எது மனிதனின் அடிப்படைத் தத்துவச் சிக்கல் என்று கண்டேனோ அதை ஒருவாறு இப்பொழுது ஆராய்ந்து கொண்டிருக்கிறான். அவனுக்குள் ஒரு கலைஞன் படைப்பாளி - மெய்யியலாளன் வளர்ச்சி பெற்று வருவதைப் பார்க்கிறேன். இந்தச் சிக்கல் என்னளவிலும் தீர்ந்தபாடில்லை. அவன் மட்டுமே தீர்த்துக் கொள்ள முடியும் என்று நம்பவில்லை. இன்னொன்றையும் இங்கு நான் சொல்ல வேண்டும்.

கண்பார்வை எனக்கு அறவே இல்லையாகிவிடும் என்ற நிலை உறுதிப்பட்டு வருகிற போது இரண்டு சந்தர்ப்பங்களில் இரு நண்பர்கள் எனக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். ஒருவர் கிறித்துவ நண்பர். என்னோடு அமர்ந்து கர்த்தரை நோக்கித் தான் பிரார்த்தனை செய்வதாகவும் அவரோடு நான் ஒத்துழைக்க வேண்டும் என்று கூறினார். 'ரெட்டினா' பாதிப்பை எவராலும் சரிப்படுத்த முடியாது. வேண்டாம் என்று கூறியும் அவர் பிரார்த்தனை செய்தார். உருக்கமாகப் பிரார்த்தனை செய்தார். நான் அமைதியாக இருந்தேன். எதுவும் நேர்ந்து விடவில்லை. நெடுநேரம் என்னோடு இருந்துவிட்டு சென்ற நண்பர் பிறகு திரும்பி வரவே இல்லை. அந்த அருமையான நண்பரை நான் இழக்க நேர்ந்தது ஒரு வருத்தம்.

இன்னொரு நண்பர் கல்லூரியில் படித்த காலத்திலிருந்து அவர் எனக்கு நெருக்கமான நண்பர். மார்க்சியக் கல்வியில் தேர்ந்தவர். சோதிடம் என கற்கத் தொடங்கி முழு அளவில் அதில் ஈடுபட்டவர்.

அவரை என்னால் முழுமையாக நம்ப முடியும் அந்த அளவுக்கு நல்லவர். மேல்மருவத்தூர் சித்தரிடம் அளவு கடந்த நம்பிக்கை உடையவர். இவர் என்னைச் சந்தித்து நான் மேல்மருவத்தூருக்கு வரவேண்டும் என்றும் சித்தரின் முன்னிலையில் எனக்குக் கண்பார்வை திரும்பக் கிடைப்பது உறுதி என்றும் விடாப்பிடியாக வற்புறுத்தினார். 'ரெட்டினா'வின் பாதிப்பை யாரும் சரிபடுத்திவிடமுடியாது என்று அவருக்கும் விளக்கினேன். தொடர்ந்து அவர் வற்புறுத்திய நிலையில் 'சரி நான் வருகிறேன்' ஆனால் சித்தரை வணங்கி இப்படிச் செய். அப்படிச் செய் என்று நீங்கள் எனக்கு எதுவும் சொல்லக்கூடாது. சித்தர் முன்னிலையில் அமர்கிறேன். யாராலும் எனக்கு கண்பார்வை திரும்பக் கிடைக்காது. இதற்காக நீங்கள் வருத்தப்படக் கூடாது என்று கூறினேன். என்னைத் திருத்த முடியாது என்று கூறிவிட்டு நண்பர் புறப்பட்டார். மீண்டும் அவரை நான் சந்திக்க நேர்ந்தாலும் அப்புறம் சித்தரைப் பற்றி அவர் பேசுவதில்லை.

கடவுளிடம் – அவர் இருந்தாலும் இல்லையென்றாலும், நான் எதையும் எதிர்பார்க்கவில்லை. அவர் இருப்பதாக நம்புபவரோடு எனக்கு எதிர் விவாதமில்லை. என் மனைவி கடவுள் நம்பிக்கையோடு எல்லாவற்றையும் செய்கிறார். நான் குறுக்கே செல்வது இல்லை. 60 வயது நிறைவின் போது நான் எவ்வளவோ வேண்டாம் என்று தொடர்ந்து வற்புறுத்திய நிலையிலும், திருக்கடவூருக்கு நாம் செல்லத்தான் வேண்டுமென்று விடாப்பிடியாக வற்புறுத்தினார். வேறு வழியில்லாமல் என்னோடு இவ்வளவு காலமாக வாழ்கிற என் மனைவிக்கு மரியாதை உடையவனாக இருக்க வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காகச் சென்றேன். என் மக்களும் உறவினர்களும் எங்களோடு வந்தனர். திருக்கடவூரில் என்னையும், என் மனைவியையும் உட்கார வைத்து ஒரு பார்ப்பனரைக் கொண்டு சில சடங்குகளைச் செய்தார்கள். நான் எல்லாவற்றையும் ஒரு வேடிக்கைப் பார்ப்பவனைப் போல இருந்து ரசித்துக் கொண்டிருந்தேன். கனமான, கம்பீரமான குரலில் அந்த ஐயர் மந்திரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். கங்கை, காவிரி, கோதாவரி எனத் தொடர்ந்து சொன்னார். எனக்குள் பெரிய சித்திரம் பார்த்துக் கொண்டிருந்தேன். என் மகன் நிறைய படங்கள் எடுத்தார். அந்தப் படங்களை யாராவது பார்க்க நேர்ந்தால் கன்றாவியாக இருக்கும்.

இதையெல்லாம் தெரிந்து கொண்ட நண்பர்கள் சிலர் கடிந்து கொண்டார்கள். பத்திரிக்கையிலும் எழுதினார்கள். நண்பர்கள் என்னை விமர்சனம் செய்வதையோ திட்டுவதையோ நான் குற்றம் சொல்ல மாட்டேன். என் அளவுக்கு குறைந்த அளவுக்கேனும் இருக்கிற குடும்ப உறவுகளை வெட்டிக் கொள்ள முடியவில்லை. என் மனைவியோடு போராடி அவரை என்னால் முறியடிக்க இயலாது என்னிலும் அவர் ஆற்றல் உடையவர். சிலர் என்னையும் ஒதுக்கிவிட்டு தனது நம்பிக்கையின் வழியே உறுதியாகச் செல்கின்றனர். இவர்களின் மன உறுதியை நான் பாராட்டுகிறேன்

4

> நாம் கோவிலில் வைத்து வணங்கும் தெய்வங்கள் நினைத்துப்பார்த்தால் நம் முன்னோர்கள். ஆண்டில் ஒரு நாள் இவர்களுக்கு படையலிட்டு வணங்கும் சடங்கில் தவறில்லை

நம் வாழ்வில் இன்றியமையாத முறையில் இடம்பெறும் சடங்குகளுக்கும் தெய்வத்திற்கும் இடையில் உள்ள உறவுகள் குறித்தும் நாம் பார்க்க வேண்டும். சில நிகழ்ச்சிகள் இப்பொழுது நினைவில் முன்னுக்கு வருகின்றன. அவற்றில் ஒன்று. எங்கள் வீட்டின் கீழ்ப்பகுதியில் குடியிருந்த ஒரு பெரியவர் - நல்ல வைணவர். ஆழ்வார்ப் பாடல்களை சில சமயம் அவர் பாடிக்கொண்டு இருப்பார். கணவனை இழந்த மகளோடு அவர் குடியிருந்தார். என்னைப் பெரிய படிப்பாளி என்று அவர் நம்பினார். ஒரு நாள் அவர் என்னைப் பார்க்க வந்து தன் சந்தேகத்தை நான் தெளிவுபடுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். என்னை விட வயதில் பெரியவர். தன் முன்னோருக்கு ஆண்டுதோறும் ஆடி அமாவாசை திதி செய்கிற பழக்கத்தை அவரும் கடைப்பிடித்து வருகிறார். சிலவற்றை முன்னோருக்கு அன்று நாம் படைக்கிறோம். அந்தப் படையல் முன்னோருக்குச் சேருகிறதா என்பது அவர் சந்தேகம். எனக்கு இதன் உண்மை தெரிந்திருக்கும் என்று நம்பி என்னைக் கேட்டார். இத்தகைய சடங்குகளில் எனக்கும் நம்பிக்கை இல்லை. இதில் புரோகிதருக்கு இடமிருக்க வேண்டியதில்லை. இத்தகைய சடங்குகள் மூலம் இத்தகைய புரோகிதர்கள் நம்மை வசப்படுத்திக் கொள்கிறார்கள் என்றும் நான்

கருதுகிறேன். புரோகிதரை வைத்துச் செய்யாமல் வீட்டிலேயே முன்னோருக்குப் படையல் இடுவதை என் மனைவியும் செய்கிறார். என் தந்தையாருக்கும் இன்னும் சில முன்னோர்களுக்கும் இப்படி வழிபாடு செய்வது என் மனைவியின் பழக்கம்.

பெரியவர் கேட்டவுடன், நானும் இந்தச் சடங்கு தேவைதானா? என்று ஒரு கணம் சிந்தித்தேன். நாம் இடும் படையல் முன்னோருக்குச் சென்று சேருகிறதோ இல்லையோ குறிப்பிட்ட அந்த நாளில் வீட்டைத் தூய்மை செய்து குளியல் முதலியவற்றை முடித்துக் கொண்டு இறந்த முன்னோரின் நினைவாகவே இருந்து படையல் இட்டு வழிபாடு செய்கிறோம். இப்போது சில மணி நேரமாவது நம் முன்னோரை நினைவு கூர்கிறோம். அந்த முன்னோர் இல்லாமல் நாம் இல்லை.

என்னைப் பொறுத்த வரை என் தந்தையாரைப் பற்றி எனக்கு நல்ல நினைவுகள் உண்டு. அவர் எங்களிடம் மிகக் கடுமையாக நடந்து கொள்வார். எனினும் வியக்கத் தகுந்த ஆளுமை உடையவர் அவர். ஊருக்குள் அவருக்கு நல்ல மரியாதை உண்டு. குடும்பங்களில், குடும்பங்களுக்கு இடையில் ஏதாவது வழக்கு என்றால் அதைத் தீர்த்து வைக்க இவரை அழைத்துச் செல்வார்கள். எங்களிடம் என்ன தான் கடுமையாக நடந்து கொள்வது போல் தோன்றினாலும், அவர் நெஞ்சில் சுரக்கும் கனிவை சில சமயங்களிலேனும் நான் அனுபவித்திருக்கிறேன். அவரது அற உணர்வு என்னைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. அவர் எனக்குள் இன்னும் வாழ்வதாகவே நான் உணர்கிறேன். அந்த அற உணர்வு எனக்கு அவர் தந்த நன்கொடை.

என் தந்தையாரை மட்டுமல்லாமல் என் பாட்டனாரையும் நினைவுக் கூர்கிறேன். அவரது அற்புதமான ஆளுமைக்கு நிகர் சொல்வது கடினம். ஊருக்குள் 'பிளேக்' நோய் பரவத் தொடங்கிய போது எங்கள் எல்லோரையும் எங்கள் அத்தையின் ஊருக்கு அனுப்பிவிட்டு அவர் மட்டுமே வீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார். பெரும்பாலும் ஊரை எல்லாரும் காலி செய்துவிட்டனர். எந்த வீட்டிலும் சில பிணங்கள் விழாமல் இல்லை. என் பாட்டனாரின் சில நண்பர்களும் பிணமானார்கள். அப்படி இறந்தவரைத் தன் தோளில் சுமந்து சென்று இடுகாட்டில் குழி தோண்டி புதைத்து விட்டு வந்திருக்கிறார். இப்படிச் சிலரை அடக்கம் செய்த அவர் பிறகு தானும் பிணமானார். மன உறுதியிலும் அருள் தன்மையிலும் நிறைவாக வாழ்ந்தவர் அவர்.

பெரியவர் தன் சந்தேகத்தைத் தெரிவித்த போது என் முன்னோரை நினைத்துக் கொண்டேன். என் வீட்டிலும் அன்று முன்னோர் வழிபாடு. இப்படி நம் முன்னோரை அந்த ஒரு நாளேனும் நினைத்து மனம் நெகிழ்வதற்கான வாய்ப்பை நாம் எப்படித் தவற முடியும்? பெரியவருக்கு இப்படி நான் சொன்னேன். "அய்யா, உங்கள் சந்தேகத்திற்கு எனக்கு விடை தெரியவில்லை. நாம் இடும் படையல் முன்னோருக்குச் சென்று சேரும் என்ற நம்பிக்கை என்னளவில் இல்லை. எனினும் நம் முன்னோரால் தான் நாம் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமக்கான வாழ்வில் சில வாய்ப்புக்களை நமக்கு ஏற்படுத்தித் தந்தவர் முன்னோர். நம் குடும்பத்தில் நமக்குத் தெரிந்த அளவில் முன்னோர் என்ற முறையில் ஒரு சிலரையே நாம் அறிவோம். நினைத்துப் பார்த்தால் எத்தனை காலத்து முன்னோர்களின் தொடர்பில் / உறவில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இப்படி நினைத்துப் பார்ப்பதற்கான வாய்ப்பைத் தருகிறது இந்த நாள். நம்மையும் நமக்கு அடுத்த தலைமுறையினர் நினைத்துப் பார்ப்பார்கள். நெடுங்காலத் தொடர்பில் நாமும் சில கண்ணிகள். நாம் கோவில்களில் வைத்து வணங்கும் தெய்வங்கள் கூட இப்படி ஏதோ ஒரு காலத்தில் நம் முன்னோராக இருந்தவர் தான்."

நான் கூறிய பதில் அந்தப் பெரியவருக்குள் ஏதோ சில உணர்வுகளை ஏற்படுத்தி இருக்க வேண்டும். ஓரளவுக்கேனும் மன நிறைவோடு அவர் சென்றார். உடனடியாக எனக்கு இன்னொரு நினைவு. நான் இரண்டு வயதாக இருந்த பொழுது எனக்கு முன் பிறந்த என் தமக்கை இறந்துவிட்டாள். அவள் சிவந்த நிறமுடையவளாக இருந்தாள் என்பது நினைவு. இப்பொழுது எனக்கு வயது 70. முதலில் பிறந்த அந்தப் பெண் குழந்தை நினைவாக என் தாயார் ஆண்டு தோறும் தவறாது திதி செய்து கொண்டிருப்பது எனக்குப் பெரும் வியப்பு. இப்படிக் கூட மன உணர்வு ஒருவருக்கு இருக்க முடியுமா? முதலில் பிறந்த அந்தப் பெண்ணை இன்னும் நினைத்து என் தாய் மனம் குமுறுகிறார். 5 வயதாக இருக்கும் பொழுது காய்ச்சல் கண்டு இறந்து விட்டாளாம். அவளை என் தாயாரால் இன்னும் மறக்க முடியவில்லை. என் தாய் என்று மட்டுமல்ல. இப்படி எத்தனையோ நினைவுகளோடு மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இறந்தோர்களை வழிபடுகிறார்கள். இறந்தவர் நமக்குத் தெய்வமாகிறார். வியக்கத்தகுமோர் புதிர்

உணர்வு இது. பகுத்தறிவு கொண்டு இதை ஒதுக்கினோம் என்றால் வாழ்வின் ஓர் அற்புத உணர்வை, அழகிய உணர்வை இழந்து விடுவோம். இறந்தவரைப் பற்றிய நினைவுகளோடு மட்டுமா நாம் வாழ்ந்திருக்கிறோம். நம் வாழ்வோடு கலந்தவர்களை, நிறைந்தவர்களை நம்மால் மறக்க முடியுமா? இறந்து போன என் நண்பர்கள், ஆசிரியர்களை, ஊர்ப்பெரியவர்களை நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சம் பதறுகிறது. மரணத்தைப் பற்றிய அச்ச உணர்வு எனக்குள் இருந்து என்னை பதறவைப்பதாக நான் கருதவில்லை. ஏதோ ஒரு உணர்வு என் புரிதலுக்கு அகப்படாத உணர்வு. மனிதனுக்கு மட்டுமே வாய்த்திருக்கிற உணர்வு. இதற்குப் பெயரிட்டு வகைப்படுத்த எனக்கு இயலவில்லை.

இன்னும் ஒரு நினைவை இங்கு நான் பதிவு செய்ய விரும்புகிறேன். என் இனிய நண்பர் ஒருவர் மார்க்சியத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவர். கோவையில் புகழ்பெற்ற ஒரு ஆலையில் தொழிலாளியாகவும், குறிப்பிட்ட ஒரு தொழிற்சங்கச் செயலாளராகவும் பணிபுரிபவர். நேர்மையும் மன உறுதியும் மிக்கவர். மார்க்சிய லெனினிய இயக்கமொன்றில் தொடர்ந்து உறுதியாக செயல்படுபவர். அவர் ஒரு கவிஞரும் கூட. புத்தகங்களை ஏராளமாக வாங்கிப் படிப்பவர். என்னோடு நெருக்கமானவர்.

சுமார் இரண்டாண்டுகளுக்கு முன்பு அவர் தந்தையார் இறந்துவிட்டார். தந்தையின் சவ அடக்கத்திற்கு தோழர்களும் வந்திருந்தனர். சவ அடக்கத்தின் போது மகன் கொள்ளி வைக்க வேண்டும். 'கொள்ளி' வைப்பதற்கு முன்பு மகன் மொட்டை அடித்து முகம் மழிக்க வேண்டும். இவர் கட்சித் தோழர் என்பதனால், இப்படிப்பட்ட சடங்குகளை தவிர்க்க வேண்டுமென்று தோழர்கள் அறிவுரை கூறினர். உறவினர்களும் ஊர் மக்களும் அறவே ஒப்புக் கொள்ளவில்லை. 'உனக்கு கட்சிதான் பெரிது என்றால் உறவை நீ வெட்டிக் கொள்ள வேண்டும். சவ அடக்கத்திலும் நாங்கள் கலந்து கொள்ள முடியாது' என்று அவர்கள் உறுதியாகக் கூறிவிட்டனர். என் நண்பருக்கு கடுமையான மன நெருக்கடி. தோழர்களையும் மறுக்க முடியாது. ஊரையும் உறவினரையும் பகைத்துக் கொள்ள முடியாது. கடைசியாக என் நண்பர் ஒரு முடிவுக்கு வந்தார். முகத்தை மட்டும் மழித்துக் கொண்டு சடங்கு செய்வதை உறவினர்கள் ஒருவாறு ஒப்புக் கொண்டனர். கட்சித் தோழர்கள் வெளியேறினர். கட்சியிலிருந்து அவரை நீக்கி வைத்தனர்.

மனக்கலவரத்தோடு என் நண்பர் சில மாதங்கள் கழித்தார். கட்சிக்கும் இவரது பணி பெரிதாகத் தேவைப்பட்டது. மீண்டும் கட்சிக்கான பணிகளில் ஈடுபட்டார். மேலும் கொஞ்ச காலம் கழித்து அவரை கட்சியில் சேர்த்துக் கொண்டார்கள்.

நம் சமூகத்தில் நெடுங்காலமாக தொடர்ந்து வருகிற மூடநம்பிக்கைகளைத் தகர்க்க வேண்டும் என்பது ஒரு வகையில் பகுத்தறிவுக்கு ஒத்த கொள்கை என்பதில் ஐயமில்லை. அதே சமயம் நாம் கடைப்பிடிக்கும் எத்தனையோ சடங்குகளோடு புரோகிதர்களுக்கு உறவு இல்லை. சவ அடக்கத்திற்கு புரோகிதர் எவரும் வருவதில்லை. வரவும் மாட்டார்கள். அன்றியும் இவ்வகைச் சடங்குகள் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தொடங்கி நம் மக்கள் செய்து வரும் சடங்குகள். ஒருவர் இறந்தவுடன் அப்படியே எடுத்துக் கொண்டு போய் நாம் அடக்கம் செய்வதில்லை. பலமணி நேரம் வீட்டில் வைத்து உறவினர்கள் முதலியவர்களை அழைத்துக் கண்ணீர் விட்டுக் கதறி அழுது இறந்தோரைப் பற்றிய நினைவுகளைச் சொல்லி மனத்தைத் தேற்றிக் கொள்வதற்கு பல மணி நேரம் தேவைப்படுகிறது. இறந்தவரை குளிப்பாட்டி அப்புறம் மலர்மாலைகள் இட்டு தேரில் வைத்து மரணத்தைக் கூட கொண்டாட்டம் என செய்து அப்புறம் எடுத்துச் சென்று அடக்கம் செய்கிறோம். சவ அடக்கத்தின் போது சில சாதியருக்கு சில வகையான உரிமைகள் தரப்பட்டு இருக்கின்றன. இதுப்பற்றி இன்று சில சீர்திருத்தங்களை நாம் விரும்புகிறோம். தேவையான திருத்தங்கள் அல்லது மாற்றங்கள். எந்த ஒரு சமூகத்திலும் இப்படி ஆதிகாலம் தொட்டே சில சடங்குகள் இருக்கின்றன. பகுத்தறிவு என்ற ஒரு பார்வையில் இவற்றை ஒதுக்கி விடுவது சாத்தியமில்லை. புரோகிதரோடு நமக்கு வழக்கு என்பதனாலேயே நம் மக்களின் சில சடங்குகளோடு நாம் முற்றாக முரண்படுவது பற்றி நாம் சிந்திக்கத்தான் வேண்டும். வாழ்விலும் திருமணம், குடும்பம் என்றெல்லாம் எத்தனையோ வகையான சடங்குகள். மேடைப்பேச்சு சிலவற்றிலும் சடங்குகள். ஆகவே சடங்குகள் பற்றி நமக்குக் கொஞ்சம் ஆய்வு தேவை.

## 5

> உள்ளுணர்வின் பேராற்றலை ஒரு ஓவியன் அறிவான். படைப்பாளிக்கு இதுபுரியும். கணிதவியல் ஆய்வாளனுக்கும் இது புரியும். பிராய்டு கூறிய ஆழ்மனதிற்கு அப்பால் செல்லும் அனுபவங்களும் நமக்கு வாய்க்கின்றன.

உலகத் தோற்றம், உயிர்களின் தோற்றம், மனித வரலாறு முதலியவை குறித்து மார்க்சியத்துக்கு உறுதியான கருத்துக்கள் பல உண்டு. பிரபஞ்சத்தின் இயக்கம் குறித்தும் அனுக்கள் முதலிய இயக்கங்கள் குறித்தும், தொடர்ச்சியான ஆய்வுகளுக்கும் இடமுண்டு என்பதை மார்க்சியர் பார்ப்பதில்லை. ஆயினும் இவ்வகை இயக்கத்தின் எந்த ஒரு கட்டத்திலும் கடவுள், ஆன்மா போன்ற புலன் கடந்த இயக்கம் என்பதற்கு இவர்கள் இடம் தருவதில்லை. உளவியல் தொடர்பான பிராய்டு முதலியவர்களின் கருத்தினங்களுக்கு இவர்கள் முக்கியத்துவம் தருவதில்லை. மதம், கலாச்சாரம், கலை இலக்கியங்கள் முதலியவற்றை மேல் கட்டுமானத்தின் பகுதிகளென்றும் பொருளியல் சார்ந்த அடிக் கட்டுமானத்தின் மீது இவை ஆதிக்கம் செலுத்த முடியாது என்றும் மார்க்சியர் உறுதியாகக் கூறுகின்றனர். மனிதனின் உள்ளுணர்வு என்பதை இவர்கள் ஏற்பதில்லை. பண்பாடு, அறிவியல், அழகியல் என்பவை நிலக்கிழாரியம், முதலாளியம், சோசலிசம் போன்ற சமூக கட்டமைப்பின் மாற்றங்களுக்கு ஒத்த முறையில் மாறுவன என்பதைத் தவிர இவற்றில் எல்லாக் காலத்திற்கும் உரிய நிரந்தரமான கூறுகள் இருக்க முடியாது என்றும் இவர்கள் நம்புகின்றனர்.

மார்க்சியம் என்ற கருத்தினங்களில் இவ்வகைத் தொகுப்போடு பெரும்பாலான மார்க்சியர் முரண்படுவதற்கு இல்லை என்ற போதிலும் இவ்வகை கருத்தினங்களில் முழு முற்றான நம்பிக்கையோடு இருப்பதனால் மட்டுமே ஒருவரை மார்க்சியர் என்று உறுதிப்படுத்த இயலாது என்பது என் கருத்து. மதம் என்ற ஒன்றைக் குறித்தே கூட மார்க்சிடம் இருக்கிற தெளிவு மார்க்சியர் என்று தம்மை நம்புகிற பலரிடத்தில் இல்லை. தத்துவம், கலாச்சாரம், கலை இலக்கியங்கள் முதலிய கருத்தினங்களில் மார்க்சிய வாய்ப்பாடுகளிலிருந்து முற்றிலும் அல்லது பெருமளவு வேறுபடுவதற்குக் கூட மார்க்சியத்தில் இடமுண்டு. மார்க்சியத்தை முற்றாக மறுக்கிற பிறவகைக் கருத்தியல்களோடு தொடர்ச்சியான உரையாடல் நிகழ்த்துவதன் மூலம்தான் மார்க்சியரும் தம்மை

வளப்படுத்திக் கொள்ள முடியும். மார்க்சின் காலத்தில் இருந்தே கூட இதற்கான தேவை தொடர்ந்து இருந்தது என்பது உண்மைதான் என்ற போதிலும் சோவியத் ஒன்றியத்தின் தகர்விற்குப் பிறகு இவ்வகையான உரையாடலுக்கான தேவை பெருமளவு அதிகரித்திருக்கிறது. இது குறித்து இங்கு பேசுவதற்கு இடமில்லை எனினும் சமயம், படைப்பு குறித்த என் அனுபவத்தின் மூலம் சிலவற்றை இங்கு நான் கூற வேண்டும். கடவுள் என்பதை ஒரு கருத்தாக்கம் என்று நான் விடாப்பிடியாகக் கூறி வருகிறேன். மதம் என்பது குறித்தும் இப்படி நான் பேசி வருகிறேன். மதத்தினுள்ளும் நடைபெறுவது வர்க்கப் போராட்டம் என்ற எங்கெல்சின் கருத்திலுள்ள தெளிவை நான் எடுத்துரைக்கிறேன். அதே சமயம் மதம் என்பதனுள் செயல்படும் புரோகிதத்தை நான் முற்றாக மறுக்கிறேன். இப்பொழுது வேறு சிலக் கூறுகள் பற்றி இங்கு பேசுவது பொருத்தம் எனக் கருதுகிறேன்.

உள்ளுணர்வு என்பது பற்றி முன்பே குறிப்பிட்டேன். இது குறித்து காலங்காலமாக எத்தனையோ பேர் கூறி உள்ளனர். நாளை என்ன நடைபெறும் என்பதை இன்றே முன்னுரைக்கும் சிலரை நாம் அறிவோம். தொலைவில் நடப்பதை இங்கிருந்தபடியே கூறும் சிலரையும் நாம் அறிந்துள்ளோம். கனவின் வழியேயும் சில உண்மைகள் நமக்குத் தெரிய வருகின்றன. அறிவியல் அறிஞர்கள் என்பவர்கள் கூட உள்ளுணர்வு வழியே அறிவியல் உண்மைகளை அறிந்திருக்கின்றனர். இவை பற்றியெல்லாம் பதிவுகள் உள்ளன. நான் இங்கு விவாதிக்க வேண்டியதில்லை.

கைரேகையைப் பார்த்து சில வியக்கத்தக்க உண்மைகளை வெளிப்படுத்துகின்றனர். பிறந்த தேதி முதலியவற்றைக் கொண்டும் உண்மைகளைக் கூறுகிறார்கள். சோதிடம் பற்றியும் நாம் முற்றாக மறுக்க முடியாது. இவை குறித்தெல்லாம் நானும் சில ஆதாரங்களோடு இங்கு குறிப்பிட முடியும். இவை கட்டுக்கதைகளும் இல்லை. இன்னும் சிலவற்றை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். என் கைரேகையைப் பார்த்து ஒரு பெரியவர் கூறியபடியே அடுத்த இரண்டு மாதத்திற்குள் இலக்கியவாதி என்ற முறையில் எனக்கு ஒரு பெரும் பரிசு கிடைத்தது. என் பிறந்த தேதி மாதம் ஆண்டு ஆகியவற்றின் கூட்டுத் தொகை வைத்து குறிப்பிட்ட இந்த தேதிகளில் தான் என் வாழ்க்கையில் முக்கியமான சில நிகழ்வுகள் நேர்ந்திருக்கும் என்று ஒரு பெரியவர் கூறியதன்படி நானே

நினைத்துப் பார்த்த பொழுது எனக்குள் வியப்பும் அதிர்ச்சியும் அடைந்தேன்.

என் உறவினர் ஒருவர் இங்கிருந்து சுமார் 300 கிலோமீட்டருக்கு அப்பால் கோவிலில் இருந்த ஒரு பெண் சோதிடரிடம் என் பெயர் சொல்லிக் கேட்டபொழுது, இப்பொழுது அவருக்குக் கண் பார்வை இல்லை என்று கூறியிருக்கிறார். எனக்கு மிக நெருக்கமுள்ள - மார்க்சிய கட்சி சார்ந்த நண்பர் ஒருவர் தன் திருமணத்திற்கு முன்னர் ஒரு சோதிடர் தன்னைப்பற்றி கூறிய ஒரு உண்மையை என்னிடம் அதிர்ச்சியோடு சொன்னார். ஊருக்கு வெளியில் உள்ள ஒரு பாழடைந்த மண்டபத்தில் நண்பர்களோடு கூடி இருந்து சமூகத்தின் எதிர்காலம் குறித்துத் திட்டமிடுவதாகவும் இந்தக் கூட்டத்திற்கு வரும் ஒரு பெண்ணை இவர் பெரிதும் விரும்புவதாகவும் அந்த சோதிடர் கூறியது இவருக்கு அதிர்ச்சி அளித்திருக்கிறது. எனக்குத் தெரிந்த காவல் துறையில் பணியாற்றும் ஒருவர் தன்னைப் பொறுத்த நிகழ்ச்சிகள் பலவற்றை முன்னரே தன் கனவுகளில் கண்டபடியே நிகழ்ந்தன என்று கூறினார்.

நண்பர்களோடு அமர்ந்து இப்படிச் சிலவற்றை ஒருவர் சொல்லத் தொடங்கினால் உடனே பிற நண்பர்களும் தம் அனுபவத்தில் இருந்தும் பிறரிடம் கேட்டவற்றிலிருந்தும் இப்படி நிறைய சொல்வதை நம் அனுபவத்தில் அறிந்திருக்க முடியும். இவ்வகை அனுபவத்திலிருந்து நாம் என்ன அறிகிறோம்? நம் புலனறிவுக்கும் அப்பால், தொலைவிலோ, எதிர்காலத்திலோ, நமக்கோ, வேறு சிலருக்கோ, நிகழ்ந்த, நிகழும், நிகழவிருக்கும் சில நிகழ்வுகள் உள்ளுணர்வின் வழியே அல்லது கைரேகை முதலியவற்றின் வழியே நமக்குத் தெரிகின்றன. ஐம்புலன்களோடு நாம் வாழ்கிறோம். பகுத்தறிவோடு நாம் வாழ்கிறோம். இவற்றுக்கு அப்பாலான இன்னொன்றின் தொடர்பிலும் நாம் இருக்கிறோம். உள்ளுணர்வு எனப்படும் இந்தத் திறன் சிலருக்குள் கூடுதலான ஆற்றலோடு செயல்படுகிறது. மார்க்சியர் என்றும், பகுத்தறிவாளர் என்றும் நம்பும் சிலருக்கும் இத்தகைய உணர்வுகள் உள்ளன. ஒரு படைப்பாளி இவ்வகை உள்ளுணர்வு ஆற்றலோடு செயல்படுவதை எந்த ஒரு படைப்பாளியும் உணர முடியும். நமக்குள் ஏதோ ஒரு புள்ளி தெரிகிறது. எழுதத் தொடங்குகிறோம் அல்லது வரையத் தொடங்குகிறோம். நாம் அறிய முடியாத ஒரு படைப்பியக்கத்தினுள் நாம் செல்கிறோம்.

ஒரு வகையில் தன்னை மறந்த நிலையில் எழுதுகிறோம் வரைகிறோம் அல்லது பாடுகிறோம். முன்னர் அறியாத எல்லைகளுக்குள் செல்கிறோம். ஒரு அறிவியலாளனும், ஒரு கணிதவியலாளனும் இத்தகைய பயணத்திற்குள் செல்ல முடியும். புதிய உண்மைகளைக் காண முடியும். மனம் என்பதற்கு இத்தகைய ஆற்றல் இருக்கிறது. குறைந்த தரவுகள் கிடைத்தால் கூட போதும். மனம் தாவிச் செல்கிறது. தவறான பாய்ச்சல்களுக்கும் இடமுண்டு என்பதை மறுப்பதற்கில்லை. கற்பனை முதலிய உணர்வுகள் கூட இப்படித்தான் மனிதனுக்குள் செயல்படுகின்றன. பிராய்டு முதலியவர்கள் கூறிய ஆழ்மனம் என்பதற்கப்பால் செல்லும் அனுபவங்களும் நமக்கு வாய்க்கின்றன.

ஆவியோடு பேசுதல் என்று ஒரு அனுபவம் பற்றி உலகில் பரவலாக பேசப்படுவதைப் பற்றி நாம் அறிவோம். இது குறித்து ஏராளமான, தாறுமாறான அனுபவங்கள் குறித்து பலர் சொல்லக் கேள்விப்படுகிறோம். என்னுடைய மரியாதைக்குரிய நண்பர்கள் கு.ச. ஆனந்தன் அவர்கள் தன் அனுபவங்களின் தொகுப்பாக ஆவிநேயம் என்ற ஒரு நூலை என் பார்வைக்கு அனுப்பி அந்த நூலை வெளியிடுவதற்கான தகுதி பற்றி நான் கூற வேண்டுமென்று என்னைக் கேட்டுக் கொண்டார். அவருடைய சில அனுபவங்கள் என்னால் மறுக்கக் கூடியனவாக இல்லை. சிலவற்றை, அவர் கூறிய அதே வடிவில் உண்மை அல்ல என்று என்னால் உறுதியாகக் கூற முடியும். சான்றாக ஒன்றை இங்குக் கூறுகிறேன்.

மார்க்சின் ஆவியை தனக்குள் வரவழைத்து மாவோ பற்றி அவர் மார்க்சிடம் கேட்டு மார்க்கின் கருத்தாக அவர் பதிவு செய்கிறார். மாவோவின் கருத்துகளும் செயல்பாடும் மார்க்சியத்தின் கருத்திற்கு எதிரானவை என்று மார்க்ஸ் கூறுகிறார். இதிலிருந்து ஒன்றை நான் புரிந்து கொள்கிறேன். மாவோ ஒருவேளை என் மூலம் மார்க்ஸ் பற்றி பேசுவார் என்றால் மாவோவை மார்க்ஸ் ஏற்றிருப்பார். கு.ச. ஆனந்தன் அவர்களுக்கு மாவோவோடு உடன்பாடு இல்லை. இப்படிச் சிலவற்றை நான் மறுக்கலாம் எனினும் கு.ச. ஆனந்தன் அவர்கள் தரும் இன்னும் பல விவரங்களை என்னால் மறுக்க முடியாது.

சிலசமயம் தன் ஆய்வுக்கு வரும் சில சிக்கலான வழக்குகள் குறித்து காலம் சென்ற தன் சீனியரின் ஆவியோடு தொடர்பு கொண்டு சிலவற்றை எழுதுகிறார். தன் சீனியர் தனக்கு மிகத்

துல்லியமான நெறிகாட்டியது பற்றி எழுதுகிறார். என்னால் மறுக்க இயலாது. ஆவி உண்டு என்றும் அதன் இலக்கணங்கள் குறித்தும் ஆனந்தன் அவர்கள் நிறையச் சொல்கிறார்கள்.

ஒருமுறை எனக்கும் ஏற்பட்ட அனுபவத்தை இங்கு குறிப்பிட விருமபுகிறேன். என் நெருக்கமான நண்பரின் சகோதரி திக்காயத்தில் உயிர் துறந்தார். அது தற்கொலையா? அல்லது கொலையா? என்பது பற்றி எங்களுக்குச் சந்தேகம். நெருக்கமான இன்னொரு நண்பர் என்னை ஒருவர் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அந்த வீட்டில் இருந்த ஒருவர் மூலம் ஆவியோடு தொடர்பு கொள்ள முடியும் என்று கூறினார். நானும் அவரோடு அமர்ந்தேன். அவர் மூலம் ஆவியோடு தொடர்பு கொண்ட பொழுது கொலை என்று செய்திக் கிடைத்தது. கொலை செய்தவர் யாராக இருக்கக்கூடும் என்ற கேள்விக்கு, இறந்த அந்த சகோதரியோடு கடைசியாக இருந்திருக்கக் கூடும், என நாங்கள் நம்பிய ஒருவர் பெயர் கிடைத்தது. அவர் விட்டுச் சென்ற பொருள் பற்றிக் கேட்டபொழுது, பொருளின் பெயரும் கிடைத்தது. சிலநாள் எனக்குள் வியப்பும் அதிர்ச்சியும் மேலும் கேள்விகளோடு சுமார் ஒரு மாதம் கழிந்த பிறகே எனக்குள் ஓரளவுக்கு தெளிவு பெற்றேன். சகோதரியின் மரணம் நாங்கள் நினைத்தபடியே கொலைதான். ஆனால் கொலை செய்தவர் பெயர் அன்றைய தேதியில் நான் சந்தேகப்பட்ட அந்தக் குறிப்பிட்ட நபரின் பெயரைத்தான் ஆவியும் சொன்னது. விட்டுச் சென்ற பொருள் அதுவே தான். ஆனால் ஒரு மாத அளவிற்குள் எங்களுக்கு கிடைத்த சரியான விவரங்களின் அடிப்படையில் இந்தக் கொலையைச் செய்தவர் முதலில் எங்கள் சந்தேகத்திற்கு உரிய அந்த நபரல்ல வேறொருவர். அப்படியானால் ஆவி கூறிய செய்தி, கொலை என்ற செய்தியும், கொலை செய்த நபர் விட்டுச் சென்ற பொருள் பற்றிய செய்தியும் உண்மையானவை.

நான் என்ன புரிந்து கொண்டேன். என் மனத்தில் என்ன இருந்ததோ அதைத்தான் அந்த ஆவி வெளிப்படுத்தியது. எனக்குள் இருந்த நினைவு எதுவோ அதுதான் ஆவியின் மூலம் வெளிப்பட்டது. ஆவித் தானாக எதையும் கண்டறிந்து சொல்லவில்லை. அந்த ஆவி என்பது இறந்த அந்த சகோதரியின் ஆவி என்பதாகத்தான் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் எனக்குள் ஏற்பட்ட வியப்பு - என் மனத்திற்குள் இருந்த அந்த நினைவு என் கைவிரல் வழியே, இடையில் இருந்த அந்த டம்ளரை நானோ என் எதிரிலிருந்த அந்த

ஆவியோடு தொடர்புடைய இன்னொரு நபர் வழியாகவோ எப்படி அந்த டம்ளரை நகர்த்தியது என்பது தான். டம்ளரை நானோ என் எதிரிலிருந்த நபரோ நகர்த்தவில்லை. டம்ளர் இயல்பாக நகர்ந்தது. தொடர்ச்சியான அந்த ஆங்கில எழுத்துக்களை நோக்கி அடுத்தடுத்து நகர்ந்தது. என் மனத்தினுள் இருந்த அந்த நினைவு எப்படி எவ்வாறு வெளிப்பட முடியும். எனக்கு இது புரியவில்லை. இங்கே எந்த ஆவியும் வரவில்லை. ஆனால் இது எப்படியோ நிகழ்கிறது / செயல்படுகிறது.

கோவையில் கல்பனா என்ற பெண் ஆவிகளோடு தொடர்பு கொண்டு நிறைய எழுதுகிறாராம். கண்ணகியோடு, ஓஷோவோடு தொடர்பில் எழுதுகிறார். காளிதாஸரோடு கூட தொடர்பு கொண்டு எழுதினாராம். காளிதாஸரின் சமஸ்கிருதம் இவருக்குத் தெரியாததால் இவரால் எழுத இயலவில்லையாம். இன்னொரு நண்பர் கூறினார். ஒரு குழந்தை சில நிலைகளில் ஆங்கிலத்தில் பேசுகிறதாம். இவை நமக்குக் கூர்மையானக் கேள்விகளை எழுப்புகின்றன. ஒரு பகுத்தறிவுவாதியை பொறுத்த வரை இவற்றை நம்ப முடியாது. மார்க்சியனாலும் நம்ப முடியாது. இவை புரியவில்லை என்பதற்காக ஒதுக்கிவிடவும் கூடாது. மனிதன் தன் அறிவுக்குப் புலப்படுகிற அனுபவங்கள் இறுதியானவை என்று தனக்குள் இறுகிவிடக் கூடாது.

## 6

> இயற்கை நம்மைப் படைக்கிறது.
> வாழ்விக்கிறது. நம்மை அழித்து மீண்டும் படைக்கிறது. இதற்கு கடவுள் என்று பெயரிடுவதில் தவறில்லை.

சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் மாலை மலையாள நாளிதழ் ஒன்றின் கோவைக் கிளை நிர்வாகியான என் நண்பரைச் சந்திக்கச் சென்றிருந்தேன். இரவு மணி 9 இருக்கும். அவருடைய அலுவலகத்தில் பணிபுரியும் ஒரு இளைஞர் அறைக்குள் வந்தார். அவர் பெயர் பிரபு என்று பிறகு அறிந்து கொண்டேன். என்னை அவர் உற்றுப் பார்த்திருக்க வேண்டும். என் அருகில் வந்த அவர் என் கையைக் காட்டச் சொன்னார். 'ஐயா நீங்கள் 74 வயது வரை வாழ்வீர்கள்' என்றார்.

இது எனக்கு முக்கியமில்லை. வேறு ஏதாவது சொல்லுங்கள் என்றேன். அவர் கூறினார். 'ஐயா உங்களுக்கு கடவுள் நம்பிக்கை இல்லை' ஆனால் கடவுளின் கருணை உங்களுக்கு ஏராளமாக இருக்கிறது'.

எனக்கு பெரும் வியப்பு. உண்மைதான் – எனக்கு கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால் கடவுள் என்று பலரும் சொல்லக்கூடிய ஒரு பெரும் கருணையை நான் நிறைய அனுபவிக்கிறேன் என்று நான் என் இசைவைத் தெரிவித்தேன். பின்னர் அங்கிருந்த நண்பர்களோடு இதைப்பற்றிப் பேசினேன்.

வானம், பூமி, இயற்கை, உயிர்கள் – இவை நம்மை வாழ வைக்கின்றன. இவற்றோடு தான் நமக்கு வாழ்வு. இவை இல்லாமல் நாம் இல்லை. இவை அனைத்துமே பிரபஞ்சம் என்ற பேரியக்கத்தின் ஒரு பகுதி. சூரிய மண்டலம் இதன் பகுதி. உலகம் – இயற்கை, உயிர்கள், செடிகொடிகள், ஆறுகள், மழை, வெய்யில், காற்று, பிரபஞ்சம் என்ற பேரியக்கத்தின் வழியில் மனிதர்கள். எல்லாவற்றின் உள்ளும் இயங்குவது பிரபஞ்சம். என்னோடும் இயங்குகிறது பிரபஞ்சம். எனக்குள்ளும் இயங்குகிறது பிரபஞ்சம். பிரபஞ்சத்தின் உயிரியக்கம் எனக்குள்ளும் செயல்படுகிறது. பிரபஞ்சம் வேறு நாம் வேறு என்றில்லை. நான் தனியனில்லை.

உயிர்களின் இயக்கத்தின் தொடர்ச்சி, மனிதன், மாபெரும் வரலாற்று இயக்கத்தில் நாம் இருக்கிறோம் / நான் இருக்கிறேன். மாபெரும் வரலாற்றின் இயக்கம் எனக்குள்ளும் இருக்கிறது. பிரபஞ்சத்தின் உயிர்ச்சக்தியும், அதைப் போலவே வரலாற்று இயக்கமும் எனக்குள் இருக்கின்றன. எனக்கு வயது 70 அல்ல. ஆயிரம் என்றும் இரண்டாயிரம் என்றும் சொல்லிக் கொள்ளலாம்.

இயற்கை எனக்கு உயிர்த் தருகிறது. உணவு தருகிறது. காற்று முதலியவற்றைத் தருகிறது. எதையும் தனக்கென வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் தருகிறது. இயற்கையின் படைப்புத்திறன் எனக்குள்ளும் இருக்கிறது. நானும் படைக்கிறேன். வரலாற்றின் வழியே படைப்புத்திறன் எனக்குள்ளும் செயல்படுகிறது. எனக்கு எல்லை இல்லை. காலம் இல்லை. அழிவு இல்லை. மரணமில்லை. நான் எதையும் எனக்காக வைத்துக் கொள்வதில்லை. எல்லாவற்றையும் பகிர்ந்து கொள்கிறேன். இயற்கையின் படைப்புத்திறன் குறைவதில்லை. அழிவும் ஆக்கமும்

இயற்கையின் கூறுகள். அழிக்கும்போதே படைக்கிறது. எதுவும் முற்றாக அழிவதில்லை. அழிவது போலத் தோன்றினாலும் நடைபெறுவது ஆக்கம்.

வரலாற்றில் மனிதர்கள் எவ்வளவோ படைத்திருக்கிறார்கள். தம்மை எவ்வளவு மேம்படுத்தியிருக்கிறார்கள். பறவைகளாக, விலங்குகளாக இருந்த போது இந்தப்பிரபஞ்சம் கண்ணுக்குத் தெரிவது இல்லை. வரலாறு தெரியவில்லை. தன்னைப் பற்றித் தெரியவில்லை. மனிதன் ஆனபிறகுதான் எல்லாமே மெல்ல மெல்லத் தெரியவருகிறது. இப்பொழுது தெரிந்தவை கொஞ்சம். இன்னும் தெரியவேண்டியவை எவ்வளவோ. தெரிந்தவரை நமக்கு வாய்த்திருப்பது பேரின்பம், பேரறிவு. இயற்கையின் கருணை நமக்குள் பொங்கி வழிகிறது. எதையும் தனக்கென வைத்துக் கொள்ளாதவனுக்கு இயற்கைத் தன்னைத்திறந்து எல்லாவற்றையும் தருகிறது. இயற்கையின் கருணைக்கு, தாய்மைக்கு அளவில்லை. ஒரு பக்கம் இயற்கையும் நாமும் வேறுவேறு இல்லை. நான் மனிதனான பிறகுதான் என்னைப் புரிந்துகொண்டேன். இயற்கையைப் புரிந்துகொண்டேன். பிரபஞ்சத்தை அறிந்துகொண்டேன். எனக்காகத்தான் பிரபஞ்சம் இயங்குகிறது என்று நான் எண்ணவில்லை. பிரபஞ்சத்தோடு நானும் இயங்குகிறேன். என்னோடு மட்டும் எனக்குக் கவனம் இருக்கும்போது பிரபஞ்சத்தோடு கொஞ்சம் வேறுபடவும் செய்கிறேன். பிறகு புரிந்து கொள்கிறேன். மீண்டும் பிரபஞ்சத்தோடு இணைகிறேன்.

இப்படி என் உணர்வுகள், சிந்தனைகள் செல்கின்றன. இப்பொழுது உணர்கிறேன். நான் வேறு கடவுள் வேறு என்பதுகூட உண்மையில்லை. பிரபஞ்சம் என்ற இந்த பேரியக்கத்திற்கு கடவுள் என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். கடவுள் என்பதற்கு எத்தனையோ இலக்கணங்கள் சொல்கிறார்கள். கடவுளையும், இயற்கையையும், வானத்தையும், கடலையும், காற்றையும் இணைத்துப் பேசுகிறார்கள் இவை ஒன்று எனச் சொல்கிறார்கள். கதிரவனின் ஒளி கடவுளின் ஒளி என்கிறார்கள். மழையின் கருணையை கடவுளின் கருணை என்கிறார்கள். இயற்கை தரும் விளைச்சலை கடவுளின் கருணை என்கிறார்கள். தாயின் கருணை, கடவுளின் கருணை. குழந்தையின் முகத்தில் கடவுளின் ஒளி. இடியும் மழையும் கடவுளின் வெளிப்பாடு. புயலும்கூட கடவுளின் செயல்திறன்.

இப்படி எல்லாம் பலர் சொல்வதன் உட்பொருள் என்ன? இயற்கை இல்லாமல் நாம் இல்லை. இயற்கையின் கருணையில் நாம் வாழ்கிறோம். இடியும் புயலும்கூட நமக்கு நல்லவை. இயற்கை நம்மை வாழவைக்கிறது. நம்மைப் படைக்கிறது. வாழ்விக்கிறது. நம்மை அழித்து மீண்டும் படைக்கிறது. உயிர் இயக்கத்திற்கு ஓய்வு இல்லை. இந்த இயக்கத்தோடு நாம் இருக்கிறோம். இதற்குக் கடவுள் என்று பெயர் கொடுக்கிறார்கள். எதையும் எதிர்ப்பார்க்காமல் இயற்கைத் தருவதால் இது கடவுள். கடவுள் என்ற பெயருக்குப்பின்னால் இருப்பது இயற்கை.

உயிர் இயக்கம், வரலாற்று இயக்கம் என்பனவற்றுக்கு கடவுள் என்ற பெயர் கொடுத்திருக்கலாம். கொடுக்காமலும் இருந்திருக்கலாம். கொடுத்தவர் ஒரு பெயரோடு உருவத்தோடு நிறுத்திக் கொள்ளவில்லை. ஆயிரம் பெயர்கள் கூடவே ஆயிரம் உருவங்கள். இயற்கையின் பேரியக்கத்தினுள் நாம் எல்லாவற்றையும் பார்க்கிறோம். சூரியனில் பேரொளி, சந்திரனில் குளிர்ச்சி, வானத்தில் விரிவு, அணுவின் நுட்பம், மழையின் உயர்வு, இடியின் கோபம், மின்னலின் வேகம், புயலின் சீற்றம், கடலின் ஆழம், வானத்தின் உயரம் இப்படி இன்னும் எவ்வளவோ. இவை எல்லாவற்றினுள்ளும் இயங்குவது ஓரியக்கம். இவற்றை ஒன்றாகவும் காணலாம், பலவாகவும் காணலாம். ஒன்றில் காண்பது ஒருவகைக் காட்சி. பிரித்துப் பலவாகக் காண்பதும் ஒருவகைக் காட்சி. ஒவ்வொன்றுக்கும் ஒருபெயர். ஒரு வடிவம். பொருள்களுக்குப் பெயர் வைத்துத்தான் மனிதன் புரிந்து கொள்கிறான். பொருட்களுக்கிடையில் ஒருமை உண்டு என்றும் புரிந்து கொள்கிறான். பிரித்துப் பெயர் கொடுத்தும் புரிந்து கொள்கிறான். ஒன்றிலிருந்து இன்னொன்றை வேறுபடுத்துகிறான். இவை வேறுவேறு என்கிறான். இப்படித்தான் மனிதன் செயல்படுகிறான். கடவுளைக்கூட இப்படித்தான் பிரித்துப் போட்டான். அப்புறம் இணைத்துப் பார்க்கவும் செய்கிறான். இதற்கும் நெடுங்காலமாகிறது. அப்புறம் கடவுள் பெயரையும் களைந்துவிட்டு எல்லாமே பொருள் என்கிறான். சக்தி என்கிறான். கூத்து என்கிறான். விளையாட்டு என்கிறான். கடவுளைக்கூட தன் நாடகத்தில் பாத்திரமாக்கினான். இப்படி கடவுளை வைத்து நாடகமாடவும் செய்கிறான். களைத்துப் போடத்தெரியாமல் திண்டாடவும் செய்கிறான்.

## 7

> தமிழ் இலக்கியத்தை
> நேசத்தோடு நான் கற்றேன்.
> தமிழ் இலக்கியத்திற்குள்
> பதிந்திருக்கிற கடவுளையும்
> நான் நேசிக்கிறேன்.
> புரிந்துகொள்கிறேன்.

கடவுளின் கருணை என்மீது நிறைய இருக்கிறது என்று என் கைரேகையைப் பார்த்து அந்த இளைஞர் பிரபு கூறியது பற்றி நான் இன்னும் சிலவற்றைச் சொல்ல வேண்டும். இளமைக்காலம் முதற்கொண்டு நானும் எவ்வளவோ துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் உள்ளாகி இருக்கிறேன். இவைப்பற்றியெல்லாம் நான் எப்பொழுதும் சிந்தித்துப்பார்த்து நான் வருந்திக்கொண்டு இருக்கவில்லை. எத்தனையோ குறைகள் எனக்கும் இருந்திருக்கின்றன. என்னுடைய கல்லூரிப்படிப்பை நான் மேலும் தொடர்ந்திருக்க முடியும். எங்காவது ஒரு கல்லூரியில் வேலைபார்த்து என் தகுதியை நான் உயர்த்தி இருக்கவும் முடியும். இப்படியெல்லாம் நான் சிந்தித்து என்னை துயரத்தில் ஆழ்த்திக் கொள்ளவில்லை. இதற்கு மாறாக ஒரு நிறைவான வாழ்க்கையை நான் வாழ்ந்து கொண்டிருப்பதாகத்தான் கருதுகிறேன். என் பெற்றோர் மூலம், எனக்கு வாய்த்த நல் ஆசிரியர்கள் மூலம், நான் கற்ற கல்வியின் மூலம் நான் பெரும் பயன் பெற்றிருக்கிறேன். தமிழை நான் பெரிதும் நேயத்தோடு கற்றேன். தமிழை எனக்குள் செரித்துக் கொண்டேன். ஒருவேளை மார்க்சியத்திற்கு நான் வந்திருக்க வில்லையென்றால் தமிழின் மீது இத்தனை நேயம் ஏற்பட்டிருக்குமா? என்று என்னால் சொல்ல இயலாது.

நான் கிராமத்தில் வாழ்ந்தேன். அங்கிருக்கிற உழவர்கள் முதலியவர்களை இன்றும் நேயத்தோடு, மரியாதையோடு நினைத்துக் கொள்கிறேன். வறிய நிலையிலும் அவர்கள் வாழ்க்கையில் இருந்த பண்பாட்டு மேன்மை இன்றும் எனக்குள் தங்கியிருக்கிறது. அந்தக் கிராமத்து உழவர்கள், கைவினைஞர்கள் முதலியவர் வழியே எனக்குள்ளும் வந்திருக்கிற அற உணர்வுக்கு மூலம் எது என்று தேடிச்செல்லும்பொழுது, என் மக்கள் வாழ்ந்த மண்ணையும், அவர்கள் உழைப்பையும், பிறரோடு அவர்கள் தம்மைப் பகிர்ந்து கொண்டதையும் நினைத்துக் கொள்கிறேன். இவர்களுக்குள் செரிவு பெற்றிருக்கிற அற உணர்வு, தமிழ் வரலாற்றுக் காலம் முழுவதும் தமிழ் இலக்கியங்கள் மூலம்

மேம்பட்டுத் தெரிகிற அற உணர்வு அன்றி வேறில்லை. வள்ளுவரும் இளங்கோவும் இந்தத் தமிழ் மண்ணிலிருந்து, தமிழ் மக்களிடமிருந்து தான் அந்த அற உணர்வை செரித்துக் கொண்டார்கள். இந்த அற உணர்வைக் கைவிட்ட நிலையில் ஒருவன் தமிழனாகவே இருக்க முடியாது. இப்படித்தான் நானும் தமிழ் கற்றேன். தமிழ் இலக்கணம் கற்றேன்.

கோவையில் ஒரு புகழ்பெற்ற பள்ளியில் நான் தமிழாசிரியனாகப் பணியாற்றினேன். ஆசிரியப் பணியிலும் வகைவகையான அனுபவங்கள். கசப்பும் இனிப்புமான பலவகை அனுபவங்கள். என் பள்ளி வாழ்க்கையில் என் அளவில் மிகுந்த அக்கறையோடு பணியாற்றினேன். ஒரு வகையில் பள்ளியில் ஆசிரியர் தொழில் என்ற இந்தத் தளம் எனக்கு வாய்த்திருக்கவில்லை என்றால் நான் என்னவாகி இருப்பேன் என்று என்னால் சிந்திக்க முடியவில்லை. இந்தத் தொழிலதான் என்வாழ்வுக்கு ஆதாரமாக இருந்தது. இன்றும் நான் பெற்றுவருகிற ஓய்வூதியத்திற்கு இந்தத் தொழில்தான் காரணம்.

பள்ளியில் பணியாற்றிய காலத்தில் நான் நிறைய புத்தகங்கள் வாங்கினேன். நிறைய எழுதினேன். நண்பர்களோடு பழகினேன். பத்திரிக்கைகளில், இலக்கிய இயக்கங்களில் திறனாய்வாளனாக என்னை வளர்த்துக் கொண்டேன். கவிதைகள் எழுதினேன். கட்டுரைகள் எழுதினேன். மார்க்சியத்தை விரிவாகவும் ஆழமாகவும் கற்றேன். எனக்கு எத்தனையோ நண்பர்கள் உதவி செய்தார்கள். ஒரு பள்ளியில் தமிழ் ஆசிரியனாகப் பணியாற்றியதற்கு நான் வருத்தப்படவில்லை.

கண்பார்வை பாதிக்கப்பட்ட நிலையிலும், வகுப்பறைக்குச் செல்லவேண்டாம். கட்டுரை, தேர்வுத்தாள்கள் திருத்த வேண்டாம். என் ஊதியத்தில் ஒரு பகுதியைக் கொடுத்து இன்னொரு ஆசிரியர் மூலம் என் வகுப்பு மாணவர்களுக்குக் கற்பிக்கலாம். இப்படி என் தலைமை ஆசிரியர் அன்போடு எனக்கு அறிவுரை கூறினார். இது எனக்கு உடன்பாடாக இல்லை. என் வேலையை நான்தான் செய்ய வேண்டும். எனக்குப் பதிலாக இன்னொருவர் வேண்டாம். நான் விருப்ப ஓய்வு பெற்றுக் கொள்கிறேன். என் பணியிடத்தில் இன்னொருவர் இருந்து அவர் முழு ஊதியத்தைப் பெறட்டும். இப்படி நான் தலைமை ஆசிரியரிடம் கூறினேன். ஓய்வு பெற்றுக் கொண்டேன். என் மாணவர்களிடத்தில் மிகுந்த அன்போடு நான்

பழகினேன். இந்த அன்புதான் ஆசிரியர் என்ற முறையில் எனக்கு இருந்த இயல்பான பண்பு.

கண்பார்வை இழந்த நிலையில் உதவியாளரை வைத்துக்கொண்டு நான் நிறைய எழுதினேன். பத்திரிகை நடத்தினேன். நூல்கள் வெளியிட்டேன். கண் பார்வை இழந்ததற்காக நான் வருந்தவில்லை என்பது மட்டுமல்ல எழுத்துப் பணியில் தீவிரமாக ஈடுபடுவதற்கு இது ஒரு பெரும் வாய்ப்பைத் தந்தது. ஒரு வேளை கண்பார்வையோடு நான் இருந்திருப்பேன் என்றால் கடைசிவரை ஆசிரியனாக இருந்திருப்பேன். எத்தனையோ எழுதவேண்டும் என்ற பேரார்வம் நிறைவேறாமல் போயிருக்கும்.

இப்படியே என் வாழ்க்கை பற்றி நான் எவ்வளவோ சொல்ல வேண்டும். போதுமென்று நிறுத்திக் கொள்கிறேன். முன்பு கூறியதுபோல ஒரு நிறைவான வாழ்க்கை எனக்கு வாய்த்திருக்கிறது. தமிழ் கற்றது என் வாழ்க்கையில் பெரும்பேறு. அதைப்போல மார்க்சியம் கற்றதும் ஒரு பேறு. இதன் மூலம் என் வாழ்க்கை நிறைவு பெற்றிருக்கிறது. தமிழ் இலக்கியம் குறித்து, மார்க்சியம் குறித்து வளமான பார்வையை நான் வளர்த்துக் கொண்டேன். எனக்குள் எத்தனையோ தமிழ் அறிஞர்கள் தமிழ்க்கவிஞர்கள் முதலியவர்கள் எவ்வளவோ ஆற்றல்களை அற்புதங்களை வழங்கி இருக்கிறார்கள். வரலாற்றுச் சூழலில் வைத்து தமிழை நான் எனக்குள் செரித்துக் இருக்கிறேன். உலகச் சூழலில் என்னை நான் புரிந்து கொண்டிருக்கிறேன்.

ஆங்கிலம் கற்றதன் மூலம் நான் பெற்ற பயன்களுக்கு அளவில்லை. தேடித்தேடி எத்தனையோ வகையான அறிவு நூல்களை, இலக்கியங்களைக் கற்றேன். நிறைய தத்துவங்கள் கற்றேன். அறிவியல், உளவியல், வரலாறு என்று பலவற்றைக் கற்றேன். உலகத்தை, வரலாற்றை எனக்குள் உணர முடிகிறது. சமத்துவம் சமதர்மம் என்று நான் உள்ளார்ந்த உணர்வோடு பேசுகிறேன். மார்க்ஸ் முதலியவர்களை எப்போதும் மிகுந்த மரியாதையோடு, அன்போடு நினைத்துக்கொள்கிறேன்.

எனக்குள் வள்ளுவரும் இளங்கோவும் வாழ்கிறார்கள். நாயன்மார்களையும், சித்தர்களையும் எனக்குள் நான் சந்திக்கிறேன். தொல்காப்பியரோடும் எனக்கு உறவுண்டு. இவர்கள் எல்லோருமே எனக்கு நிறையக் கற்றுத் தந்திருக்கிறார்கள். இவர்களுக்கு என்றும்

நான் மாணவன். இவர்கள் மூலம் நான் வாழ்ந்திருக்கிறேன் வளர்ந்திருக்கிறேன். இவர்களோடு என்னால் மிகுந்த மரியாதையோடு உறவாட முடியும் இவர்களோடு மரியாதை சிறிதும் குறையாமல் நான் முரண்படவும் செய்கிறேன்

இவர்களுக்குப் பின்னான வரலாற்றுக் காலத்திலிருந்து நானும் கற்றிருக்கிறேன். என் வாழ்க்கை அனுபவங்கள் எனக்குள் வீணாகவில்லை. எனக்குள் தன்முனைப்புக்கு இடமில்லை. எனது ஆளுமைத்திறன் அனைத்துமே வரலாற்றின் வழியே இவர்கள் மூலம் எனக்குள் குறைந்த அளவுக்கேனும் சேகரமானவை. இவற்றை எனக்குள் பதுக்கி வைத்துக் கொண்டு நான் பெரியவன் என்று என்னால் தற்பெருமை கொள்ள முடியாது. இவர்கள் வழியே வந்து சேர்ந்த பேரன்பை, நல்லறிவை நானே வைத்துக் கொண்டிருப்பதன் மூலம் என்னை நானே அழித்துக் கொள்வேன். பிறரோடு பகிர்ந்து கொள்வதன் மூலமே புதிய அறிவுக்கான வாயில்கள் எனக்குள் திறக்கின்றன. இத்துடன் என் கதையை நிறுத்திக் கொள்கிறேன்.

பிரபு கூறியது என் அளவில் ஒரு பேருண்மை. மாபெரும் கருணையை இந்த வாழ்க்கை எனக்கு வழங்கி இருக்கிறது. என் தாயும், தந்தையும், ஆசிரியர்களும், என் கிராமத்து உழவர்களும், எனக்குத் தமிழையும் மார்க்சியத்தையும் கற்றுக்கொடுத்த அறிஞரும் சான்றோரும், எனக்கு வழங்கிய அன்பை, அறிவை, வாழ்க்கையை, பார்வையை நான் நன்றியோடு நினைத்துக் கொள்கிறேன். வரலாறு, வானம், பிரபஞ்சம், இயற்கை முதலிய அனைத்துமே எனக்கு வழங்கிய உயிர்ப்பை, வாழ்க்கையை கடவுளின் கருணை என்று பிரபு சொன்னதை என்னளவில் நான் புரிந்து கொள்கிறேன். யாரையும் நான் நொந்து கொள்ளவில்லை. குறைபட்டுக் கொள்ளவில்லை. எல்லாவற்றையும் நான் நேசிக்கிறேன். இத்தகைய பார்வையின் வழியே கடவுள் என்று சொல்லப்படுகிற அந்த இயற்கை வரலாறு முதலியவற்றின் கருணைக்குள் நான் என்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் மட்டும் என்ன? எல்லோருமே தமக்குள் இந்தக் கருணையை உணர முடியும்.

8.

இது மனிதர்களின் உலகம். இங்கு தெய்வங்கள் வந்து போகலாம். மனிதனும் தெய்வமாகலாம். இங்கு மனிதனுக்கே முதன்மை.

கடவுள் குறித்து என் அனுபவத்தைப் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து புரிந்து கொண்டதன் விளைவாகவும் கடவுளை மிக முக்கியமான கூறாகக் கொண்டிருக்கிற மதம் பற்றி மார்க்சியத்தின் வழியே கூடுதலான புரிதல் விளைவாகவும் தமிழிலக்கியத்தை நான் நேயத்தோடு கற்றேன். ஒரு வேளை என் நணபர்கள் பலரைப்போல பகுத்தறிவுப் பார்வையில் நான் அழுத்தம் பெற்றிருப்பேன் என்றால் தமிழிலக்கியத்தை இத்தனை நேயத்தோடு என்னால் கற்றிருக்க முடியாது. இதைப் பற்றி இங்கு சுருக்கமாக நான் சொல்ல வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகி மதுரை நகரை எரிக்கிறாள். மணிமேகலையில் அமுதசுரபி என்ற பாத்திரத்தை மணிமேகலைப் பெறுகிறாள். இப்படி சிலம்பிலும் மேகலையிலும் எத்தனையோ இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. ஒரு பகுத்தறிவாளர் இவற்றை இரசிக்க முடியாது என்பது மட்டுமல்ல இவற்றுக்கெதிராகவும் பேச நேரும். கம்பன் காவியமென்று வருகிற போது திராவிட இயக்க உணர்வோடு, கம்பனைக் காய நேரும். பெரிய புராணம் பொய் மூட்டைகளின் தொகுப்பு என்று தான் சொல்ல வேண்டி வரும். பகுத்தறிவுப் பார்வையிலிருந்து இவ்வகை இலக்கியங்களை விளக்க முடியாது.

பாரதிதாசன் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களை ஒரளவுக்குத் தன் பார்வையில் மறு ஆக்கம் செய்தார். எனினும் முழு அளவில் செய்ய இயலவில்லை என்பது மட்டுமல்ல அவருக்குள்ளும் சமயப்பார்வையின் சில தடங்கல்கள் இடம்பெறாமல் இல்லை. வள்ளுவருக்குள் சமய ஆக்கம் இருப்பதாகத்தான் கருதுகிறேன். ஆனால் வள்ளுவரை முழுமையான ஒரு பகுத்தறிவாளனென்று மெய்ப்பிக்கும் முறையில் பாரதிதாசன் தொடங்கி இன்றும் பலர் எழுதி வருகின்றனர்.

சமயம் என்பது முற்றிலும் வெறுக்கத்தக்கது / ஒதுக்கத்தக்கது என்பது இவர்கள் பார்வை. தமிழனுக்கு சாதியில்லை என்பது போலவே சமயமும் இல்லை அல்லது தேவை இல்லை என்று இவர்கள் அழுத்திக் கூறுகிறார்கள். ஆரியரது நுழைவைத்

தொடர்ந்து தான் தமிழன் வாழ்க்கை அழிந்தது என்பது இவர்கள் பார்வை. வரலாற்று அடிப்படையில் இவர்களது ஆய்வுகள் இல்லை. ஒரு மார்க்சியன் என்பவன் வரலாறு என்னும் தளத்தில் வைத்துத்தான் சமயம் முதலியவற்றின் ஆக்கங்களை கற்க முடியும். புரிந்து கொள்ள முடியும்.

சமயத்தின் ஒரு முக்கியக் கூறு ஆன்மீகம். இன்னொரு கூறு புரோகிதம். புரோகிதம் பற்றித்தான் நமக்கு விமர்சனம் தேவை. இதைக் கூட வரலாற்று அடிப்படையில் வைத்துத் தான் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். பிறகுதான் மறுத்தல் பற்றி பேச முடியும். இலக்கியத்தில் கற்பனைக்கு இடமுண்டு. இலக்கியப் படைப்பில் அற உணர்வுக்கு அழுத்தம் உண்டு. கோவலன் கொலைத் தொடர்பான பல நிகழ்ச்சிகளில் மதுரை நகரத்தில் நீதிநெறி செயல்படவில்லை என்பதை நாம் நன்கு உணர்கிறோம். இத்தகைய ஒரு நகரத்தில் ஆட்சி செய்கிற மன்னன் நீதியை கடைப்பிடிக்கத் தவறிய சூழலில் அழிய வேண்டும் அல்லது அழிக்கப்பட வேண்டும் என்பது இளங்கோவடிகள் என்ற கவிஞரிடம் செயல்பட்ட அற உணர்வு

சங்க காலத்தை அடுத்த காலத்தில் தமிழகத்தில் வறுமையின் கொடுமைக்கு அளவில்லை. செல்வர்களோ மன்னரோ எவ்வளவு முயன்றாலும் குறையாத அளவுக்கு வறுமைத் தீ பற்றிப் படர்ந்திருந்த நிலையில் அமுதசுரபி என்ற பாத்திரத்தை சாத்தனார் படைக்கிறார். எடுக்க எடுக்கக் குறையாத அளவுக்கு உணவு சுரப்பது இப்பாத்திரம். இப்படி சாத்தனாரின் கற்பனை உணர்வு இந்தப் பாத்திரத்தைப் படைக்கிறது. காலம் தோறும், மனிதர்கள் அற உணர்வோடு மட்டுமல்ல, கற்பனை உணர்வோடும் வாழ்கிறவர்கள். இவை இல்லாமல் மனிதன் வாழவும் முடியாது. பகுத்தறிவுக்கு இவை எப்படி ஒவ்வாதவையாக இருக்க முடியும் என்பது நமக்குப் புரிவதில்லை.

மனிதனின் ஆளுமைக்குள் இன்னும் இவை போல எத்தனையோ பண்புகள், ஆற்றல்கள் இருக்கின்றன. தெய்வங்களை இப்படித்தான் மனிதன் படைத்துக் கொள்கிறான். பிசாசுகளையும் படைக்கிறான். பேய் உலகம், நரகம் என்பனவற்றையும் இந்த உலகியல் வாழ்விலிருந்து தான் படைக்கிறான். இவற்றைக் கற்பனைப் படைப்புகள் எனப் புரிந்து கொள்வது முக்கியம். உலக வாழ்வியலின் தீவிரமான சிக்கல்களை வெளிப்படுத்துவதற்கும் விளக்குவதற்கும் இத்தகைய படைப்புகள் பயன்படுகின்றன எனப் புரிந்து கொள்வது முக்கியம். புராணக் கதைகளைப் பொய்யென்று சொல்வது எளிது.

புராணங்கள் வழியே மக்களின் அறிவும் பண்பும் சிலர் தேவைக்காக மழுங்கடிக்கப்படுகின்றன என்பதையும் நாம் மறுப்பதற்கில்லை. பத்துத் தலையோடு ஒருவன் வாழ்ந்திருக்க முடியாது. பன்னிரண்டு கரங்களோடு ஒருவன் இருந்திருக்க முடியாது. இப்படித்தான் மனிதனின் கற்பனைப் படைப்புக்கள் அமைகின்றன. இவற்றை மறுப்பது ஒரு பார்வை. இவற்றைப் புரிந்து கொள்வது இன்னொரு வகையான பார்வை. மறுப்பது எதிர்மறைப் பார்வை என்றால், புரிந்து கொள்வது என்ற உடன்பாட்டுப் பார்வை வழியே இவற்றின் உறுத்தலில் இருந்து நம்மால் எளிதாக விடுபட முடியும். குறிப்பாக இலககியம் என்று கற்க முற்படும் போது அதிக அளவுக்கு உடன்பாட்டுப் பார்வை நமக்கான புரிதலைக் கூடுதலாகத் தரும்.

தமிழிலக்கியத்தை நான் நேயத்தோடு கற்றுக் கொண்டதாகச் சொன்னேன். கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம் என்ற அளவில் மட்டும் எடுத்துக் கொள்கிறேன். கடவுள் என்னை அச்சுறுத்தவில்லை. கடவுளிடம் எனக்கு அச்சமில்லை அதைப்போல வெறுப்புமில்லை. கடவுள் என்பதும் மனிதனின் ஒரு படைப்பு. இலக்கியத்தில் இடம்பெறும் எத்தனையோ மாந்தர்கள் இப்படிக் கலைஞர்களால் படைக்கப்பட்டவர்கள். கண்ணகி, மாதவி, மணிமேகலை முதலியவர்களும் இலக்கியத்தில் இடம்பெற்ற மாந்தர்கள். இவர்களை முற்றாக வரலாற்று மாந்தரென்று நாம் கருத வேண்டியதில்லை. குறிப்பிட்ட சில பண்புகளை, ஆற்றல்களை வெளிப்படுத்தும் மாந்தர்கள் இவர்கள். இவர்கள் வழியே வரலாற்றின் இயக்கத்தை நாம் புரிந்து கொள்கிறோம். இப்பொழுது தமிழ் இலக்கியத்தில் இடம்பெற்ற சில தெய்வப் படைப்புகள் பற்றி சுருக்கமாகப் பார்க்கலாம்.

'இறந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்
பரந்து கெடுக உலகு இயற்றியான்'

என்று வள்ளுவர் ஒரு குறளில் கூறுகிறார். வள்ளுவருக்கு கடவுள் நம்பிக்கை உள்ளது என்று வைத்துக் கொண்டாலும் இந்தக் கடவு[illegible] ஒரு மனிதனைப் போலவே வள்ளுவரால் காய முடியும். வறுமை மனிதனுக்குத் தேவை இல்லை. வறுமையைக் கடவுள் படைத்திருக்க முடியாது. வறுமையோடு தான் ஒரு மனிதன் வாழ்ந்தாக வேண்டுமென்று கடவுள் விதித்த தண்டனையாக இருக்க முடியாது. இப்படிக் கடவுள் விதிப்பான் என்றால் அவனும் வறுமை என்றால் என்னவென்று அறிந்து கொள்வதற்காக இந்த உலகில் மனிதனாகப்

பிறந்து பிச்சை எடுப்பவனாக இருந்து அழியட்டும். இப்படிப் பேசுகிற வள்ளுவருக்கு கடவுளிடம் அச்சமில்லை.

இன்னொரு குறளில், தன் குடியை உயரச் செய்வதற்காக உழைக்கும் ஒருவனுக்குத் தெய்வம் ஓடி வந்து உதவி செய்யும் என்கிறார். இப்படிச் செய்வது தான் தெய்வம். தெய்வம் இருப்பது உண்மை என்றால் இப்படிச் செய்வதன் மூலமே தெய்வம் தன்னை பெருமைப்படுத்திக் கொள்ள இயலும். தானும் கொலை செய்யாமல், கொலை செய்யப்பட்ட உயிரின் இறைச்சியை உண்ணாமலும் இருப்பவனை தெய்வமென உயிர்கள் கைகூப்பித் தொழும் என்கிறார். இன்னொரு குறளில், வையகத்தில் முறைப்படி வாழ்பவன், வானகத்திலுள்ள தெய்வத்தோடு வைத்து மதிக்கப்படுவான். ஒத்த உணர்வுடைய மனைவியோடு பெறும் இன்பம் தாமரைக் கண்ணான் உலகத்தைக் காட்டிலும் பேரின்பம் என்கிறார்.

இப்படி எல்லாம் வள்ளுவர் பேசும் பொழுது தெய்வத்தை அவர் மறுக்கவில்லை என்பதோடு தெய்வம் என்பதை எவ்வாறு புரிந்து கொள்கிறார் என்று நாம் அறிகிறோம். 'தெய்வமே' என்ற உணர்வு மனிதனுக்குள் செயல்படும் ஓர் உணர்வு – ஓர் உன்னத உணர்வு, ஓர் பேருணர்வு என்று தான் நம்மால் புரிந்து கொள்ள முடியும். மனிதனுக்குள்ளிருந்து தான் தெய்வங்கள் எழுகின்றன. மனிதன்தான் தெய்வத்தைப் படைக்கிறான். மனிதனுக்குள் தான் தெய்வம். தெய்வம் என்பதை புரிந்து கொள்ளும் போது மனிதனைப் பற்றிய புரிதலும் நமக்குள் மேம்படுகிறது. மனிதனுக்குள் செயல்படும் இந்த உணர்வு அவனை இயக்குகிறது. இலட்சியத்திற்கு வயப்பட்டவனை அந்த இலட்சியம் அவனை ஆள்வது போலத்தான் இதுவும். காதல் வயப்பட்டவனை காதல் உணர்வு ஆட்சி செய்கிறது. அருள் மனிதனை ஆள்கிறது. அறம் மனிதனை ஆள்கிறது. அற உணர்வை தெய்வத்திற்கு நிகராக அல்லது தெய்வமென வள்ளுவரால் பேசமுடியும். கணவனைத் தொழுது எழும் மனைவி தெய்வத்தைத் தொழ மாட்டாள். தொழ வேண்டியதில்லை. கணவனுக்குள்ளே தெய்வம் இருக்கிறது. இப்படியும் வள்ளுவரை நம்மால் பொருள்படுத்த இயலும்.

இங்கு இன்னொன்றையும் சொல்லலாம். கடவுள் என்ற கருத்து மனிதனுக்குள்ளிருந்து தோன்றியது என்றாலும், தொடரும் வரலாற்றுச் சூழலில் மனிதனை விட்டு விலகியும் உயர்ந்தும் சென்ற கடவுள், ஆட்சியும் அதிகாரமும் உன்னதமும் மகிமையும் பெற்று,

இறுதியில் மனிதனைத் தனக்குக் கீழ்ப்படியவைத்ததோடு கடவுளே எல்லாம் என்று ஆகிறது. மனிதன் ஒரு தூசு. அந்தக் கடவுளின் கருணையோடு தான் இயங்க முடியும் வாழ முடியும் என்றெல்லாம் சில கடுமையான போக்குகள் எழுந்தன. இவ்வகை இயக்கத்திற்கு என்னக் காரணம் என்பது பற்றி நாம் அறிந்து கொள்ளத்தான் வேண்டும். இப்படி எல்லாம் வல்லவராகக் கடவுளை உருவாக்கியவர் யார்? எத்தகையவர்? இவரது அதிகாரத்திற்குள் கடவுள் எப்படி வந்தார்? கடவுள் இவர்களுக்குள் அகப்பட்டு எவ்வாறெல்லாம் சீரழிந்தார். இப்படி எல்லாம் நாம் பார்க்கத்தான் வேண்டும். கடவுளுக்கு இப்படி உருப்பெருக்கம் மட்டுமல்ல அதிகாரம் முதலியவை வாய்த்த கதையை அறிந்து கொள்வதன் வழியே இவரை நாம் மேன்மைப்படுத்தவில்லை. மீண்டும் இவரைப் புரிந்து கொள்வதன் மூலம் இவரை நமக்குள் கொண்டு வந்து அப்புறம் இவரை நமக்குள் வைத்து. கலைத்து - அப்படிக் கலைவதன் மூலம் நமக்கான ஆளுமையை மீண்டும் நமக்குள் வளர்த்துக் கொள்வோம். இதற்குத்தான் கடவுளைப் பற்றி ஆராய்கிறோம். எந்த நிலையிலும் கடவுள் மனிதன் படைப்புத்தான் என்றத் தொடக்கப் புள்ளியை நாம் மறக்க வேண்டியதில்லை.

சிலப்பதிகாரத்தில் ஒரு காட்சி மதுரை எரிந்து கொண்டிருக்க. தெருக்களின் வழியே கண்ணகி ஆவேசத்தோடு சென்று கொண்டிருக்கிறாள். மதுரை நகரின் காவல் தெய்வம் மதுராபதி கண்ணகிக்கு முன்வர அஞ்சி தயங்கித் தயங்கி பின்னே சென்று. கண்ணகியை அழைத்து கெஞ்சிக் கேட்டு நெருப்பிலிருந்து மதுரைக்கு விடுதலை பெறுகிறாள். சிலப்பதிகாரத்தில் மேலும் இப்படிச் சில காட்சிகள். இங்கும் நாம் என்ன பார்க்கிறோம். தெய்வத்தை மனிதன் ஏவல் கொள்ள முடியும். தெய்வமும் அநீதியோடு ஒத்துழைக்கும். அப்புறம் தன் தவறுணர்ந்து மனிதனைக் கெஞ்சும். கண்ணகிக்குள்ளும் ஒரு தெய்வம் வாழ்கிறது. கண்ணகியும் தெய்வம் ஆகிறாள்.

இதைப் போல மணிமேகலையிலும். ஒரு மழை இரவில் வந்த வணிகர் ஆபுத்திரனிடம் உணவு வேண்டுகின்றனர். சிந்தா தேவி என்ற தெய்வத்திடமிருந்து ஆபுத்திரன் அமுதசுரபியைப் பெறுகிறான். தெய்வம் மனிதனின் தேவையை நிறைவு செய்கிறது. இன்னும் ஒரு காட்சி. ஆபுத்திரன் வறியவர்களுக்குத் தொடர்ந்து உணவிட. இந்திரன் தன் பதவி இழக்க நேரும் என அஞ்சி.

ஆபுத்திரனிடம் வந்து தேவர் உலகுக்கு தன்னோடு வருமாறு அழைக்கிறான். தேவர் உலகில் வறியவர் இல்லை என்று அறிந்து கொண்ட ஆபுத்திரன் எனக்கு அங்கு வேலை இல்லை என மறுத்து விடுகிறான். இங்கெல்லாம் நாம் என்ன பார்க்கிறோம். தெய்வங்கள் மனிதனோடு ஒத்துழைக்கின்றன. தேவர் உலகம் நமக்கு வேண்டியதில்லை. உலகில் வறுமை திர வேண்டும். நீதி நிலைக்க வேண்டும். இது மனிதர்களின் உலகம். இங்கு தெய்வங்கள் வந்து போகலாம். மனிதனும் தெய்வமாகலாம். இங்கு மனிதனுக்கே முதன்மை.

இன்னுமொன்றை இங்கு சொல்லலாம். இளங்கோ அடிகள் சமணர். சாத்தனார் பவுத்தர். இவர்கள் தெய்வங்களிடம் மனிதனை இவர்கள் ஒடுக்கமாட்டார்கள். இவர்களைப் போல திருவள்ளுவரும், தொல்காப்பியரும் கூட கருப்பொருள்களில் ஒன்றாகத்தான் தெய்வத்தை வைக்கிறார். நிலத்தையும் பொழுதையும் தெய்வம் படைக்கவில்லை. மனிதனோடு உறவுடையவை கருப்பொருள்கள். நிலத்தோடும் பொழுதோடும் தொடர்பு கொண்டு உருவானவை கருப்பொருள்கள். தெய்வமும் ஒரு கருப்பொருள்.

தமிழ் இலக்கியத்தின் முதற்காலத்தில் இலக்கியத்தின் முதன்மைப் பொருளாக இருந்தவன் மனிதன். இவனுடைய காதலையும் வீரத்தையும் தான் முதற்கால இலக்கியங்கள் போற்றுகின்றன. பாடுகின்றன. மனிதனிலிருந்து தான் தெய்வம் தோன்றியது என்ற கருத்தை இந்த இலக்கியங்கள் கொண்டுள்ளன. கடவுளையும் சமயத்தையும் சரியாகப் புரிந்து கொள்வதன் மூலமே. தமிழ் இலக்கியத்தையும் நம்மால் போற்ற முடியும்.

## 9

> பகுத்தறிவே போதும் என்பதில் உள்ள பிடிவாதம் இங்கு பயன்படாது. சமயம் என்பதும் மெய்யியல் என்பதும் ஒன்றல்ல.

**எ**னக்கு ஏற்பட்ட சமய அனுபவத்தை கூடியவரை உடன்பாட்டு முறையில் புரிந்து கொள்வதற்கு எனக்கு ஏற்பட்ட சில வாய்ப்புகள் குறித்து நான் தொடர்ந்து சிந்திக்கிறேன். ஒரு வேளை நான் மார்க்சியம் குறித்த அறிவைப் பெறாமல் இருந்திருப்பேன் என்றால் நான் என்ன ஆகி இருப்பேன்! சமயவாதியாகவே

இருந்திருக்கலாம் அல்லது சமயத்தை விட்டு முற்றாக விலகி நானும் ஒரு பகுத்தறிவுவாதியாக மாற்றியிருக்கலாம் இத்தகைய வாய்ப்புகள் எனக்கு இந்தச் சமூகத்தில் இருந்தன எனினும் அந்த வழிகளில் நான் செல்லவில்லை. இதுபற்றி இப்பொழுது மேலும் சிலவற்றை நினைத்துப் பார்க்கிறேன்.

பத்தாம் வகுப்புப் படித்து முடித்த நிலையில் கல்லூரிப் படிப்பைத் தொடர்வதற்கான வாய்ப்பு என் குடும்பச் சூழலில் இல்லை. திருவையாற்றில் இருக்கிற தமிழ்க் கல்லூரியில் இலவசமாகத் தமிழ் கற்க முடியும் என்று சிலர் கூறினர். என் தமிழாசிரியர் திருவையாற்றில் கற்றவர் என்பதால் அவருடைய உதவியை நாடினேன். உதவி கிடைக்கவில்லை. அப்பொழுது எனக்கு டைபாய்டு காய்ச்சல் ஏற்பட்டது. படிப்பில் என்னுடைய ஆர்வம் அதிகம் என்பது என் தந்தையாருக்குத் தெரியும். படிக்க வாய்ப்பு இல்லை என்பதன் காரணமாக எனக்குக் காய்ச்சல் வந்திருக்கலாம் என்று தந்தையார் கருதினார். கல்லூரியில் சேர்ந்து படிக்க என்னை அனுமதித்தார். கோவை அரசுக் கல்லூரியில் சேர்ந்தேன். இரண்டாண்டு கழிந்த நிலையில் அரசுக் கல்லூரியில் தமிழ் இலக்கியப் படிப்பை எடுத்து விட்டார்கள் வேறு வழியில்லாமல் மேற்படிப்புக்காக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்குச் சென்றேன். அங்கிருந்த பிரம்மாண்டமான நூலகம் என் அறிவுப் பசிக்கு நல்ல தீனியாய் அமைந்தது.

ஒரு வேளை திருவையாற்றுக்குச் செல்ல எனக்கு வாய்ப்பு கிடைத்திருக்குமானால் தமிழ்க் கல்வியில் வல்லமை உள்ள புலவர் படிப்பில் நான் தேர்ச்சி பெற்றிருப்பேன். அது அரசு கலைக் கல்லூரி. தஞ்சைப் பகுதியில் பெரியாருக்குத் தான் மாபெரும் செல்வாக்கு. பெரியாரியத்திற்கு நானும் முற்றாக வசப்பட்டிருப்பேன் கோவை அரசு கலைக் கல்லூரியில் தமிழோடு ஆங்கிலமும் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பள்ளியில் ஆங்கிலப் பாடத்தை என் உயிரைக் கொடுத்துப் படித்தேன். ஆங்கிலம் என் உயிரை வாங்கியது. அரசுக் கல்லூரியில் சேர்ந்து படிக்கத் தொடங்கிய போது ஆங்கிலம் இல்லாமல் முடியாது என்று அக்கறையோடு கற்றேன்.

இயல்பாகவே எனக்கிருந்த அறிவு வேட்கையின் காரணமாக நூலகத்திலிருந்து ஆங்கில நூல்களை எடுத்து அகராதியை வைத்துக் கொண்டு விடாப்பிடியாக படித்தேன். என்னுடைய அற்புதமான சில நண்பர்கள் ஆங்கில அகராதியைக் கூட கரைத்துக் குடித்து

இருந்தனர். திரு. காளிமுத்து, திரு. சோமசுந்தரம் என்று இந்த (இரு நண்பர்களைப் பற்றி இங்கு நான் குறிப்பிட வேண்டும். இவர்களில் ஒருவர் திரு. சோமசுந்தரம் சில ஆண்டுகளில் மரணமடைந்தார்.)

இலக்கியத் திறனாய்வு, அறிவியல், சமயம் பற்றிய நூல்களை நான் தேர்ந்தெடுத்துக் கற்றேன். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் என் எல்லையற்ற என் அறிவுத் தாகத்திற்கு அங்கிருந்த மாபெரும் நூலகம் நல்ல வாய்ப்பாய் அமைந்தது. தமிழில் கற்பதைக் காட்டிலும் ஆங்கிலத்தில் அதிகம் படித்தேன்.

BOL படித்து முடித்த நிலையில் மேலே கற்கிற வாய்ப்பை நானாகத் தவிர்த்துக் கொண்டேன். கோவைக்கு அருகில் இருந்த ஒரு தமிழ்க் கல்லூரியில் ஆசிரியப் பணிக்கு விண்ணப்பித்தேன். வேலை கிடைக்கவில்லை. ஒரு வேளை அங்கு அந்தக் கல்லூரியில் பணி வாய்ப்பு கிடைத்திருக்குமானால் நானுமொரு சைவ சமயத்தவனாய் மாறி இருக்கலாம். அதன்பிறகு தான் மார்க்சியத்தோடு எனக்கு கூடுதலான உறவு ஏற்பட்டது. சுருக்கமாக இங்கு சொன்ன விவரங்களோடு இன்னும் சிலவற்றைச் சொல்ல வேண்டும்.

இளமைக் காலத்திலிருந்து என் கிராமச் சூழலில், குடும்பச் சூழலில் சமய உணர்வுகளோடு நான் வளர்ந்து வந்தேன். பின் தொடக்கப்பள்ளித் தலைமை ஆசிரியர் சமய உணர்வோடு தமிழ் உணர்வும் மிகுதியும் கொண்டவர். எப்படியோ எனக்குள் சமய உணர்வின் தாக்கம் அந்த வயதிலேயே கூடுதலாக இருந்தது. வளர்ந்து வரும் போது விவேகானந்தர், தாகூர் எனப் படித்ததனாலும் இந்த உணர்வுகள் கூடுதலாயின. வாழ்க்கையில் இருந்த சில வகையான நெருக்கடிகளோடு என் சமய உணர்வும் இணைந்திருந்தது என்பது முக்கியமான ஒரு உண்மை. இப்பொழுது நினைத்துப் பார்க்கிறேன். ஒரு பகுத்தறிவாளனாக நான் மாறவில்லை. ஒரு சமயவாதியாகவும் நான் மாறிவிடவில்லை. மார்க்சியத்தோடு நான் நெருக்கம் கொண்டேன். ஆங்கில அறிவு இல்லை என்றால் ஒரு வேளை பகுத்தறிவுவாதியாகவோ, சமயவாதியாகவோ எனக்குள் ஒடுங்கிப் போயிருப்பேன். ஆங்கில அறிவின் மூலம்தான் பலகை அறிவு நூல்களையும் மார்க்சியத்தையும் நான் கற்க முடிந்தது.

தமிழகச் சூழலில் தமிழ்க் கல்லூரிகளில் மாணவர்களுக்குள் சைவ சமய உணர்வை விதைத்துப் பெருமளவில் வளர்க்கிறார்கள்.

இவர்களுக்கு ஆங்கிலத்தோடு உறவில்லை. இன்னும் சில தமிழ்க் கல்லூரிகளில் பெரியாரியத்தோடு பெருமளவு உறவு கொள்ள வாய்ப்பிருக்கிறது. இவர்களுக்கும் ஆங்கிலத்தோடு உறவு இல்லை. சமய வட்டாரங்களில் மார்க்சியம் கற்க வாய்ப்பில்லை என்பது மட்டுமல்ல. மார்க்சியம் பற்றிப் பேசவே கூடாது / முடியாது. பகுத்தறிவு வட்டாரத்தைப் பொறுத்தவரை மார்க்சியத்திற்கு எதிர் நிலை எடுப்பதில் குறை வைத்துக் கொள்வதில்லை. இந்தியச் சமுதாயம் ஒரு சாதியச் சமுதாயம் தான் என்பதிலிருந்து அவர்களின் பகுத்தறிவு வாதம் தொடங்குகிறது. தமிழகச் சூழலில் சில வட்டாரங்களில் பகுத்தறிவும் வேறு சில வட்டாரங்களில் சைவ சமயமும் விடாப்பிடியாகக் கற்பிக்கப்படுகின்றன. தமிழகச் சூழலில் திராவிட இயக்கமும் மார்க்சிய இயக்கமும் தமக்குள் பெரிதும் முரண்பட்ட நிலையில் சமூகம் குறித்தும் சமயம் பற்றியும் மெய்யியல் பற்றியும் சரியான அறிவை மாணவர்களும் மற்றவர்களும் பெறுவதற்கான வாய்ப்புகள் கிட்டவில்லை.

பகுத்தறிவு இயக்கம் தன்னளவில் தீவிரமாகச் செயல்படுவதற்கான தேவைகளும் தமிழகச் சூழலில் இருந்தன என்பதையும் மறுப்பதற்கு இல்லை. இவை குறித்து இங்கு நான் விவரிக்க வேண்டியதில்லை.

பெரியாரியமும், மார்க்சியமும் இணைந்து செல்வதற்கான வாய்ப்புகள் தவறின. அதைப் போலவே திராவிட இயக்கத்திற்கு எதிர்நிலை எடுத்த காரணத்தினாலேயே மார்க்சிய இயக்கங்களும் தமக்குள் சுருங்கின. நல்ல வேளையாக நான் தப்பிப் பிழைத்தேன். சிலவற்றை இங்கு நான் வெளிப்படையாகத்தான் சொல்ல வேண்டும். தமிழ்க் கல்வியும் வரலாறு, தத்துவம் முதலிய அறிவுத்துறை சார்ந்த கல்வியும் இங்கு இணைந்து செல்லவில்லை. பகுத்தறிவே போதும் என்பதில் உள்ள பிடிவாதம் இங்கு பயன்படாது. தமிழை ஒதுக்கிவிடுகிற ஆங்கிலக் கல்வியில் ஆபத்து அதிகம். சமயம் என்பதும் மெய்யியல் என்பதும் ஒன்றல்ல. மெய்யியல் கல்வி என்பதை சமயக் கல்வி என சுருக்கிவிட இயலாது. உலக அளவிலான விரிந்த பார்வை இல்லாமல் இங்கு எதையுமே சரியாகக் கற்றுக் கொள்ளவும் முடியாது.

# 10

> சிவகோசரியாருக்குச் சடங்குகள் போதும், கண்ணப்பருக்கு இறைவனைத் தன் கண்களால் கண்டாக வேண்டும். பூசலாரின் அன்பு நெஞ்சில் தான் இறைவன் குடியேறுவான்.

சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்களில் இடம்பெறும் தெய்வம், இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் முதலியவற்றை ஒரு தமிழ் மாணவனாக இருந்து என்னால் புரிந்து கொள்ளவும் இரசிக்கவும் முடிவதைப்போலவே, தமிழின் பக்தி இலக்கியங்களையும், கூடியவரை அவற்றோடு முரண்படாமல், அதேசமயம் அறிவியல் பார்வைக்கு ஒத்த முறையில் புரிந்து கொள்ளவும் என்னால் முடிகிறது. காரைக்கால் அம்மையார், திருஞான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் முதலியவர்கள் வரலாற்றில் வாழ்ந்தவர்கள். இவர்கள் மூலம் சைவ சமயம் எழுச்சியும் மேம்பாடும் அமைந்துள்ளது. இவர்கள் வாழ்வில் நிகழ்ந்தவை என எத்தனையோ அற்புதக் கதைகளைச் சேக்கிழாரும் மற்றவர்களும் கூறி உள்ளனர்.

தமிழகச் சூழலில் பகுத்தறிவுவாத நோக்கில் இந்த அற்புதக் கதைகள் கூர்மையான முறையில் மறுக்கத்தக்கவை எனினும் இந்த அளவுக்கு இவை மறுத்துரைக்கப்படுவது இல்லை. காரணம், தமிழகச் சூழலில் பார்ப்பனியத்தை கடுமையாக மறுத்து ஒதுக்குவதற்கான தேவை முதன்மையாக இருக்கும்பொழுது, தமிழ் மக்களின் சமயமான சைவத்தோடு நாம் கடுமையாக முரண்பட வேண்டாம் என்ற போக்கு கடந்த சில 10 ஆண்டுகளாக நிலவி வருகிறது. இதன் காரணமாகவே நிலக்கிழமை ஆதிக்கத்தோடு செயல்படுகின்ற தருமபுரம் முதலிய சைவ மடங்களையும் தமிழ் மக்களும் சில அரசியல் கட்சிகளும் எதிர்க்கவில்லை. நிலக்கிழமை முறைக்கு அதிக அளவு எதிர்ப்புத் தெரிவிக்கிற பொதுவுடமைக் கட்சிகள் ஓரளவுக்கேனும் தம் கடமையைச் செய்து வருகின்றனர்.

தமிழகச் சூழலில் பெரியாரும் குன்றக்குடி அடிகளும் முன்னர் மறைமலை அடிகளும் சில வகைகளில் ஒன்றுபட்டுச் செயல்பட்டனர். அரசியல் காலத்தில் அதிக அளவு மோதல்கள் இவர்களுக்கு இடையில் நிகழவில்லை. சைவ சமயம் சார்ந்த புராணங்கள், இலக்கியங்கள் பற்றியும் மறுப்புத் தெரிவிக்கிற அளவுக்கு இந்த

இலக்கியங்கள் புரிந்துகொள்ளப்படுவது இல்லை. தேவாரம், திருவாசகம் முதலியவற்றின் இசை இரசிக்கப்படுகிறது. ஞானசம்பந்தரின் தமிழ்ப்பற்று எடுத்துரைக்கப்படுகிறது. நாவுக்கரசரின் சமூக உணர்வு பாராட்டப்படுகிறது. மற்றபடி வரலாற்றில் ஆதாரம் இல்லை என்றாலும் ஏதோ சில வகைகளில் ஆதாரம் உள்ளன என்று கூறப்படும் புனைந்துரைகளை பகுத்தறிவுவாதிகள் தேவையான அளவுக்கு மறுப்பது இல்லை. ஒரு வகையில் சைவ சமயவாதிகளுக்கும், பகுத்தறிவு வாதிகளுக்கும் இடையே சமரசப் போக்கு நிலவுகிறது. எந்த அளவுக்கு இந்தப் போக்கைத் தொடர்ந்து கடைப்பிடிப்பது என்பதில் நம்மைப் பொறுத்த வரை சிலவற்றை வெளிப்படையாக இப்பொழுது பேசலாம்.

சமணத்திற்கும், பவுத்தத்திற்கும் எதிராக சைவ சமயம் நடத்திய போராட்டம் குறித்து ஏற்கனவே பல விவரங்கள் ஆதாரத்தோடு கூறப்பட்டுள்ளன. சமயங்களுக்கிடையில் முரண்பாடுகளும் மோதல்களும் வர்க்கப் போராட்டம் என்ற வகையிலும் புரிந்து கொள்ளத்தக்கவை. வரலாற்று அடிப்படையில் அவரவர்க்கான நியாயங்களை நாம் புரிந்து கொள்ள முடியும். அதைப்போலவே அவரவர் செய்யும் அநியாயங்களையும் நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். போராட்டங்கள் ஒரு கட்டத்தில் ஓய்ந்து விடுகின்றன. வென்றவர்கள்தான் நீதியாளர்கள் என்று வரலாறு எழுதப்படுகிறது. சைவத்திற்கும் இத்தகைய பேறு கிடைத்தது என்பதில் ஐயமில்லை.

இப்பொழுது இலக்கியங்களை நோக்கி நாம் பார்வை செலுத்துவோம். சம்பந்தர் முதலியவர்கள் வாழ்வில் எவ்வளவோ அற்புதங்கள் நடந்தனவாகச் சைவ சமயப் பற்றாளர்கள் திரும்பத் திரும்பச் சொல்லி மகிழ்ச்சி அடைகிறார்கள். சம்பந்தர் மூன்று வயதில் கவிதைப் பாடினார் என்று தொடங்கிப் பல அற்புதங்கள், கூன் பாண்டியனின் நோய் நீக்கினார், எலும்பைப் பெண் உரு ஆக்கினார், பாடல் பாடி அடைத்த கதவை திறக்கச் செய்தார். நாவுக்கரசர் பல்லவ மன்னன் கொடுத்த தண்டனைகளிலிருந்து பாடல் பாடி மீண்டார். திருநீற்று அறையின் வெப்பம் அவரை எதுவும் செய்யவில்லை. கல்லோடு கட்டிக் கடலில் போட்டபோதும் மிதந்து வந்தார். சுந்தரரைப் பற்றியும் இப்படிச் சில கதைகள். முதலை உண்ட பாலனை உயிர்ப்பித்தார். மாணிக்கவாசகருக்காக இறைவன் நரியைப் பரி ஆக்கினார். அப்புறம் பரியை நரி ஆக்கினார்.

வைகையில் வெள்ளம் வரச் செய்தார். வந்திக்காகப் பிரம்படி பட்டார். இப்படி எவ்வளவோ அற்புதக் கதைகள். சேக்கிழார் பாடல்களிலும் பிறர் எழுதிய பாடல்களிலும் சொல்லப்படு வதனாலேயே இவை வரலாற்று ஆதாரங்கள் என்று பேசுகிறார்கள். கல்வெட்டுகளிலும் சில விவரங்கள் கொண்டவை இடம் பெற்றுள்ளனவாம்.

கதைகள் என்ற முறையில் நாமும் இரசிக்க முடியும். இதற்கு மேல் இறைவன் அருள் கிடைத்தால் எதனையும் செய்யலாம். சிவனடியார்களை கட்டுப்படுத்த முடியாது. இப்படி எல்லாம் கூறுவதைக் கேட்டுக் கதைகளை அற்புதங்கள் என்று நம்மால் இரசிக்க முடியவில்லை. ஏதோ நடைபெற்று இருக்க வேண்டும். அவை மிகைபடுத்தியோ திரித்தோ கூறப்படுகின்றன. நடைபெற இயலாதவை கூட இறைவனின் பெருமை சொல்வதற்காக சொல்லப்படுகின்றன. சேக்கிழார் எழுதி வைத்துள்ளார் என்பதற்காகவும் மறுக்காமல் நம்ப வேண்டும். நாவுக்கரசர் முதலியவர்கள் பாடல் வரிகளும் திரித்துப் பொருள் சொல்லப்படும். எதுவும் நடக்கலாம். இயற்கை நியதிகள் இறைவனைக் கட்டுப்படுத்த முடியாது.. இவற்றை எல்லாம் சமயம் என்பதற்காக நாம் ஏற்க முடியாது.

இதைப்போல சிறுதொண்டர்தன் மகனைக் கறி சமைத்து வைத்தார். இளையான்குடி மாற நாயனார் சிவனடியார்க்குத் தன் மனைவியை விட்டுக் கொடுத்தார். இப்படி எத்தனையோ கதைகள் சேக்கிழார் புராணத்தில் இடம்பெறுகின்றன. முன்னைய வரலாற்றுச் சூழலில் எத்தனையோ அநாகரிகமான செயல்கள் நடைபெற்று இருக்கக்கூடும். இன்றும் கூட இறைவனின் பெயரால் எத்தனையோ அக்கிரமங்கள் – நரபலி முதலியவை நடைபெறுகின்றன. இவற்றை எல்லாம் வாய் மூடி மவுனிகளாக இருந்தோ, நம்மால் இரசித்துக் கொண்டோ இருக்க முடியாது. எந்தப் பெயரால் இவை சொல்லப்பட்டாலும் இவற்றோடு நமக்கு உடன்பாடு இல்லை.

இவற்றையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு நம் இரசனைக்குறியவை என்று எத்தனையோ கூறுகள் இவ்வகை இலக்கியங்களில் உள்ளன. சம்பந்தரின் தமிழ் உணர்வை, இசைத் திறனை நாம் ஏற்கிறோம். சம்பந்தர் முதலியவர்கள் தமிழைக்

காப்பாற்றி வைத்தவர்கள். தமிழுக்காகப் போராடியவர்கள் இயற்கைக்குள் சம்பந்தர் இறைவனைக் கண்டார். இயற்கையின் பேரழகை சம்பந்தர் பெருமளவுக்கு இரசித்தார். உயிரினங்களில் ஆண் பெண் உறவுக்குள் இறைவனை இவர் கண்டார். சாதியில் தாழ்ந்தவர் என்று சொல்லப்பட்ட திருப்பாணாழ்வாரை இவர் மதித்தார். கோவிலுக்குள் அழைத்துச் சென்றார். திருமண உறவை இவர் மறுக்கவில்லை. திருநாவுக்கரசர் சமூக உணர்வில் சிறந்தவர். உடல் உழைப்பைப் போற்றினார். தமிழ் இசைகக்கு தமிழ்க் கவிதைக்கு வளம் சேர்த்தார். இப்படி எவ்வளவோ நாம் கூறமுடியும்.

சுந்தரரின் வாழ்க்கைக் கதை ஒரு அற்புதமான நாடகம். இறைவன் இவருக்குத் தோழனாக இருந்தார். இறைவனோடு இவர் வாதிட்டார். இறைவனை இவர் ஏவல் கொண்டார். இறைவன் இவருக்காக தூது சென்றார். இவ்வகைக் கதைகள் இதே வடிவில் நடந்தன என்று நாம் நம்பவில்லை. இறைவனை உள்ளடக்கி இவ்வகைக் கதைகள் சொல்வதில் உள்ள சில மனிதச் சார்பான கூறுகள் நமக்கு வியப்பு அளிக்கின்றன. இறைவன் மனிதனுக்கு மிக நெருக்கமாக இருக்கிறான். இறைவனோடு மனிதன் இணைந்து செயல்படுகிறான். இப்படி நம்மைப் புரிந்து கொள்ள முடியும்.

மாணிக்கவாசகரைப் பொறுத்தவரை, நரி, பரி முதலிய கதைகளை ஆதாரமற்றவை என எளிதாக மறுத்துவிடலாம். இயற்கையின் எல்லாக் கூறுகளினுள்ளும் இவர் இறைவனைக் கண்டார். வானில் மட்டுமல்லாமல் மண்ணிலும் இறைவனைக் கண்டார். இறைவனைக் காணாத போது உள்ளம் உருகப் பாடினார். அழுதார். இவரது மனித உணர்வுகள் பேரெழுச்சியை இவரின் அற்புதமான பாடல்களில் காண்கிறோம். குருவே இவருக்கு இறைவன். குருவினுள்ளும் இவர் கண்டது இறைமை.

இனி பெரிய புராணக் கதைகள் பற்றிச் சில கூறலாம். மனுநீதிச் சோழனின் நீதி உணர்வை நாம் போற்றுகிறோம். மெய்ப்பொருள் நாயனாரை நாம் மதித்துப் போற்ற முடியும். பூசலார் தன் மனத்தினுள்ளேயே கோவில் கட்டி இறைவனை எழுந்தருள வைத்த கதை ஒரு அற்புதமான புனைவு. சிவகோசரியருக்குச் சடங்குகள் போதும். ஆனால் கண்ணப்ப நாயனாரைப் பொறுத்தவரை இறைவனைத் தன் கண்ணால் காண வேண்டும். தான் படைக்கும் உணவை அவர் உண்ண வேண்டும். அவருக்குத் தன் கண்ணை

தன்னால் தரமுடியும். இப்படி இறைவனோடு இவர் ஒன்ற முடியும். தனது சொந்த ஊரில் இருந்த போது திருநாளைப் போவார். நிம்மதியாகத் தான் இருந்தார். அப்புறம் தன் ஊருக்குள் அடங்காத - எங்கும் இருப்பதாகச் சொல்லப்படும் இறைவனைத் தேடி அலைந்தார். அந்தத் தேடலில் தன் உயிரைப் பறி கொடுத்தார்.

இன்னும் சில கதைகளைப் பார்த்தோமேயானால் திருமூலர், சித்தர்கள், தாயுமானர், இராமலிங்க வள்ளலார் - இவர்கள் அனைவருக்குள்ளும் தெய்வம் அன்பே வடிவாய் அருள் வடிவாய் விளங்கியதைக் காண்கிறோம். இவர்கள் இறைவனை இப்படித் தமக்குள்ளும் வெளியிலும் கண்டனர். இவர்கள் மக்களோடு நெருங்கி இருந்தவர்கள்.

இப்படி எல்லாம் தமிழ் இலக்கியத்தின் வழியே மனிதனுக்குள்ளும், மனிதனோடு நெருக்கமாகவும் இருக்கிற இறைவனை நாம் காண்கிறோம். இங்கெல்லாம் இறைவனுக்குள்ளும் மனிதனின் இயக்கத்தைத்தான் நாம் காண்கிறோம். காலந்தோறும் இலக்கியங்கள் வழியே கதைகள் வழியே மனிதனைப் புரிந்து கொள்ள நாம் முயற்சி செய்கிறோம். மனிதன் இயற்கையோடு, சமூகத்தோடு, உயிர்களோடு, தன்னோடு இப்படி எல்லாம் உறவு கொண்டிருக்கிறான் என்று நாம் பார்க்கிறோம். தனக்குள்ளும் மனிதன் முரண்பட்டுத் தேடுகிறான். தன்னைக் கண்டடையத் தேடுகிறான். இயற்கையை தனக்கு வசப்படுத்த முனைகிறான். நோய் நொடிகளிலிருந்து விடுபட விரும்புகிறான். காற்றும் நெருப்பும் கடலும் தன்னோடு ஒத்து இயங்க வேண்டும் என்று விரும்புகிறான். தனக்கு இயற்கைச் சக்திகள் வசப்பட வேண்டும் என்று விரும்புகிறான். தன் வாழ்க்கைத் தனக்கு அர்த்தமுள்ளதாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறான். தன்னிலிருந்தும் வாழ்க்கையிலிருந்தும் தான் அந்நியப்படுவதை விரும்பவில்லை. நீதியை விரும்புகிறான். அரசன் செய்யும் அநீதி இவனுக்கு உடன்பாடு இல்லை. எல்லோரோடும் இவன் தோழமை கொள்ள வேண்டும். அன்பு தான் தனக்கு வாழ்வாக அமைய வேண்டும். பிறருக்காகத் தன்னை இழப்பது கூடப் பேரின்பம். செல்வர்களை, புல்லியர்களை நாடி அலையக் கூடாது. தன்னை சிறுமைப்படுத்திக் கொள்ளக் கூடாது என்றும் அன்பின் வடிவமாகத் தான் மாறவேண்டும். தனக்குள்ளும் இறைவன் இருக்கிறான், தனக்கு அறிவைக் கற்பிப்பவர்

இறைவன் சடங்குகளில் தான் அடைப்பட்டு விடக் கூடாது. நீதியை நிலை நிறுத்த எதனையும் இழக்கலாம். இப்படி ஒரு பெரும் தேடலில மனிதன் இருக்கிறான். இவற்றைத் தான் இலக்கியங்களில் புராணக் கதைகளில் நாம் பார்க்கிறோம்.

இறைவனைப் பற்றிய கதைகளையும் நாம் இப்படித்தான் வாசிக்க வேண்டும். நமக்குள் வைத்து வாசிக்க வேண்டும். இறைவனை எங்கும் நாடிச் செல்ல வேண்டியதில்லை. அவன் எங்கும் இருக்கிறான். நமக்குள்ளும் இருக்கிறான். மனிதனைப் பற்றிய இத்தகைய புரிதலுக்கு மாறானவை நமக்கான கதைகள் இல்லை. இப்படிப்பட்ட கதைகளைப் புனைபவர்களுக்கு வேறுவகையான நோக்கங்கள் இருக்கக்கூடும். இந்தக் கதைகள் வழியே அவர்கள் நம்மை வசப்படுத்த விரும்புகிறார்கள். நமக்குள் தங்கள் ஆதிக்கத்தை நிறுவ விரும்புகிறார்கள். யாருடைய தேவைக்காகவோ இவர்கள் நமக்குக் கதைகள் சொல்லுகிறார்கள். சேக்கிழாரும் தன்னளவில் நல்லவர். அரசனுக்காகப் போரிட்டு அப்புறம் போர்த் தொழிலை வெறுத்து இறைவன் புகழ்ப்பாட அலைந்தவர். நாடு முழுவதும் வழங்குகிற கதைகளைத் தொகுத்து புராணம் பாடுகிறார். நமக்கு இன்று வரலாறு என்பது என்னவென்று தெரியும். புனைவுகள் என்பவை எவை என்று தெரியும். கடவுள் என்பது என்னவென்று நமக்கும் தெரியும். இந்த உலகத்தை படைக்க, இயக்க ஒருவன் தேவை இல்லை என்பதும் தெரியும். நோய் நொடிகள் ஏன் வருகின்றன என்பனவும் தெரியும். கல்லைக் கட்டிக்கொண்டு கடலில் மிதக்க முடியாது என்பதும் தெரியும். குழந்தையை கறி சமைத்து கடவுளுக்கு படைப்பது பக்தி அல்ல. மூடத்தனம் என்பது நமக்குத் தெரியும். சேக்கிழாருக்கு இவை தெரியுமா? தம் காலத்திற்கு அவர் கட்டுப்பட்டவர். தமக்குள்ளும் வெளியிலும் செயல்படும் ஆதிக்கத்திற்கு அவர் கட்டுப்பட்டவர். தன்னை அறிந்து கொள்ளாதவர். இறைவனைத் தேடினால் போதும் என்று இருந்தவர் தான் தொகுத்த கதைகளுக்குள் இறைவனைக் கண்டவர். இறைவனை மேலும் மெய்ப்பிக்க எழுதியவர். இவர் கதைகளை இன்று மறுவாசிப்பு செய்வது பற்றி நமக்குச் சிந்தனை வேண்டும். இதற்காக சமயம் பற்றிய புரிதல் வேண்டும். பகுத்தறிவு மட்டும் போதாது.

## 11

> கடவுள் என்பது ஒரு கொத்துச்சிந்தனை மற்றும் பேருணர்வு. இதைக் கலைத்துப்போட்டு கற்க வேண்டும். இப்படிக் கற்பது நம்மை, நம்வாழ்வை, நம் வரலாற்றைக் கற்பதுமாகும்.

1. என் தந்தையை நம்புகிறேன். என் தாயை நம்புகிறேன். இவர்கள் எனக்கு வாழ்வைத் தந்தார்கள். இவர்கள் என்னைக் காப்பாற்றுவார்கள். இவர்களை நான் நம்புகிறேன். எனக்கு இவர்கள் திங்கு செய்யமாட்டார்கள். எனக்கான உலகை இவர்கள் பத்திரப்படுத்தி வைத்திருப்பார்கள். என்னை இவர்கள் கோபித்துக் கொண்டாலும் தண்டித்தாலும் எனது நன்மை கருதியே செய்திருப்பார்கள். இவர்களை நான் கோபிப்பது இல்லை. இவர்களை நான் என்றும் கொண்டாடுவேன்.

ஃபிராய்டு நமக்கு ஓர் உண்மையைத் தெளிவுப் படுத்தினார். மனத்தின் ஆழத்தில் இருப்பது / இயங்குவது சூப்பர் ஈகோ – ஒரு உயர்வகையான "நான்" இதன் உருவத்தினுள் இருப்பவர் என் தந்தை. இவர் தான் எனக்கு அறத்தைக் கற்பித்தார். நன்மை தீமைகளை உணர்த்தினார். நான் தவறு செய்த போது என்னைத் தண்டிப்பதன் மூலமும் எனக்குள் அற உணர்வைப் பதிய வைத்தவர் இவர்தான். இவர் தான் எனக்கு இன்றும் மனச்சான்றாய் விளங்குகிறார். எந்த வயதிலும் நான் தவறு செய்கிற போதெல்லாம் ஓர் உறுத்தலாய் இருந்து என்னை நெறிப்படுத்துபவர் இவர்தான். இந்த என் தந்தையின் வடிவில்தான் இறைவனும் எனக்குள் தங்கி இருக்கிறார். அதாவது எனக்குள் பதிந்திருக்கிற என் தந்தைதான் எனக்குள் இறைவனாகிறார். எனக்கு அனுபவங்கள் தொடர்ந்து சேரும் பொழுது என் தந்தையின் வடிவில் எனக்குள் பதிந்திருக்கிற இறைவனைத்தான் - இறை உணர்வைத் தான் நான் எனக்குள் வளர்த்துக் கொள்கிறேன்.

2. இந்தியச் சமூகத்தில் குடும்பம் என்ற நிறுவனம் வலிமையானது. தந்தைதான் இங்கு எல்லோரையும் நிர்வாகம் செய்பவர். ஆள்பவர். இவரிடமிருந்துதான் எல்லாவற்றையும் குடும்பத்தின் உறுப்பினர் பெறுகின்றனர். அனைவருக்குள்ளும் ஒன்றிய உணர்வை இவர்தான் வளர்க்கிறார். நீதியை நிர்வாகம் செய்பவர் இவர்தான். குடும்பம் ஒரு குறுகிய வடிவம். எத்தனையோ குடும்பங்களை நிர்வாகம் செய்வது, கட்டிக் காப்பது – ஊர் நிர்வாகம் அதாவது பஞ்சாயத்து /

கிராம சபை. இங்குள்ள பெரியவர்கள் ஊர் மக்களை நிர்வாகம் செய்பவர். காப்பாற்றுபவர். அவரவர்க்கு என்ன தேவையோ அதை நிறைவேற்றுபவர். இவர்களது ஆட்சியில் எல்லாமே நலமாய் நடைபெறும். மன்னனும் இத்தகையவன். எல்லோரையும் காப்பாற்றுபவன். தவறு எதுவும் நேராமல் தண்டனை செய்தும் காப்பாற்றுபவன்.

கடவுளும் இத்தகையவர்தான். இவர்தான் நம் எல்லோருக்கும் உயிர் வழங்கியவர். எங்கு நான் பிறக்க வேண்டுமோ அங்கு என்னை பிறப்பித்தவர். என் முன்வினை முதலியவற்றை ஆராய்ந்து பார்த்து எனக்கு இந்தப் பிறப்பை வழங்கியவர். இவர்தான் இந்த உலகத்தையும், இயற்கையையும் படைத்தவர். இவரது கருணையால்தான் மழை பெய்கிறது. ஆறுகள் ஓடுகின்றன. நிலம் விளைகிறது. இவர் நேரடியாக நம் முன் வருவதில்லை. மன்னன் வடிவிலிருந்து மககளை காப்பவரும் இவர்தான். தந்தை, தாய், குரு வடிவிலிருந்தும் நம்மை இவர்தான் வாழ்விக்கிறார். மன்னனை இறைவனாக நாம் மதிக்கிறோம். தாய்,தந்தை, குரு முதலியவர்களின் உள்ளும் இறைவனை காண்கிறோம். இறைவனுடைய அருளாட்சியில் எல்லாமே பாதுகாப்பாய் இயங்குகின்றன. எல்லா நன்மைகளும் நமக்கு விளைகின்றன. திமையிலிருந்து நம்மை இவர்தான் தடுத்தாட்கொள்கிறார்.

3. இதுவரை ஒரு வகையான விவரிப்பை நாம் செய்திருக்கிறோம். கடவுள் என்ற கருத்து இந்திய சமூகத்தில் இத்தகைய இயக்கம் கொண்டதாய் இருபபதை இந்த விவரிப்பு நமக்குத் தெளிவுபடுத்துகிறது. இந்த விவரிப்பிலிருந்து மேலும் ஓர் உண்மையை நம்மால விளங்கிக் கொள்ள முடியும். சமயவாதிகள் இப்படி ஒரு விவரிப்பை நமக்குத் தந்திருக்கிறார்கள். கடவுள்தான் இந்த உலகத்தை சூரியன் முதலிய விண்மீன்களை படைத்தார். அப்புறம் இயற்கை முதலியவற்றையும் நம் வாழ்விற்கு ஒத்தமுறையில் உருவாக்கினார். இவரது கருணை இல்லாமல் நம் வாழ்வுக்கு ஒத்த உலகம் உருவாகி இருக்க முடியாது. இறைவனுடைய படைப்பு எனபது இத்தகையது. நம்மைப் படைத்து, நமக்கான உலகச் சூழலைப் படைத்து நம்மை இவர்தான் காப்பாற்றி வருகிறார். இவர்தான் நமக்குள் ஆன்மாவாகவும் தங்கி இருக்கிறார். இவரை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இவர் இல்லாமல் இங்கு அணுவும் அசைவதில்லை. இவர்தான் அறத்தின் வடிவமாக விளங்குகிறார்.

ஒரு காலத்தில் உலகம் கரடுமுரடாக இருந்தது. மெல்ல மெல்ல எல்லாவற்றையும் பக்குவப்படுத்தியவர் இவர்தான். விளைச்சலுக்கு பக்குவப்பட்டதைப் போல, விதை முளைப்பதற்கு இயற்கையின் எல்லாக் கூறுகளும் பக்குவமாய் உருவானதைப் போல இறைவன் எல்லாவற்றையும் நம் நலன்களுக்கு ஒத்தமுறையில் பக்குவப்படுத்தி வைத்திருக்கிறார். இவரது அருளையும் பேராற்றலையும் புரிந்து கொள்ள வேண்டும். இதைப் புரிந்து கொள்வது தான் நம் வாழ்வின் பயன். இவரைப் புரிந்து கொள்வதன் மூலமே நம் வாழ்க்கை நிறைவு பெறும். இவரது நெறியில் இயங்குவதுதான் நமக்கு வாழ்வின் நெறியாக இருக்க முடியும். இவர்தான் மன்னனாய், குருவாய், தாயாய், தந்தையாய் இயங்குகிறார். நாம் இவரை நம்ப வேண்டும். நம்பிக்கையோடு நாம் இருக்க வேண்டும். இவரை நம்பினால் நமக்கு எல்லாமே நல்லதாய் முடியும். இவர் கையில் நம்மை ஒப்படைத்துக் கொள்ள வேண்டும். எல்லாம் வல்லவர் இவர். எல்லாம் தெரிந்தவர் இவர். நமக்கு என்ன தெரியும். இவரை நம்பி இருப்பதன் மூலமே நமக்கு அறிவு வளரும். இவர்தான் நமக்கு அறிவாய் விளங்குகிறார். இவரது நல்ல குணங்களை நாம் ஆராதிக்க வேண்டும். ஆராதிப்பதன் மூலம் நாமும் சில நல்ல குணங்களைப் பெற முடியும். இவர் அருளைப் பெற முடியும். பிறப்பையும் மரணத்தையும் இவர்தான் நிர்ணயிக்கிறார். நமக்கு எது நல்லதோ அதை இவர் வழங்குகிறார். எதையும் குறையென நாம் கருதக் கூடாது. குறையின் மூலமும் நாம் நிறைவைப் பெற முடியும். நமக்குக் கிடைத்த இந்த வாழ்வை இறைவனை நோக்கி நாம் வாழ வேண்டும். யாரையும் நோக வேண்டியதில்லை. எல்லாமே இங்கு குறைவில்லாமல் அமைந்திருக்கின்றன. இறைவனை நம்புவதன் மூலமே நாம் நிறைவைப் பெற முடியும். இறைவனுக்கெதிராக செயல்படுவதன் மூலமே நாம் தீமைகளுக்குள் மாட்டிக் கொள்கிறோம். தீமைகள் என்பனவும் அவன் அருள் ஆற்றலினால் விலகும்.

4. சமயம் தரும் விவரிப்பு என இதை நாம் புரிந்துகொள்ள முடியும். இவ்வகைச் சிந்தனைகள் பெரும்பாலான சமயங்களில் அமைந்திருக் கின்றன. இவற்றையெல்லாம் இதே வடிவில் உண்மை என நாம் ஒப்புக் கொள்வதில்லை. பழங்கால இருள் சூழலிலிருந்து நாம் அதிக அளவிலான வெளிச்சத்திற்கு வந்திருக்கிறோம். சமயவாதிகள் சொல்வதை இன்று நாம் அதே வடிவில் ஏற்பதில்லை.

வரலாறு, அறிவியல் + பொருளியல், உளவியல் என எவ்வளவோ, வகை வகையான விளக்கங்களை நாம் பெற்றிருக்கிறோம். இந்த அடிப்படைகளிலிருந்து நாம் எத்தகைய புரிதலுக்கு வர முடியும் சுருக்கமாகப் பார்க்கலாம்.

தந்தையார் நமக்குச் சில நன்மைகளைச் செய்கிறார் என்பது உண்மைதான். தாயாரும் செய்கிறார். ஆசிரியரும் சிலவற்றை நமக்குக் கற்பிக்கிறார். குடும்பம் என்ற அமைப்பில்லாமல் முடியாது. ஊர் நிர்வாகமும் தேவைதான். அரசு என்பதையும் நாம் ஒதுக்க முடியாது. ஆதிகால உலகம் யாருக்கும் பாதுகாபபானதாக இல்லை. இயற்கை கொடூரமாகத்தான் இருந்தது. வாழ்க்கை என்பது அங்கு பாதுகாப்பாக இல்லை. வரலாற்றில் எவ்வளவோ நாம் கடந்து வந்திருக்கிறோம். இயற்கைச் சூழலை நமக்கு ஏற்றவிதமாய் மாற்றி இருக்கிறோம். கூடிய வரை நமக்கு ஏற்ற வாழ்வியலை, வரலாற்றை, பொருளியலைப் படைத்து வருகிறோம். இயற்கைச் சூழலையும் எத்தனையோ கருவிகளையும் படைத்து மாற்றி வந்திருக்கிறோம். எத்தனையோ சிக்கல்களை, தடங்கல்களை கடந்து வந்திருக்கிறோம். கூடிய வரை வாழ்க்கையை நமக்கு எற்றதாக, வசதியுடையதாக மாற்றி வந்திருக்கிறோம்.

இந்த வாழ்க்கையை நேசிக்கிறோம். இயற்கையை உறவுகளை நேசிக்கிறோம். இந்த உலகை இன்னும் நம் வாழ்வுக்கு ஒத்ததாக நாம் மாற்ற முடியும் என நம்புகிறோம். தடைகள், சிக்கல்கள், கொடுமைகள் முதலியவற்றை கடந்து வந்ததன் மூலம் நாம் வலிமை பெற்றிருக்கிறோம். அனுபவங்கள் பெற்றிருக்கிறோம். அறிவைப் பெற்றிருக்கிறோம். தடைகளை வென்றதன் மூலமாகத் தான் நாம் ஆற்றல்கள் பெற்றோம். தடைகள் தான் நம்மை வளர்த்தன. தீமைகள், கொடுமைகள் என்பனவெல்லாம் நம் ஆதிக்கங்களுக்கு காரணமாய் அமைந்திருக் கின்றன.

5. இப்பொழுது எல்லாவற்றையும் திரும்பிப் பார்க்கிற பொழுது நமக்குத் தீமை செய்தவர்களையும் கொடியவர்களையும் கூட நாம் நேசிக்கிறோம். எங்கு செல்வது? எங்கே செல்வது? என்பனவெல்லாம் இன்று நாம் அறிந்திருக்கிறோம். குடும்பம், உயிர், நிலம், இயற்கை, பருவம், அரசு, வானம் முதலிய அனைத்தையும் உள்ளடக்கிய உலகச் சூழலில் கூடியவரை தேவையான அளவுக்கு வாழ்வையும் உறவுகளையும் வசதியாக மாற்றிக் கொண்டவர்காளய் நாம் வாழ்கிறோம். கணவன் என்னதான் கொடுமை செய்தாலும்

அவனைவிட்டால் தனக்கு வாழ்க்கை இல்லை என்று கருதுகிற ஒரு மனைவியைப் போல, என்னதான் தண்டித்தாலும் தனக்கு ஆதரவாக இருக்கிற ஒரு தந்தையைப் போல, எத்தகைய சூழலிலும் தன்னை நேசிக்கிற ஒரு தாயைப் போல, எப்பொழுதாவது கிடைத்த போதிலும் தனக்கு அறிவைத் தருகிற ஒரு ஆசிரியரைப் போல, ஒரு பருவத்தில் பொய்த்தாலும் அடுத்து வரும் இன்னொரு பருவத்தில் மழை பெய்யத்தவறாத வானத்தைப் போல என்னதான் கொடியவன் என்றாலும் அந்த அரசனை விட முடியாத ஒரு குடிமகனைப் போல இந்த வாழக்கையை உதறிக் கொள்ள முடிவதில்லை.

எப்படியும் இந்த வாழ்க்கையில் உச்ச அளவில் சில இன்பங்கள் கிடைக்கின்றன. நாமும் சில சாதனைகளைச் செய்ய வாழ்க்கை நமக்கு வாய்ப்பு அளிக்கிறது. தோல்வியையும் நம்மால் வெற்றி ஆக்கிக் கொள்ள முடியும். மரணம் நமக்கு மட்டுமல்லாமல் எல்லோருக்கும் தான் வருகிறது. துயரங்கள் வாழ்க்கையை அடைத்துக் கொள்வதில்லை. துயரத்திலும் ஒரு சுகமிருக்கிறது. இப்படி நமக்குக் கிடைத்த வாழ்க்கை ஒரு பேறு. இதை வாழத்தான் வேண்டும். இந்த வாழ்க்கையை நமக்கு அருளியவர் இறைவன். எல்லாவற்றுக்கும் அவனே பொறுப்பு. இப்படித்தான் நம்மவர் சிந்தனை செய்து இறைவனை ஏற்கின்றனர்.

சமயவாதி இயற்கையின் பேரியக்கத்திற்குள் இருந்து இறைவன் என ஒன்றைக் கண்டறிந்து மற்றவர்களுக்குச் சொன்னார். மற்றவர்களும் இதைச் சரியென்று ஒப்புக் கொண்டனர். வாழ்வின் மீது அவர்கள் கொண்ட நேசம் இயல்பாகவே இறைவனை ஏற்றுக் கொள்கிறது. இப்படித்தான் இறைவனைப் பற்றிய நம்பிக்கை வாழ்வுக்குள் வேர் ஊன்றி, கிளை பரப்பி இருக்கிறது. சமயவாதி, அரசன் முதலியவர் களோடு இணைந்திருந்தான். இறைவனைப் பற்றிய நம்பிக்கை இப்படியும் வலுப்பட்டது. இந்தியாவின் குடும்பச் சூழலில் ஒரு தந்தையைப் போல இறைவனும் மக்களின் நம்பிக்கைக்குள் பற்றிப் படர்ந்தான்.

இந்திய மக்களின் இறைவனைப் பற்றிய இத்தகைய நம்பிக்கை எல்லாக் காலங்களிலும் ஒரே படித்தாக இருக்கவில்லை. இருக்கவும் முடியாது. வாழ்வுக்குள்ளிருந்தே கேள்விகள் எழுகின்றன. இறைவனும் கேள்விக்குள்ளாகிறான். ஒரு கட்டத்தில் மறுக்கப்படவும் செய்கிறான். இறைவன் ஒரு அதிகாரி, அரசனுக்கு ஆதரவானவன் சமயவாதிக்கு வேண்டியவன். இவன் நமக்குத் தேவை இல்லை. இவன்

இல்லாமலும் நாம் வாழ முடியும். வாழ்க்கையில் முற்றான பாதுகாப்பு இல்லை. இயற்கை எல்லாச சமயங்களிலும் கருணை உடையதாகவும் இல்லை. துயரங்களைக் கொடியவர்கள் செய்கிறார்கள். அவர்கள் தேவைக்காக நம்மை வதைக்கிறார்கள். இவர்களுக்குள் இறைவன் இருக்க முடியாது. மரணம் இளமையிலும் வந்து விடுகிறது. குழந்தைகள் சாகிறார்கள். இந்த வாழ்க்கையில் நிரந்தரம் என எதுவும் இல்லை. தீமைகள், கொடுமைகள் செய்பவர் இறைவனாக இருக்க முடியாது. இதைச் செய்பவன் யார் என்பதும் நமக்குத் தெளிவாய் தெரிகிறது. ஆகவே எல்லாவற்றையும் இறைவன் செய்கிறான் என்று நம்பி இருக்க வேண்டியதில்லை. தந்தையும் கொடுமைக்காரராக இருக்க முடியும். ஊர்ப் பெரியவர்களில் தீயவர்கள் இருக்கிறார்கள். எல்லாமே நன்மைக்குத் தான் என்பது உண்மை இல்லை. சமயவாதி முற்றான அறிவுடையவனாக இல்லை. அவனுக்குள்ளும் தன்னலம் இருக்கிறது. அவனும் மக்களை ஏமாற்றுகிறான். அவனும் ஆசைகளோடுதான் வாழ்கிறான். அவனை நாம் நம்ப வேண்டியதில்லை.

6. இறை மறுப்பு என்பதும் இப்படி வாழ்வுக்குள்ளிருந்து இயல்பாக எழுகிறது. நவீன காலத்திற்கு வரும் பொழுது இறை நம்பிக்கை கலகலத்துப் போகிறது. பிரபஞ்சம் நம்மைத் தோற்றுவிப்பதற்காக இயங்கவில்லை. உயிர்களின் தோற்றம் ஒரு தற்செயல் நிகழ்ச்சி. பிரபஞ்ச இயக்கம் எத்தகைய காரணத்தோடும் அர்த்தத்தோடும் நடைபெறவில்லை. அது தானே இயங்குகிறது. இந்த இயக்கத்தில் முரண்களுக்கும் இடமுண்டு. மனித வாழ்வுக்கு அர்த்தமில்லை. கடவுள் என்பது வெற்றுக் கற்பனை. வாழ்வுக்கு அர்த்தமென நாம்தான் கற்பித்துக் கொள்கிறோம்.

ஒரு பாதுகாப்புக்காகத்தான் உலகம் நமக்காக இயங்குகிறது என்று நாம் கற்பனை செய்து கொள்கிறோம். இவ்வாறு நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம். எல்லாமே பொய் என நினைக்கிற போது நாம் திகைத்துப் போகிறோம். அடுத்த அடி நம்மால் வைக்க முடியாது. ஒருமுறைத் தவறினாலும் இன்னொரு பருவத்தில் மழைப் பெய்வதைக் கொண்டு வானம் நம்மைக் கைவிடாது என்று கற்பனை செய்கிறோம். நம் சொந்த வாழ்க்கையை நாமே எதிர் கொள்வதற்கு அஞ்சுகிறோம். ஒரு தந்தையைப் போல நம்மை ஒருவர் காப்பாற்றுவார் என நமக்கு நாமே கதை சொல்கிறோம்.

7. பிரபஞ்சத்தின் மாபெரும் இயக்கத்தில் ஒருமை இருக்கிறது.

சீர்மை இருக்கிறது என்றெல்லாம் நம்மை நாமே நம்பவைத்துக் கொள்கிறோம். யாராவது ஒரு பெரியவர் முன் வந்து இப்படி எல்லாம் சொல்வதை நம்புகிறோம். நம் மீது நமக்கு நம்பிக்கை இல்லை. இயற்கையின் பேரியக்கத்தைப் புரிந்து கொள்கிற அளவு நமக்கு அறிவு இல்லை. சில சமயம் நாமும் எதிர்பார்க்காதவை நடைபெறுகின்றன. புரிந்து கொள்வதற்கான முயற்சியைத் தள்ளி வைத்துவிட்டு எவரோ சொல்லும் கதையை நம்புகிறோம். உண்மையைத் தேடிச் செல்லும் பயணம் கடுமையான பயணம். தொடர்ச்சியான பயணம். இன்னும் ஆயிரமாண்டுகள் இந்தப் பயணத்தில் சென்றாக வேண்டும். நமக்கு முடியாது. இடைஇடையே நிம்மதி வேண்டும். பொய்யான நம்பிக்கை என்றாலும் அது தரும் ஆறுதலை நம்மால் மறுப்பதற்கில்லை. அரசனை நம்புகிறோம். அதிகாரியை நம்புகிறோம். மதவாதியை ஏற்கிறோம். நம்மை இழப்பதற்கும் தயாராகத்தான் இருக்கிறோம். எத்தனை நேரத்திற்கு நம்மை நாமே சுமந்து கொண்டிருக்க முடியும். யார் தலைக்காவது இந்தச் சுமையை மாற்றிக் கொள்ள வேண்டும். கடவுள் இந்தச் சுமையை ஏற்றுக் கொள்வதாக சொல்லும் போது நாம் ஏன் மறுக்க வேண்டும். இப்படி எல்லாம் நினைப்பது முட்டாள் தனம் என்றாலும் இது சுகமாகத்தான் இருக்கிறது.

இப்படியும் கடவுள் நமக்குள் வாழ்கிறார். இன்னும் எவ்வளவோ காலத்திற்கு இவர் நம்மோடு வாழ்வார். நம்மை ஏமாற்றி, நம் அறிவைத் தின்று, நம் பண்புகளை அபகரித்துக் கொண்டு, ஒரு கள்வனைப் போல நமக்கு நன்மை செய்வதாக நடிப்பவனைப் போல கடவுள் நம்மோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார். இவரை மறுக்கத் துணிவு இல்லாமல் இவரோடு சமரசம் செய்து கொண்டிருக்கிறோம். இந்த உலகத்தை முற்றாக நம் அறிவின் ஆய்வுக்கு உட்படுத்த முடியாத நிலையில், உலக அளவிலான வரலாற்று இயக்கத்தை நம் கட்டுக்குள் கொண்டு வர இயலாத நிலையில், நம் புலன்களை முழு அளவில் இயக்கத்திற்குள் கொண்டு வர இயலாத நிலையில், இன்பத்திற்கும், போதைக்கும் மயக்கத்திற்கும் வசப்படுகிற மனநிலையிலிருந்து நம்மை மீட்டுக் கொள்ள இயலாத நிலையிலிருந்து இந்த இறைவனுக்கு நாம் இடம் கொடுத்து அவனுக்கு அடிமைப்பட்டு வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இவனை தூக்கி எறிவது எளிதான காரியமாக இல்லை. இவனுக்கு இருக்கிற அதிகாரம் நாமே இவனுக்குத் தந்தது – நாம் இழந்த அதிகாரம். நம் அளவில் இருக்கிற குறைபாட்டுக்குள்

இவன் வந்து தங்கி இருக்கிறான். வாழ்க்கை நம் வசத்தில் இல்லை அல்லது இவன் வசத்தில் வாழ்க்கையை நாம் விட்டுக் கொடுத்திருக்கிறோம். நம்மை நாமே மீட்டுக் கொள்ள முடியாமல் இவனுக்குள் கட்டுப்பட்டுக் கிடக்கிறோம்.

8. இறுதியாக இப்படிச் சொல்லலாம். கடவுள் என்பது இல்லை என்றே வைத்துக் கொண்டாலும் இவரை ஒற்றைச் சிந்தனைக்குள் அடக்க முடியாது. கடவுள் என்பது ஒரு கொத்துச் சிந்தனை / உணர்வு. இந்தக் கொத்துச் சிந்தனையைக் கலைத்துப் போடுவது கடினம். இந்தக் கொத்துச் சிந்தனைக்குள் எத்தனைக் கூறுகள் உள்ளன என்றும் வரையறுப்பது கடினம். எனினும் கலைத்துப் போடுவதில் கவனத்தோடு இருக்கிறோம். இவரைப் புரிந்து கொள்வது நம்மை நாமே புரிந்து கொள்வதும், படைத்துக் கொள்வதுமாகிறது. ஆகவேதான் இந்த முயற்சியில் விடாது தொடர்கிறோம். கடவுள் எத்தனை அடர்த்தியானவர், கனமானவர் என்று சிந்திக்கிறபோது நாம் வியப்படைகிறோம். இவரை ஒரே அடியில் தூக்கி எறியும் போது நம்மை நாமே இழக்கவும் நேரிடும். ஆகவே தான் இவரை நாம் ஆராய்கிறோம்.

## 12

> மனிதனுக்குள் செயல்படுவது ஆறறிவுமட்டும்தான் என்று சொல்வதற்கில்லை. ஏழாவது, எட்டாவது அறிவு என்றுகூட இருக்க முடியும்.

கடவுளைப் பற்றித் தொடர்ந்து சிந்திக்கிற போது இடையில் எப்படியோ கைரேகை சோதிடம் ஆவிகள் பற்றிய சிக்கலும் உள் நுழைந்து விடுகின்றது. இவற்றுக்கிடையில் இன்றியமையாத தொடர்புகள் ஏதேனும் உண்டா என்பதை உறுதிப்படுத்த இயலவில்லை. புலன் கடந்த அனுபவங்கள் என்ற வகையில் இவை தமக்குள் இணைந்து நமக்குள் வந்து விடுகின்றன. இது குறித்து நம் ஆய்வுக்கு ஏதேனும் தட்டுப்படுமா? என்ற கேள்வி நமக்குள் எழுகிறது. இவற்றையெல்லாம் உடனடியாக நம்புபவர்க்கு இப்படிக் கேள்விகள் இல்லை. நம்ப இயலாமல் இவற்றை ஆய்வுக்கு உட்படுத்தும் நம்மைப் போன்றவர்களுக்குத்தான் இவ்வகைச் சிக்கல்.

சில நாட்களுக்கு முன்பு என்னைச் சந்திக்க இரண்டு நண்பர்கள் வந்திருந்தனர். முதல் நாள் (30.10.2004 – சனிக்கிழமை) வந்தவர் திரு. கார்த்திகேயன். கடந்த இரண்டு ஆண்டுகளாக இவர் என்னைச் சந்திக்கவில்லை. இயற்கை வேளாண்மையில் பெரும் ஈடுபாடுக் கொண்டவர். இவரது தந்தையார் வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்றப் பிறகும் சிலவகை ஆன்மீக இயக்கங்களில் தொடர்பு கொண்டு ஓயாது ஈடுபட்டு வருகிறார். பசுமைப்புரட்சியை முழுமையாக நம்புபவர் இவரது மகன் கார்த்திகேயன். இயற்கை வேளாண்மையை முழுமையாக நம்புபவர். இருவருக்கும் இடையில் கடுமையான முரண்பாடு. தந்தையாரின் உறவை முறித்துக் கொண்டு வெளியே வந்துவிட்டார். பூ. காகோ முதற்கொண்டு எத்தனையோ அறிஞர் நூல்களை, என்ன விலை என்றாலும் வாங்கிப் படித்தவர். எனக்கு நிறைய சொல்லுவார். மரங்களோடு உரையாடும் தன் அனுபவத்தை மிகுந்த மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் எனக்கு ஒரு சமயம் சொன்னார்.

வேளாண்மையிலிருந்து விடுபட்ட நிலையில் ஒரு புதுவகையான படிப்பில் இரண்டு ஆண்டுகளை செலவழித்ததாகக் கூறினார். சோவியத் அறிஞர் ஒருவரின் ஆய்வு நூலைப் படித்தது பற்றிச் சொன்னார். பெருவெடிப்புக்கு முன்னர் என்ன இருந்திருக்கக் கூடும் என்ற கேள்வியை அந்த சோவியத் அறிஞர் எழுப்புகிறாராம். எதுவுமில்லாத பாழ்–வெறுமை. அதற்குள் இருந்து மாபெரும் ஆற்றல் வெளிப்பட்டு இருக்க வேண்டும். வெறுமை தான் என்ற போதிலும் அதிலிருந்துதான் எல்லாமே தோன்றி இருக்க முடியும் என்கிறாராம் அந்த அறிவியல் அறிஞர்.

சோவியத்தில் நடைபெற்ற ஆய்வு ஒன்றை அந்த நூலில் குறிப்பிடுகிறாராம். ஒருவகையான ஆய்வுக் கூடம். அதற்குள் ஒருவர் அமர்ந்து சிலவற்றைச் சிந்திக்கிறார். அவர் வெளியே வந்த பிறகும் அந்த ஆய்வுக் கூடத்தில் அலைந்து கொண்டிருக்கிற அவரது சிந்தனைகளை அடுத்த 5 நாள் வரை பதிவு செய்ய முடிந்திருக்கிறதாம். கருவிகளின் நுட்பம் கூடும்பொழுது எவ்வளவோ காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர்களின் சிந்தனையைக் கூடப் பதிவு செய்து வெளிப்படுத்த முடியும் என்பதாக அவர் கூறுகிறாராம்.

ஸ்டீபன் ஆக்கின்ஸ் ஆய்வுப் பற்றியும் கார்த்திகேயன் படித்திருக்கிறார். முன்பெல்லாம் கருந்துளைகள் பற்றி பேசிய ஆக்கின்ஸ் இப்பொழுது அவற்றை Dark Energy என்று பெயரிட்டுப் பேசுகிறாராம். அவை மாபெரும் ஆற்றல் களங்கள். இவற்றிலிருந்து புதிய புதிய பிரபஞ்சம் வெளிப்பட வாய்ப்பு உண்டாம். குவாண்டம் இயற்பியல் பற்றி ஏற்கனவே நானும் அறிந்திருக்கிறேன். நண்பரும் பேசுகிறார். குவாண்டம் இயற்பியல் என்று பேசத் தொடங்கினால் நானும் இல்லை நீங்களும் இல்லை. எந்த ஒரு புள்ளியையும் முன் வைத்துப் பேச இயலாது. மாபெரும் வெறுமைக்குள் நாம் போய்விடுகிறோம். நாம் எங்கிருக்கிறோம் என்று நமக்கே தெரிவதில்லை. இரஷிய அறிஞரின் அனுபவமும் இதைப் போன்றதுதான்.

நீதிபதி கிருஷ்ணய்யரின் நூல் ஒன்றைப் பற்றிக் கார்த்திகேயன் குறிப்பிடுகிறார். ஆவிகள் பற்றி உலக அளவில் ஆய்வுகள் நடைபெறுகின்றன. கிருஷ்ணய்யர் அமெரிக்காவுக்குச் சென்ற பொழுது ஆவிகளோடு உரையாடுவது பற்றி நேரிடையாக அறிந்து கொண்டாராம். கிருஷ்ணய்யரின் அனுபவங்கள் மறுக்கக்கூடியவை அல்ல.

அடுத்த நாள் (31.10.2004 – ஞாயிறு) கரூர் நண்பர் சபாபதி என்னைப் பார்க்க வந்தார். இந்திய அரசுப் பணித் தேர்வுக்காக பல ஆண்டுகளாக முயற்சி செய்கிறார். கரூரிலிருந்து தொலைபேசி மூலம் என்னோடு சில சமயம் தொடர்புக் கொண்டவர். வாழ்வியல் பற்றி அவருக்கும் நிறைய கேள்விகள் உண்டு. இடையிலும் அவர் என்னைச் சந்தித்து உரையாடி இருக்கிறார். இப்பொழுது என்னைச் சந்திக்க வந்த பொழுது எடுத்த எடுப்பிலேயே "என் சந்தேகங்கள் இப்பொழுது தீர்ந்துவிட்டன. கணியன் பூங்குன்றனார் சொல்வது முற்றிலும் உண்மை" என்றார். வியப்போடு அவரை துருவித்துருவிப் பல கேள்விகள் கேட்டேன்.

கிருஷ்ணபதாதியின் சோதிடக் கணிப்பு முறையை இவர் விரிவாகப் படித்ததோடு தன் வாழ்க்கை நிகழ்ச்சிகள் பலவற்றை அந்தக் கணிப்பு முறையிலிருந்து முற்றாக விளங்கிக் கொண்டதாகக் கூறினார். எல்லாமே முன்பே தீர்மானித்தபடி நடைபெறுகின்றன என்று உறுதியாகச் சொன்னார். தன் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவற்றையும், நட்சத்திரங்கள், ராசி என்ற முறையில் விவரித்தார். எனக்குச் சில கேள்விகள். ஏதாவது ஒரு சிக்கல் என்றால் – அது

ராசியின் விளைவு என்று வைத்துக் கொள்ளலாம். நானாகச் சிந்திக்கிறேன். பலரோடு கலந்துக் கொள்கிறேன். சிலர் உதவி கிடைக்கிறது. பிறகு சிக்கல் தீர்கிறது என்றால் இது எப்படிச் சாத்தியம் என்று கேட்கிறேன். ஒரு ராசி எனக்குத் துயரம் தர, அந்தத் துயரத்திலிருந்து விடுபடும் முறையில் மற்ற ராசிகள் எனக்கு உதவிக்கு வருகின்றனவா அல்லது துயரம் தந்த ராசிக்குள்ளிருந்தே துயரத்திலிருந்து நான் விடுபடுவதற்கான முயற்சியும் எனக்குள் தூண்டப்படுகிறதா? நண்பர் பதில் சொல்லவில்லை. எனினும் தன் நம்பிக்கையை அழுத்தமாகச் சொல்கிறார். கேள்விகள் அப்படியே இருக்கின்றன பதில் இல்லை.

ஏற்கனவே எனக்குள் இருந்த கைரேகை, சோதிடம் முதலியவை பற்றிய கேள்விகள் தான் நண்பர் கார்த்திகேயனோடும், நண்பர் சபாபதியோடும் பேசுகிறபொழுது எனக்குள் மீண்டும் வலுவோடு எழுகின்றன. கடவுள் என்ற சிக்கல் முற்றாக எனக்குள் தீரவில்லை என்பது ஒருபக்கம். இன்னொரு பக்கத்தில் அறிவியலும் ஆவிகளும் கைரேகை முதலியனவும் சார்ந்தெழும் கேள்விகள். இவ்வகையான சிக்கல் எழாத வரை நிம்மதியோடு இருக்க முடியும். எழுந்த பிறகு விடைகளைத் தேடி அலைவதைத் தவிர வேறு வழியில்லை. விடைகளும் உடனடியாகக் கிடைப்பதாக இல்லை. இந்நிலையில் என்ன செய்ய முடியும்?

நண்பர் கார்த்திகேயனிடம் நான் எழுப்பிய கேள்வி ஒன்று பற்றி இங்கு குறிப்பிட வேண்டும். ஐன்ஸ்டீனின் ஆவியோடு இன்று பேசுவதாக வைத்துக் கொள்வோம். ஐன்ஸ்டீனுக்குள்ளும் அவரால் தீர்க்க முடியாத கேள்விகள் இருந்தன. அந்தக் கேள்விகளுக்கு இப்பொழுது விடைகள் கிடைத்தனவா? என்று ஐன்ஸ்டீனின் ஆவியை எழுப்பிக் கேட்டால் அந்த ஆவி என் பதில் சொல்லும்? பதில் சொல்லாது என்பது தான் கார்த்திகேயன் தரும் பதில். அப்படியானால் இப்பொழுது அந்த ஆவியோடு தொடர்புக் கொள்வதால் நமக்கு என்ன பயன். ஆவி நிலையிலிருந்து ஒருவர் ஆய்வு செய்ய முடியாது என்பதாகத்தான் நாம் சொல்ல வேண்டும். இந்த உலகம் பற்றி நம் எதிர்காலம் பற்றி ஆவிகளோடு தொடர்புக் கொள்வதால் எதையும் தெரிந்து கொள்ள முடியாது. அதைப் போலவே முன்பு என்னவெல்லாம் நடைபெற்றன என்பதையும் ஆவிகள் சொல்ல முடியுமா? வள்ளுவரின் வாழ்க்கையில், காந்தியடிகளின் வாழ்க்கையில் என்ன நடைபெற்றன?

இந்திராகாந்தியின் கொலைக்குப் பின்னால் நடந்த சதி என்ன? இப்படி எல்லாம் கேள்விகள் கேட்டு பதில் பெற முடியாது. கிடைக்கிற பதிலையும் அப்படியே நம்பவும் முடியாது பின் எதற்கு ஆவிகளைப் பற்றிய ஆய்வு என்று கேட்பதோடு இப்போதைக்கு நிறுத்திக் கொள்ளலாம்.

முன்பு தீர்மானித்தபடிதான் எல்லாமே நடைபெறுகின்றன என்றால் முன்பு எப்பொழுது, எப்படி இவை தீர்மானம் ஆயின என்று கேட்பதன் வழியிலும் ஏதாவது பெற முடியுமா? நண்பர் சபாபதியை நான் கேட்டேன். உங்களின் இந்தப் பிறப்பில் நடைபெறும் சில செயல்கள் முற்பிறவியில் தீர்மானம் ஆயின என்றே வைத்துக் கொண்டாலும் முற்பிறவி நிகழ்ச்சிகள் பற்றி சோதிடம் ஏதேனும் சொல்கிறதா? தெரியவில்லை என்கிறார். தெரிந்து கொள்ளவும் முடியாது என்கிறார். நாடி சோதிடத்தை நம்பவும் முடியாது என்கிறார். இதற்கு மேல் நம்மால் சிந்திப்பதற்கும் இல்லை. இவ்வகையான சிக்கல்களிலிருந்து விடுபடும் முறையில் தற்காலிகமாக மேலும் சிலவற்றைக் கூறமுடியும் என்று தோன்றுகிறது.

1. நாம் பரு உடலோடு வாழ்கிறோம். பருண்மையான உலகச் சூழலில் வாழ்கிறோம். நிலம், நீர், தாவரங்கள் – விலங்குகள், சூரியன், சந்திரன், காற்று, கடல் முதலியவை உள்ளடங்கிய பருண்மையான உலகச் சூழலில் வாழ்கிறோம். அறிவியல் ஆய்வுகள் விளக்கங்கள் தந்துள்ளன. வரலாறு, பொருளியல் பற்றியும் குறைந்த அளவுக்கேனும் நாம் அறிவோம். கல்வி, மருத்துவம், வேளாண்மை, தொழில்கள் பற்றி நாம் அறிவோம். இவற்றோடு நம் உலகியல் வாழ்க்கை அமைகிறது. பண்பாடு, கலை, இலக்கியங்கள் முதலியன பற்றியும் நமக்குப் புரிதல் உண்டு. இவ்வகையான புரிதல்கள் மேலும் மேலும் அதிகரித்து வருகின்றன. சமூகத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் நம்மை எப்படி எல்லாம் பாதிக்கின்றன. இவற்றைக் கடந்து செல்வது எப்படி என்பது பற்றியும் நமக்குப் புரிதல் உண்டு. உடலோடு வாழ்கிறோம். உணவை உண்டு வாழ்கிறோம். நோய்கள் வரும்போது மருத்துவம் செய்து கொள்கிறோம். திருமணம், குழந்தைப் பேறு என்றெல்லாம் வாழ்கிறோம். கூடவே கொஞ்சம் ஆன்மீகம். நாடு, மொழி, சமூகம் பற்றிய அக்கறைகள் இவை போதாது என்ற போதிலும் இவற்றோடு வாழ்வது நமக்கு முக்கியம். சிக்கல்கள் போராட்டங்களோடு தான் நமக்கு வாழ்க்கை. இந்த

வாழ்க்கையை நம்மால் ஒதுக்க முடியாது. மறுக்க முடியாது. துறவு என்று சொல்லி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதில்லை. தற்கொலை நமக்கு விருப்பமில்லை. கொலைத் தொழிலும் நமக்கு வேண்டாம். அறிவியலில் மேலும் மேலும் நுட்பங்கள் கூடிவருகின்றன. பாக்டீரியா, வைரஸ் என்றெல்லாம் நாம் அறிந்திருக்கிறோம். மரபணுக்கள் பற்றிய ஆய்வுகளும் தொடர்கின்றன. விண்வெளி பற்றிய ஆய்வுகளும் கூடிவருகின்றன. இவற்றின் மூலம் வாழ்க்கை விரிவுபெறுகிறது. சிக்கல்கள் அதிகரிக்கும் அளவுக்கு வாழ்வியல் நுட்பங்கள் அதிகரிக்க, இன்பங்களும் கூடிவருகின்றன. இந்த உலகை விட்டு வேறு உலகிற்கு நாம் செல்ல முடியாது. எதிர்காலத்தில் எவ்வளவோ நேரலாம். அவற்றை இப்பொழுது நினைத்து வாழ முடியாது. வரலாற்றுச் சூழலை மறுத்து வாழ்வதற்கு இல்லை. இவ்வகையான வாழ்க்கையோடு நாம் நெருக்கமாக இருக்கிறோம். உடலியல் வாழ்க்கையைப் போலவே உளவியலிலும் நாம் வாழ்கிறோம். சமயம் நமக்குள் கொஞ்சம் வரலாம். சமயம் நம்மை ஆக்கிரமிப்ப தில்லை. சோதிடர் ஏதாவது சொல்லிக் கொண்டு இருக்கட்டும். அவற்றை முழுமையாக நாம் எடுத்துக் கொள்வதில்லை. நம் அறிவுக்கும், உழைப்புக்கும் வேலை கொடுக்கிறோம். நிறுவனங்களோடு இயக்கங்களோடு வாழ்கிறோம். நம் ஆளுமையின் பெரும்பகுதி இப்படித்தான் உருவாகிறது. மரபணுக்களை இன்று வரிசைப்படுத்தி எண்ணிக் கணக்கிடுகிறார்கள். பிரபஞ்சத்தின் விளிம்புகளில் என்ன நடைபெறுகின்றன என்று அறிவியலாளர்கள் நமக்குச் சொல்கிறார்கள். எல்லாவற்றையும் கதைகள் போல கேட்டுக் கொள்கிறோம். இவை ஒவ்வொரு நாள வாழ்வையும் தீர்மானிப்பதில்லை. விபத்துகள் நேரத்தான் செய்கின்றன. தவிர்க்கும் முயற்சிகள் தொடர்கின்றன. எனினும் சிலவற்றை ஏற்கிறோம். சோகத்திலேயே நாம் ஆழ்வது இல்லை. மீண்டும் கரையேறி வாழ்கிறோம். உலகம் இன்னும் நாம் வாழ்வதற்கான இடமாகத்தான் இருக்கிறது. எத்தனையோ அறிவியல் விந்தைகள் நாள்தோறும் அதிகரிக்கின்றன. எல்லாவற்றையும் நம்மால் அனுபவிக்க முடிவதில்லை. விண்வெளியில் பயணம் செய்து எத்தனையோ விந்தைகளை நேரடியாகப் பார்க்கும் அனுபவங்கள் இல்லை. எனினும் எல்லாவற்றையும் இன்று கண் முன்னால் உள்ள திரைகளில் பார்க்க முடியும்.

2 லெனினிலிருந்து ஒரு கருத்துரை. அணுத்தொகுதிகளால் ஆனது ஒரு தடி. அணுக்களுக்கிடையில் உள்ள இடைவெளிகள் ஏராளம். இடைவெளிகள் இல்லாமல் ஒரு நீண்ட தடியை குறுக்க முடியுமானால் / இறுக்க முடியுமானால் ஒரு புள்ளியாகிவிடலாம். இடைவெளிகள் அதிகம் உள்ளன என்பதால் ஒரு தடியைக் கொண்டு தாக்கும் பொழுது அடி விழாமல் இராது. அணுக்களுக்குள் இடைவெளிகளும் உள்ளன என்பது எவ்வளவு உண்மையோ அதே போல நீளமான தடியும் அதைக் கொண்டு தாக்கும் பொழுது விழும் அடியும் உண்மையானவை.

இன்னுமொரு கருத்துரை ஒரு மலரைப் பார்க்கிறோம். அதன் வண்ணமும் வடிவமும் நம்மைக் கவர்கின்றன. நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. உண்மையில் வண்ணங்கள் என்பவை வெறும் ஒளி அலை வரிசைகள். அதைப்போல நமக்குள் ஏற்படும் உணர்வும் வெறும் நரம்பு அதிர்வுகள். அறிவியல் சொல்வது இவ்வகை உண்மை. ஆனால் நமக்கு ஏற்படும் காட்சியின் அழகும் மகிழ்ச்சியும் அதே போல உண்மையானவை. இவை மாயைகள் அல்ல. வெறும் ஒளி அலைகளோ அதிர்வுகளோ அல்ல.

குவாண்டம் கொள்கை உண்மைதான். அதேபோல நாம் வெறுமைக்குள் இருக்கிறோம் என்பதும். உண்மைதான் அதே அளவுக்கு பருண்மையான உடலோடும். பருண்மையான உலகியல் சூழலோடு உறவுகளோடும் உணர்வுகளோடும செயல்களோடும் ஆக்கங்களோடும் நாம் வாழ்கிறோம் என்பதும் உண்மைதான். நமக்கு மிக நெருக்கமான ஒருவர் இறந்த நிலையில் நமக்குள்ளும் வெறுமை சூழ்கிறது. ஆனால் அதே வெறுமைக்குள் நாம் வாழ்வதில்லை. அதிலிருந்து விடுபட்டு வாழ்க்கைக்குள் வந்து விடுகிறோம். வெறுமையிலிருந்தும் கற்றுக் கொள்கிறோம். எதையும் இறுகப் பற்றிக் கொள்ள வேண்டாம். அபகரிக்க வேண்டாம். ஆதிக்கம் செய்ய வேண்டாம். மற்றவருக்கும் இடம் கொடுக்க வேண்டும். இப்படிக் கற்றுக் கொள்கிறோம். அடிக்கடி வெறுமைக்குள் எட்டிப் பார்த்துக் கொள்வதும் தேவைதான். அப்பொழுதுதான் மனத்தளவில் நாம் நலமாக இருக்க முடியும்.

3 சமண முனிவர்கள் ஆன்மா பற்றியும் பல பிறவிகள் தொடர்வது பற்றியும் மிகுந்த ஈடுபாட்டோடு பேசினார்கள். புலன் இன்பங்களிலிருந்து விடுபடுவது பற்றியும் பேசினார்கள். முற்பிறவியே எல்லாவற்றையும தீர்மானிக்கிறது என்பதால்

இப்பிறவியில் தவம் வேண்டாம், தத்துவம் வேண்டாம் என்று அவர்கள் விடுபட்டு நிற்கவில்லை. பிறவித் துன்பத்தை மாற்ற முடியும் என்று நம்பினார்கள். இல்லறத்தாருக்கும் அறிவுரை வழங்கினார்கள்.

சைவ நெறியினரும் குருவின் / சிவனின் அருள் பெற்றால் பிறவித் துன்பத்திலிருந்து விடுபடமுடியும் என்று நம்பினார்கள். இவர்களைப் போலவே மற்ற சமயத்தினரும் இம்மையில் வரும் துயரங்களை நீக்கிக் கொள்ள முடியும் என்று வழி சொன்னார்கள். சோதிடர்களும் பரிகாரங்கள் சொல்கிறார்கள். துயரங்களை முற்றாகத் தவிர்க்க இயலவில்லை என்றாலும் ஓரளவு தடுக்க முடியும் என்று சொல்கிறார்கள். தனி நபரின் வாழ்வியலை முன்னிருத்தியே சோதிடர்கள் பலன் சொல்கிறார்கள். பெரிய அளவில் நடைபெறும் விபத்துகளில் நூற்றுக்கணக்கானவர் சாவது பற்றிச் சோதிடர்கள் எதுவும் சொல்வதில்லை. போரில் ஆயிரக்கணக்கில் மக்கள் கொல்லப்படுகிறார்கள். இதைப் பற்றிச் சோதிடம் எதுவும் சொல்வதில்லை. தனி நபர் வாழ்க்கைக்கு அப்பால் இவர்கள் செல்வதில்லை. வரலாறு, பொருளியல் முதலியவை மனிதர்களைப் பாதிப்பது பற்றி சோதிடத்திற்குள் குறிப்புகள் இல்லை. இப்படி சோதிடத்திலும் நிறைய வரையறைகள் உள்ளன.

சோதிடத்தை அறவே ஒதுக்கி விடுகிற சமயங்களும் உள்ளன. கிறித்தவர்கள் சோதிடம் பார்ப்பதில்லை. பழங்காலத்திலும் சாங்கிய வாதிகளோ சார்வாகர்களோ சோதிடம் பற்றி நம்பிக்கை கொண்டிருக்கமாட்டார்கள்.

4. மேலும் ஒன்றை இங்குச் சொல்லலாம். ஐந்து புலன்கள் மட்டும் செயல்படுவதாக நாம் கூறுகிறோம். விலங்குகளுக்கு தெரிகிற உலகம் ஒன்று. இதைப் போலத்தான் 4/3/2/1 புலன்கள் கொண்ட உயிரினங்களுக்குத் தென்படும் உலகம் வேறு. மனிதர்களுக்குப் பொதுவாக ஆறறிவு என்று சொல்கிறோம். ஆறாவது அறிவை தேவையான அளவுக்கு நாம் பயன்படுத்துகிறோமா இல்லையா? என்று கேட்டு வைக்கலாம். பகுத்தறிவுவாதிகளுக்கு தென்படுவது ஒரு வகை உலகம். மார்க்சியருக்கு இன்னொரு உலகம். கலைஞனுக்கு வேறு வகை உலகம். அறிவியலாளனுக்கு இன்னொரு வகை உலகம். குழந்தைகளுக்கு ஒரு வகை உலகம். பெண்களுக்கு வேறு வகை உலகம். இப்படி ஆறறிவு உடையதாக நம்பும் மனிதர்களுக்கும்

எத்தனையோ வகைவகையான உலகங்கள். மனிதனுக்குள் செயல்படுவது ஆறறிவு மட்டும்தான் என்று நாம் நம்புவதற்கில்லை. ஏழாவது அறிவு, எட்டாவது அறிவு என்றும் கூட நாம் எண்ணுவதற்கு இடமுண்டு. நண்பர் கார்த்திகேயனும் இப்படிச் சொன்ன ஒரு அறிஞரைப் பற்றிக் கூறினார். நானும் இதை நம்புகிறேன். மனிதனுக்குள் செயல்படாமல் முடங்கிக் கிடக்கிற அறிவு சில உள்ளன. தவம், தியானம், யோகம் எனச் செய்பவர்கள் சிலவகை அறிவைத் தமக்குள் தூண்டுகிறார்கள். உள்ளுணர்வின் வழியே சிலவற்றை நாம் உணர்கிறோம். நாளை நடைபெறுவது என்ன என்று இன்றைக்கே சிலர் சொல்லுகிறார்கள். கனவினுள்ளும் சில எதிர்காலக் காட்சிகள் தென்படுகின்றன. இவ்வகை அறிவை ஆறறிவுக்கு அப்பால் வைத்துத்தான் நாம் காண வேண்டும். மனிதனின் அறிவுத்திறன் முதலியவைப் பற்றி நாம் எல்லை கட்ட வேண்டாம். கடவுளை கண்டுபிடித்தது கூட ஒருவகை அறிவு. சோதிடம், கைரேகை முதலியவற்றை கண்டறிந்தது எவ்வகை அறிவு? நமக்கு புலப்படவில்லை. திறந்த மனத்தோடு நாம் இருப்பதே நல்லது.

## 13

ஒரு சாவியைக்கொண்டு
பல பூட்டுகளைத்
திறக்கமுடியாது.
அதுபோல பிரபஞ்சம்,
இயற்கை, வரலாறு,
வாழ்க்கை, உள்மனம்
இவற்றைத்திறக்க ஒரு
கடவுள்போதாது.

சிறுவர்கள் கில்லி விளையாடுகிறார்கள். பெண்கள் கோலம் போடுகிறார்கள். பெரியவர்கள் தாயம் விளையாடுகிறார்கள். குழந்தைகள் மணல் வீடு கட்டி சிறு சோறு சமைத்து அப்புறம் அம்மா அப்பா விளையாட்டும் விளையாடுகிறார்கள். ஆடு புலி ஆட்டமும் ஒரு வகை விளையாட்டு. கபடி ஒரு வகையான வீர விளையாட்டு. இதைப்போல ஜல்லிக்கட்டு, கூடைப்பந்து, கால்பந்து, நம் காலத்தில் கிரிக்கெட்.

இவை எல்லாம் பெரும்பாலும் விளையாட்டுகள். ஏராளமான உணர்ச்சிகள் இவ்வகை விளையாட்டுகளில் கொட்டப்படுகின்றன. இவை என்று தோன்றின? யார் தோற்றுவித்தார்கள்? எந்த நோக்கத்தோடு என்றெல்லாம் நிதானமாக ஆராய்ச்சி செய்து கொள்ளலாம். எதார்த்தத்தோடு இவ்வகை விளையாட்டுக்களுக்கு

உறவு இல்லை. ஆராய்ச்சி செய்து பார்த்தால் யதார்த்தத்திலிருந்து இவை பெரும் பகுதி விடுபட்ட நிலையிலும் யதார்த்தத்தோடு சில உறவுகள் தட்டுப்படவும் கூடும். ஆடு புலி விளையாட்டு என்பது இப்படி ஆய்வுக்குரியது. சதுரங்கத்தையும் இப்படி ஆய்வு செய்யலாம். ஒரு வகையில் அறிவுக் கூர்மையை, அழகுணர்வை நட்புணர்வை வளர்த்துக் கொள்வதற்கு இவை பயன்படுகின்றன. ஏதோ ஒரு கட்டத்தில் இவ்வகை விளையாட்டுகளின் வழியே போட்டிகள் முதலியவை உருவாகின்றன. கிரிக்கெட் என்று ஒரு விளையாட்டு மட்டுமல்ல பெரும் தொழிலாகவும், கூடவே அரசியலாகவும் மாறி இருக்கிறது.

இவ்வகை ஆராய்ச்சி நமக்கு இங்கு முக்கியம் இல்லை. இவ்வகை விளையாட்டுக்கள் முதலியவற்றை மனிதர்களாகிய நாம் தான் படைத்துக் கொண்டோம். இவை படைப்புகள், புனைவுகள், கட்டமைப்புகள் இவற்றோடு தான் நாம் வாழ்கிறோம். இவற்றின் வழியேயும் வாழ்கிறோம். நம் கற்பனை வளத்தை, வாழ்வியலுக்கான சில உணர்வுகளை இவற்றின் மூலம் வெளிப்படுத்துகிறோம். நாம் மனிதராக இருக்கிறோம் என்பதற்கும் இவை அடையாளங்கள். இவை விளையாட்டுகள், புனைவுகள் என்ற உண்மையை நாம் எளிதாக ஒப்புக் கொள்கிறோம். இதைப் போலத் தான் வீடு என்ற கட்டமைப்பை நாம் படைத்திருக்கிறோம். இதை ஒப்புக் கொள்வதில் நமக்குச் சற்று சிரமம் உண்டு. இவைப்போல தான் குடும்பம், திருமணம், உறவு என்பனவற்றையும் நாம் படைத்துக் கொண்டோம். ஒரு காலத்தில் இவை இல்லை. பிரிதொரு காலத்தில் இவற்றைப் படைத்திருக்கிறோம். இவ்வகைப் படைப்பின் தொடர்ச்சியில் தான் நாடு, மொழி, தேசம், சமயம், தத்துவங்கள் என்பனவெல்லாம் வருகின்றன. இவற்றோடு தான் நமக்கு வாழ்க்கை.

இன்று நமக்குள்ள வாழ்க்கை என்பது முன்னொரு காலத்தில் இல்லை. இவற்றின் வழியே நமக்குச் சில தேவைகள் நிறைவேறுகின்றன. காமம் என்பதை நுகர்வதற்காக எத்தனை வகையான அமைப்புக்கள். இன்று இவை எல்லாம் வாழ்வியல் யதார்த்தங்கள் ஆகிவிட்டன. இவற்றிலிருந்து நம்மை விடுவித்துப் பார்த்துக் கொள்ள முடியாத அளவுக்கு இவ்வகைக் கட்டமைப்புகளோடு நாம் மாட்டிக் கொண்டு இருக்கிறோம். இவற்றை யாரேனும் உடைக்கவோ மீளவோ முயன்றால் நாம் கத்துகிறோம். ஒழுக்கம் என்று பேசுகிறோம்.

ஜான் டியூவி என்னும் அமெரிக்க மெய்யியலாளர் நாம் வகுத்து வைத்திருக்கும் கருத்துக்கள், தத்துவங்கள் முதலியவற்றை கருவிகள் என்று கண்டறிந்து கூறினார். மண்வெட்டியைக் கொண்டு மண்ணைப் புரட்டுகிறோம். கோடாரியைக் கொண்டு மரத்தைப் பிளக்கிறோம். கத்தியைக் கொண்டு காய்கறியை நறுக்குகிறோம். இவை கருவிகள். இயந்திரங்கள் முதலியன கருவிகள். ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு வகையான கருவி. இதைப் போலத் தான் அறிவியலிலும் பலவகையான விதிமுறைகள். கொள்கைகள். ஒரு விதியைப் பயன்படுத்தி இயற்கையின் ஒரு கூறை புரிந்து கொள்கிறோம். நியூட்டனின் இயந்திரவியல் விதி பிரபஞ்சம் வரையில் சிலவகையான புரிதல்களை நமக்குத் தருகிறது. இப்படி இயற்கையைப் புரிந்து கொள்வது விதி. பழத்தை அறுக்கக் கத்தி பயன்படுகிறது. மண்வெட்டி தேவை இல்லை. கோடாரி தேவை இல்லை. அறுத்தல், வெட்டுதல் ஆகிய ஒரே பணிக்கு வெவ்வேறு கருவிகள்.

இந்த உண்மை நமக்கு எளிதாகப் புரிகிறது. இதே போலத்தான் வாழ்வியலுக்குள் பல்வேறு வகையான சமயங்கள் / தத்துவங்கள். உலக / வாழ்வியக்கத்தைப் புரிந்து கொள்ள / செயல்பட / செயல்படுத்த வெவ்வேறு கருத்துக்கள் / சிந்தனைகள் / கொள்கைகள் / தத்துவங்கள் / சமயங்கள். யதார்த்தம் என்று நாம் நம்புகிற வாழ்வின் இயக்கத்தை, வரலாற்றை, புரிந்து கொள்ள இப்படி வெவ்வேறு வகையான கருத்துக்களும் விளக்கங்களும் ஒரு காலத்தில் பயன்படும் தத்துவம் இன்னொரு காலத்தில் பயன்படுவதில்லை. வேறு தத்துவம் தேவைப்படுகிறது. இப்படித்தான் வகைவகையான கலாச்சாரங்கள், வாழ்வியல் நெறிகள் எல்லாமே ஏதோ ஒரு வகையான பண்பாட்டுக்குத் தேவைப்படுகின்றன. உண்டு, உறங்கி, உணர்ந்து, பசியாறி, ஆடிப் பாடி., விளையாடி அப்புறம் மோதி, உடைத்து தகர்த்து வெற்றி என வைத்துக் கொண்டு வாழ்வதற்கு இப்படி எல்லாம் நாம் வைத்துக் கொள்கிறோம், படைத்துக் கொள்கிறோம். கூடவே எல்லாவற்றையும் முற்றான உண்மைகள் எனக் கருதவும் செய்கிறோம். உண்மைகள் கை தவறிப் போகும் போது மயங்குகிறோம், திகைக்கிறோம் மாயைகள் என்கிறோம். பிரமைகள் என்கிறோம். காதலிக்கிறபோது காதலை முழு உண்மை. காதலி உண்மையானவள். காதலில் தோல்வி என்று வருகிற போது வாழ்வே மாயம். எல்லாமே பொய் என்பதைப் போலத்தான் இவை அனைத்தும்.

இவ்வளவும் சொன்னபிறகு இனி கடவுளைப் பற்றிப் பேசலாம். கடவுள் என்பதும் ஒரு கருத்து. ஒரு கருவி, ஒரு பயன்பாடு. நமக்கு ஒரு கடவுள். இன்னொருவருக்கு வேறு கடவுள். காலந்தோறும் வெவ்வேறு கடவுள்கள். இப்படி எத்தனையோ கடவுள்கள். சிறு தெய்வங்கள். மேலும் பெரும் தெய்வங்கள். ஒரு தெய்வம். பல தெய்வங்கள். ஒவ்வொரு கலாச்சாரத்திலும் தனிவகை தெய்வங்கள். வெவ்வேறு சூழலில் வெவ்வேறு தெய்வங்கள். ஒரு சாவியைக் கொண்டு ஒரு பூட்டைத் திறக்கிறோம். வெவ்வேறு பூட்டுகளுக்கு வெவ்வேறு சாவிகள். ஒரு சாவியைக் கொண்டு பல பூட்டுக்களைத் திறக்க முடியாது. இப்படித்தான் தெய்வங்கள் நமக்குப் பயன்பட்டன. பிரபஞ்சம், இயற்கை, வரலாறு, வாழ்க்கை... இவற்றில் உள்ள பல்வேறு இயக்கங்களை புரிந்துக் கொள்ள பல கடவுள்கள்.

ஆனால் வரலாற்றில் என்ன நேர்ந்தது. கருவியை யாரும் வணங்குவது இல்லை. கருவியே எல்லாம் என்று நாம் பேசுவது இல்லை. இயந்திரங்கள் நம் வணக்கத்திற்குரியவை அல்ல. தொழுகைக்கு உரியவை அல்ல. கதைகள் நாமாகப் படைத்துக் கொண்டவை. கதைகளை அதே வடிவில் உண்மை என நாம் ஏற்பது இல்லை. நாடகத்தில் கடவுள் வடிவம் தாங்கி நடிப்பவரை கடவுள் என நாம் நம்புவது இல்லை. ஆனால் வரலாற்றில் இப்படி எல்லாம் நேர்ந்திருக்கின்றன. கருவிகளைக் கடவுளாக வணங்குகிறோம். கதைகளை வரலாறு என வாதிடுகிறோம். நடிகர்களுக்கு கோயில் கட்டுகிறோம். வரலாற்றில் இப்படித்தான் நேர்ந்திருக்கிறது. புத்தர் கடவுளாக்கப்பட்டார். இயேசுவையும் இறைவன் திருக்குமாரன் என்றனர். ராமன் ஒரு அரசனின் மகன். திருமாலின் அவதாரமென மக்கள் நம்பினர். இராவணனுக்குப் பத்துத் தலைகள் என்பது கற்பனை தான் என்று அவனைப் படைத்தோருக்குத் தெரியும். ஆனால் பத்துத் தலையோடு ஒருவன் வாழ்ந்திருக்க முடியும் என மக்கள் நம்புகின்றனர். சிவன், முருகன் என்பவர்கள் எல்லாம் ஆதிகாலத்தில் இனக்குழுவின் தலைவர்கள். பின்னர் கடவுளாகி விட்டனர். கொற்றவை / காளி / துர்க்கை என்பவர் தாய்வழிச் சமூகத்தில் இனக்குழுவின் தலைவர்கள். பிற்காலத்தில் இவள் தெய்வம். கடவுள் என்பது ஒரு கற்பனை / புனைவு என்பது தொடக்க காலத்தில் இதைப் படைத்தவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் இது உண்மை என நம்பப்பட்டது. வரலாற்றுச் சூழலில் இப்படி எல்லாம் ஏற்பட்டு இருக்கின்றன. இவை எல்லாம் எக்காலத்திலும் உண்மை தான் என்று பேசுவதற்கும் சிலர் முன் வந்து விட்டனர். கதைகள் – கற்பனை என்பது மாறி யதார்த்தங்கள்

ஆகிவிட்டன. இவை எப்படி ஏற்பட்டன என்பதுதான் ஆய்வுக்குரிய பொருள்.

கருத்துக்கள், கொள்கைகள், தத்துவங்கள் முதலியனவும் கருவிகள் என்ற அளவில் இன்று யாரும் வைத்துக் கொள்வதில்லை. இவற்றை முற்றான உண்மை என நம்பும் நிலை தோன்றியிருக்கிறது. யதார்த்தத்தோடு இவற்றுக்கு எந்த அளவில் உறவு என்ற ஆய்வு இன்று முதன்மை பெறுவதில்லை. யதார்த்தம் இவற்றின் வழியேயும் தட்டுப்படுகிறது என்பதோடு நாம் நிறுத்திக் கொள்வதில்லை. யதார்த்தத்தை மேலும் துருவி ஆராய வேண்டும் என்று பலர் கருதுவது இல்லை. புத்த சமயத்தை அதே வடிவில் இன்று நாம் ஏற்பதில்லை. மார்க்சியமும் இன்றைய உலகச் சூழலை விளங்கிக் கொள்வதற்கான ஆற்றல் மிக்க ஒரு கருவி என்ற அளவில் நாம் நிறுத்திக் கொள்ள வேண்டும். இந்த ஒரு கருவியைக் கொண்டு உலக இயக்கத்தை முற்றாக திறந்து' விட முடியாது. அன்றியும் இது கருவி மட்டுமே. இது வணக்கத்திற்குரியது அன்று. கடவுள் என்பது ஒரு காலத்தில் ஒரு முக்கியமான கருவி. இன்று அந்தக் கருவிக்கு பயன்பாடு குறைந்து விட்டது அல்லது; இல்லையென்று ஆகிவிடுகிறது.

## 14

> நானே பிரம்மம் என்பது உட்பட வாழ்வினுள்ளும் வரலாற்றினுள்ளும் எத்தனையோ மாயைகள், பிரமைகள். இவற்றிலிருந்து விடுபடுவதன் மூலமே மனித விடுதலை சாத்தியம். பதி, பசு, பாசம் என்ற சைவ சிந்தாந்த அடிப்படையை இப்படித்தான் நம்மால் புரிந்துகொள்ள முடியும்

சைவ சித்தாந்தம் என்னைப் பொருத்தவரைச் சிக்கலான ஒரு சித்தாந்தம். இதற்குள் நுழைந்து உள்ளே இருக்கிற பின்னலல்களில் என்னால் மாட்டிக் கொள்ள இயலவில்லை. எனினும் இந்த சித்தாந்தத்திலுள்ள அடிப்படைக் கோட்பாடு ஒன்றை என்னளவில் புரிந்து கொள்கிறேன். பதி பசு பாசம் என்பவை இந்த அடிப்படையின் மூன்று கூறுகள். பதி என்பது சிவனைக் குறிக்கிறது. சிவன் என்பதை செம்பொருள் என்று கூறுகிறார்கள். பசு என்பது உயிர். உயிர் என்பது மனித உயிரைத் தான் குறிப்பதாகக் கொள்கிறேன். மனிதனுக்குத்தான் இறைவன் அல்லது செம்பொருள் என்றக் கருத்துச் சாத்தியப்படும். உயிர் என்பதை இங்கு ஆன்மா என்று பொருள்படுத்துவதிலுள்ள சிக்கலைக்

கருதி இப்பொருளை என்னளவில் ஒதுக்குகிறேன். பாசம் என்பது மலம். மலம் என்பது மனித உயிர்களைப் பற்றி இருக்கிற ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள். ஆணவம் என்பது தற்பெருமை, நானே பெரியவன், எனக்கு எல்லாம் தெரியும் என்பன போன்ற உணர்வுகள். கன்மம் என்பது செயல், தொழில். மாயை என்பது பல வகையான பிரமைகள். இவ்வாறு பதி முதலிய மூன்று கொள்கைகளை பொருள்படுத்திக் கொள்வதன் மூலம் இவற்றினுள்ளே அடங்கியிருந்த சில நுட்பங்களை என்னளவில் அதாவது மெய்யியல் நோக்கில் கீழ்க் கண்டவாறு புரிந்து கொள்கிறேன்.

இறைவன் என்பதை ஒரு கருத்தாக்கம் என்ற முறையில் நான் விளங்கிக் கொள்வதை முன்பே பல இடங்களில் குறிப்பிட்டுள்ளேன். சிவன் என்பது, செம்பொருள். அதாவது மனித வாழ்வின் பல்வகையான உயர் பண்புகளின், பேரறிவின், பேராற்றலின் ஒரு தொகுதி. பேரன்பு, பேரருள் என்ற வகையிலும் இதற்குப் பொருள் தரலாம். அறம், நேர்மை, நீதி என்றும் இதனைக் குறிப்பிடலாம். மனிதன், இயற்கையோடு உயிர்களோடு இறுதியில் பிரபஞ்சத்தோடு இணைந்த நிலையில் தன்னைக் காணும் பொழுது இயற்கை முதலியவற்றுக்குத் தன்னை இழந்தபோது அவற்றின் வசப்பட்டவன் ஆகிறான். பேரன்பையும், பேரருள் முதலியவற்றையும் தனக்குள் கலந்து அவற்றின் நிறைவாகிறான். இத்தகைய மனிதன் இறைவன் ஆகிறான் அல்லது இறைமைக்கு நெருக்கமாகிறான். இறைமை இவனுக்குள் வந்து கலந்து அதன் நிறைவாகிறான்.

இப்படி ஒரு மனிதன் இறைமையைத் தனக்குள் காண முடியுமானால் அவன் தன்னளவில் தன்னைத் தன் மனத்தை முழு அளவில் திறந்து வைப்பவனாக இருக்க வேண்டும். இவன் தன் மனத்தால் தூயவன். மனம் என்பதன் எல்லைகள் கூட இவனுக்குள் கரைந்து விடுகிறது. நான் என்ற ஆணவம் அவனுக்குள் இல்லை. எல்லா உயிர்களிலும் இவன் தன்னைக் காண்பவன். சமத்துவ உணர்வால் இவன் நிறைந்தவன். நானே பெரியவன் என்று தன்னை, தன் அறிவை இவன் முதன்மைப் படுத்தி இருப்பான் என்றால் இவன் தனக்குள் சுருங்கியவன். தனக்குள் முடங்கியவன். இவனுக்கு வானம் தெரியாது. உயிர் வகைகளின் இயக்கம் தெரியாது. இவனுக்குள் இறை இல்லை. கலை இல்லை. தன்னலத்தின் வடிவாக இவன் இருப்பதால் இவனுக்கு பிற மனிதர்களைப் பற்றித் தெரியாது.

பிறர் வாழ்வியல் அனுபவங்களில் இவனுக்கு அக்கறையில்லை. வரலாற்றுக்குள் இவன் இல்லை. ஒரு புள்ளியில் முடங்கிய இவன் தன்னையே பிரபஞ்சம் எனக் கருதியவன். இவனுக்கு வாழ்வில்லை. விடுதலை இல்லை. இவனை மனிதன் என்று சொல்ல முடியாது. விலங்கு மாதிரி இவன் தனக்குள் முடங்கியவன். உண்பது, உறங்குவது, புணர்வது என்பதற்கு மேல் இவனுக்கு வாழ்க்கையில்லை.

ஒரு வணிகன் என்பவன் இப்படித்தான் தன் தொழிலுக்குள், இலாப வேட்டைக்குள், மனத்திற்குள் முடங்கிக் கிடக்கிறான். ஓர் அதிகாரி என்பவன், இப்படித்தான் தன் பதவிக்குள் அதிகார வெறிக்குள் அலைகிறான். ஒரு காமுகனின் நிலை வேறானதாக இல்லை. ஒரு கட்சிக்குள் முடங்கியவனும் இத்தகையவன் தான். ஒரு மதத்திற்குள் முடங்கியவனும் இப்படிப்பட்டவன். இவர்கள் தன் கன்மங்களில் மூழ்கியவர்கள். இவர்கள் தம்மைத்தாமே அடைத்துக் கொண்டிருக் கின்றனர். தங்களால் அடுத்தவர்களுக்கு என்னவெல்லாம் நேர்கின்றன என்பது பற்றி இவர்களுக்கு அக்கறையில்லை. தேவையில்லை. தனக்குப் பணம் வந்து சேர வேண்டும். தன் அதிகாரத்திற்கு மற்றவர் அடங்கிக் கிடக்க வேண்டும். தன் காமம் நிறைவு பெற வேண்டும். யாருக்கு என்ன நேர்ந்தால் என்ன? என் தேவைதான் ஒரே தேவை. என் கட்சிதான் அரச பீடத்தில் நிரந்தரமாக இருக்க வேண்டும். என் மதம் தான் உயர்ந்த மதம். உண்மையான மதம். இவர்கள் ஆணவத்தில் தம்மை அழித்துக் கொண்டவர்கள். அறிவுலகத்தின் விரிவு இவர்களுக்கில்லை. அன்புக்குத்தான் உயிர்கள் வசப்படும் என்ற உணர்வு இவர்களுக்கில்லை. பேரின்பம் என்பது இவர்களுக்குத் தெரியாது. பரவசம் என்ற உணர்வு இவர்களுக்குத் தெரியாது. தன்னை இழப்பதிலுள்ள பேரின்பம் இவர்களுக்கில்லை.

மனிதனின் அறிவை, உணர்வை அடைத்துக் கொண்டு இருக்கிற தெறித்துக் கொண்டிருக்கிற, குறுக்கிக் கொண்டிருக்கிற மாயைகள், பிரமைகள் ஒன்றா, இரண்டா! கலை உலகத்திற்குள் இருப்பவன் கலைதான் ஒரே உலகம் என்று நினைக்கிறான். ஒரு தத்துவத்திற்குத் தன்னைக் கொடுத்தவன் தனதுத் தத்துவம் தான் ஒரே தத்துவம் எனக் கருதுகிறான். சிலருக்குப் பணமே உலகம். சிலருக்கு குடும்பமே உலகம். இப்படி எத்தனையோ பிரமைகள். வெளியில் உலகம் இன்னும் விரிந்திருக்கிறது. பல திசைகளிலும் விரிந்திருக்கிறது.

வரலாற்றில் தேடிச் சென்றால் எத்தனையோ உலகங்கள். சென்ற நூற்றாண்டில் நாம் வாழ நேர்ந்திருந்தால் அந்த நூற்றாண்டு உலகத்திற்கு கட்டுப்பட்டு இருந்திருப்போம். இப்படித்தான் கடந்த காலத்தில் பல வகையான பார்வைகள் – பிரமைகள். இவை பலவற்றிலிருந்து இன்று நாம் ஓரளவிற்கு விடுபட்டுள்ளோம். இன்னும் பிரமைகள் நமக்கில்லாமல் இல்லை. அரசியலும் அறிவியலும் கூட சில பிரமைகளை நமக்குள் விட்டு வைத்துள்ளன. உயிர்களைப் பற்றி, வரலாறு பற்றி, பிரபஞ்சம் பற்றி இன்னும் எத்தனையோ புதிர்கள், மர்மங்கள், பிரமைகள். நானே பிரம்மம் என்று சொல்வது எவ்வளவு பெரிய மாயை. என்னை நான் பிராமணன் என்று சொல்லிக் கொள்வது ஒரு மாயை அல்லாமல் வேறு என்ன? இப்படி எல்லாம் தான் சைவச் சித்தாந்தத்தின் அடிப்படைகளின் ஒன்றான பதி, பசு, பாசம் என்பதை நான் புரிந்து கொள்கிறேன். மனிதர் இப்படித்தான் தம்மைச் சூழவுள்ள உலகத்தை தன் விடுதலைக்கு இடையில் உள்ள தடைகளைப் புரிந்து கொள்ள முடியும். மனித விடுதலை என்பது தான் வாழ்வின் முதல் நோக்கம். விடுதலைக்குத் தடையாக உள்ளவை மனிதனை முடக்கி உள்ள ஆதிக்கங்கள். மனித விடுதலை என்பது தான் சமயங்கள் கூறும் முக்தி அல்லது மோட்சம். இறைவனோடு கலத்தல் என்பது வேறு என்னவாக இருக்க முடியும். பரமாத்மாவோடு ஜீவாத்மா கலத்தல் என்பதை இப்படித் தானே பொருள்படுத்த வேண்டும். மோட்சம், நரகம் என்பவையெல்லாம் மனித வாழ்வின் பல கதிகள் தானே. ஆதிக்கவாதியாக இருப்பது என்பது கூட பணம், அதிகாரம் முதலியவற்றுக்கு தான் அடிமைப்பட்டிருப்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும். வரலாற்றில் காலந்தோறும் பல வகையான ஆதிக்கங்கள், ஏற்றத்தாழ்வுகள், இனங்கள், மதங்களுக்கிடையில் குழப்பங்கள், முரண்பாடுகள். இப்படி எத்தனையோ முன் வினைகள், தீவினைகளில் மனிதர் இன்னும் ஆட்பட்டுத்தானேக் கிடக்கின்றனர். இயற்கையோடு இன்னும் தான் போராட வேண்டியிருக்கிறது. இன்னும் எத்தனையோ மனித வாழ்வின் சிக்கல்கள், தேசம், கட்சி, அரசு என்பதனாலும் சிக்கல்கள் இவை பற்றியெல்லாம் சமயங்களின் புரிதல்கள் என்ன? சமயங்களின் உள்ளும் இவற்றை மூடி உள்ள பிரமைகள் என்ன? நாம் சிந்திக்க வேண்டும்.

15

குறுகிய, சாதி, நாடு, மதம், இனம் என்ற பார்வையை தகர்த்துக் கொண்டால்ஒழிய உலகம் வரலாறு, பிரபஞ்சம், சமதர்மம் விடுதலை என்ற பேறு நமக்கு வாய்க்காது. இதற்காக நந்தனார்போல நம்மை நாமே தகர்த்துக்கொள்ள/எரித்துக் கொள்ளத்தான் வேண்டும்

சேக்கிழார் தன் காலத்தில் வழங்கிய எத்தனையோ கதைகளை தன் புராணத்திற்கு கருப்பொருளாக எடுத்துக் கொள்கிறார் இந்தக் கதைகளுக்குள் சில வரலாற்று நெகிழ்வுகளும் அடங்கியிருக்கக் கூடும். சேக்கிழார் தன் சமயப் பார்வையின் வழியே இந்தக் கதைகளை தன் காலத் தேவைக்கொத்த முறையில் மீட்டுருவாக்கம் செய்கிறார். சமணம் முதலிய வேற்றுச் சமணர்களை ஒதுக்கி வைக்கும் முறையில் தன் சமயப் பார்வையை முன்னிறுத்துகிறார். இப்படி அவரால் உருவாக்கப்பட்ட கதைகளிலிருந்து அழகிய சில கதைகளை இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளலாம். சமயப் பார்வையோடு நம்மால் முடங்கிவிடக்கூடாது. எனினும் இந்தச் சமயப் பார்வைகளு அடியில், ஆழத்திலுள்ள, மெய்யியல் பார்வை மிக மிக கவர்ச்சியானது என்பது மட்டுமல்ல வாழ்வியலுக்கும் ஒத்தப் பார்வையாக இது அமைகிறது. இத்தகையப் பார்வையின் வழியே எல்லாக் கதைகளையும் பார்க்க முடியுமா? என்பது இல்லை. எனினும் ஒரு சில கதைகள் நம் பார்வைக்கு ஒத்தவையாக இருக்கின்றன. இத்தகையக் கதைகளை இங்குப் பார்க்கலாம்.

கண்ணப்ப நாயனாரின் கதையை முதலில் பார்க்கலாம். பெரிய புராணத்தில் இவர் பெயர் திண்ணப்பன். சிவபெருமானுக்கு தன் கண்ணைத் தந்ததால் இவர் கண்ணப்பர் என்று அழைக்கப்பட்டார் என்பது நம்மில் பலருக்குத் தெரியும். கதைச் சுருக்கம் கூட இங்குத் தேவையில்லை. நேரிடையாக கதைக்குள் நுழையலாம். சிவ கோசரியாரைப் பொறுத்தவரை நாள்தோறும் காளத்தி மலை மீது இருக்கும் சிவபெருமானுக்கு முறைப்படி வழிபாடு செய்ய வேண்டும். முறைப்படி வழிபாடு செய்தால் போதும் சிவபெருமானின் அருள் கிடைக்கும். கண்ணப்பனைப் பொருத்தவரை இவையெல்லாம் அவனுக்குத் தெரியாது. கண்ணப்பன் ஒரு வேடன். மலை மீது சிவபெருமான் தனியே அமர்ந்திருக்கிறார். அவருக்குத் துணையாக யாரும் இல்லை. அவருக்குப் பசித்தால் யார் உணவு தருவார்? விலங்குகளால் அவருக்கு துன்பம் நேராதா? இப்படித்தான்

கண்ணப்பன் சிந்திக்கிறான். விரைந்து சென்று வாயில் நீரோடு, தலையில் வைத்தப் பூக்களோடு பன்றி இறைச்சியைச் சுட்டுக் கொண்டு வந்து இறைவனுக்கு அளிக்கிறான். வாயில் உள்ள நீரால் இறைவன் உருவை தூய்மை செய்து இறைவனுக்குப் பூச்சூடி இறைச்சியை உண்ணத் தருகிறான். இறைவன் உண்ணத்தான் வேண்டும். அப்புறம் சிவபெருமானின் இடக்கண்ணில் இரத்தம் வடிய, தன் இடக்கண்ணை அப்புகிறான். மீண்டும் வலக்கண்ணில் இரத்தம் வடிய செருப்போடு கூடிய தன் காலை சிவபெருமான் வலக்கண்ணுக்கருகில் அடையாளமாக ஊன்றிக் கொண்டு தன் வலக்கண்ணையும் அம்பால் தோண்டும் பொழுது, சிவபெருமான் 'கண்ணப்பா நில்' என்றார். அதன்பிறகு என்னவெல்லாம் நடைபெற்றன. கண்ணப்பனுக்கு சிவபெருமான் காட்சிக் கொடுத்தார். கண்களைக் குணப்படுத்தினார். மறுநாள் சிவகோசரியார் வழிபாடு செய்ய வந்த பொழுது பதறினார். எல்லாவற்றையும் திருத்தம் செய்தார். அன்று இரவு வேதனையோடு அவர் உறங்கியபோது, இறைவன் அவருக்குக் கனவில் தோன்றி கண்ணப்பனின் பேரன்பை எடுத்துரைத்தார். சிவகோசரியார் அமைதியானார்.

இந்தக் கதைக்கு வரலாற்றுச் சான்று உண்டா? சான்று இல்லையெனச் சொல்லி சேக்கிழாரை சொல்வதற்கில்லை. கண்ணப்பனின் வழிபாட்டையும் பேரன்பையும் சிவபெருமான் ஏற்கிறார். சிவகோசரியாரின் வழிபாட்டையும் இறைவன் ஏற்கிறார். வேடன் என்றாலும் அவன் வழிபாடு மூர்க்கத்தனமானது என்றாலும் அவனதுச் சாதியையோ, மூர்க்கத் தனத்தையோ சிவபெருமான் பார்க்கவில்லை. அன்பு எந்த வடிவில் இருந்தாலும் அவருக்கு அது உடன்பாடு. சாதி முக்கியமில்லை. இறைச்சி உணவும் சிவபெருமானுக்கு மறுப்பில்லை. சேக்கிழார் எப்படி சைவ சமயத்தை புனிதப்படுத்துகிறார். வரப்படுத்துகிறார். சிவகோசரியாரையும் கண்ணப்பரையும் முரண்படுத்த வேண்டியதில்லை. வழிபாடு எந்த வடிவத்திலும் இருக்கலாம். சாக்கியர் மாற்றுச் சமயத்தினர் என்றாலும் அவர் தம்மீது விட்டெறிந்த கல்லும் சிவபெருமானுக்கு மலர்கள் தான் என்பது சேக்கிழாரின் பார்வை. சைவர்கள் இன்று இறைச்சி உண்பதில்லை. பன்றி இறைச்சி அவர்களுக்கு அறவே ஆகாது. இப்படியும் ஒரு வழிபாட்டு முறை என்பதை அவர்களால் இயக்க முடியுமா? என்பதும் தெரியவில்லை. எனினும் கண்ணப்பரை அவர்கள் கொண்டாடுவதில் குறை வைத்துக் கொள்வதில்லை.

திருநாளைப் போவார் கதையை பகுத்தறிவுவாதிகள் பார்க்கிற கோணத்தை நாம் மறுக்க வேண்டியதில்லை. மெய்யியல் நோக்கில் இந்தக் கதைக்கு இன்னும் ஆழ்ந்த பொருள் காணமுடியும். திருநாளைப் போவார் என்பது சேக்கிழாரின் பெயர். கோபால கிருஷ்ண பாரதியார் தந்த நந்தனார் என்ற பெயரைத் தான் நாம் பயன்படுத்துகிறோம். நந்தனார் தாழ்ந்த சாதியைச் சார்ந்தவர். தன் சொந்த ஊரில் தனக்குரிய தொழிலைச் செய்து கொண்டே தன் தெய்வ வழிபாட்டோடு இருந்தார். சொந்த ஊரை விட்டு வேறு ஊர்களுக்கு, சிதம்பரம் போன்ற இடங்களுக்கும் சென்றார். உலகம் மிகப் பெரியதாய் இருக்கிறது. வானம் பூமி என விரிந்து கிடக்கிறது. எத்தனையோ மனிதர்கள், எவ்வளவோ தொழில்கள், மன்னர்கள். இன்று உலகம் விரிந்து கிடக்கிறது. சொந்த ஊர் என்ற அளவில் தன் உலகத்தை காப்பாற்ற சிறு தெய்வங்கள் போதும். இப்பொழுது இவர் பார்ப்பது பெரிய உலகம், இவ்வளவையும் படைக்க, காப்பாற்ற, நிர்வாகம் செய்ய பெரிய தெய்வம் தேவை. எல்லாத் தெய்வங்களையும் உள்ளடக்கிய ஒரு பெரும் தெய்வம் இருந்தால் தான் முரண்பாடுகள், மோதல்கள் இல்லாமல் உலகம் / பிரபஞ்சம் இயங்கும்.

இப்படி ஒரு அகண்டப் பார்வையைப் பெற, தன் பழையப் பார்வையை, தனது முன்னைய உலகத்தை, தன் சாதி முதலியவற்றைத் தகர்த்துக் கொள்ள வேண்டும். இப்பொழுதுதான் அந்தப் பெரிய கடவுளின் பார்வை தனக்குக் கிடைக்கும். இன்னும் சொல்லலாம். குறுகிய சாதி, மதம், நாடு, இனம் என்பவற்றிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டால் ஒழிய உலகம், பிரபஞ்சம், வரலாறு, சமத்துவம், சமதர்மம் என்ற பேறு நமக்கு வாய்க்காது. தன்னையே இப்படித் தகர்த்துக் கொண்டால், எரித்துக் கொண்டதால் தான் பேரன்பு, பெருங்காட்சி, பேரறிவு நமக்குச் சாத்தியம். இது ஒரு வகையில் மறுபிறப்பு. புதிய பிறப்பு கீதை சொல்கிறபடி இது விஸ்வரூப தரிசனம்.

நந்தனார் என்ற கதைக்குள்ளிருந்து இப்படி ஒரு விரிந்த பார்வையை நாம் பெற முடியும். சமய எல்லைக்குள்ளிருந்து இப்பார்வையை பெற முடியாது. சமயத்தின் ஆழத்தில் உறைந்து இருக்கும் மெய்யியல் பார்வையை நமக்குள் வளர்த்துக் கொண்டால் இத்தகைய மேன்மை நமக்குள் சாத்தியப்படும். வரலாறு முதலியவை குறித்து ஆழமான அறிவு இருந்தால் மட்டுமே இத்தகைய மெய்யியல் நமக்கு வாய்க்கும். வாழ்க்கை என்பது இப்படி நமக்குள் அகண்டு விரியும் போதுதான் நமக்கு விடுதலை / முக்தி / இறைமை வாய்க்கும்.

சடங்குகள் இத்தகையப் பார்வையைப் பெறாமல் நம் வழியை அடைக்கும். சமயம் என்பதன் உள் ஆழத்தில் இப்படி உறைந்து கிடக்கிற பார்வையைக் கற்றுக் கொள்வது தான் சமயம் பற்றிய சரியான ஆய்வாகவும் இருக்க முடியும். சமயப் பார்வையை குறுக்கி விடுவதன் மூலமும் விடுதலைக்கான வழியை நாமே அடைத்துக் கொள்கிறோம். சிவகோசரியாருக்கு என்றைக்கும் விடுதலைக்கான வாய்ப்பு இல்லை. கண்ணப்பனுக்குத் தான் இதற்கான வாய்ப்புண்டு. சித்தாந்தம் தனக்குள் இருக்கிற மெய்யியலை அடையாளம் கண்டு தன்னை கலைத்துக் கொள்ள வேண்டும்.

பூசலார் பற்றிய கதை இன்னொரு கோணத்தில் வளமான பார்வையை நமக்குத் தரமுடியும். சிவபெருமானுக்கு, அவருக்குரிய பெருமைக்குத் தகுந்தபடி பெரியதாக சோழ மன்னனால் கோவில் எடுக்க முடியும். தனக்கு முடியாது. ஆகவே தனக்குள்ளேயே, அமர்ந்து, ஆற, அமர, திட்டமிட்டு ஒவ்வொரு கல்லாக வைத்துக் கோவிலைக் கட்டி முடித்து சிவபெருமானை அதில் எழுந்தருள நாள் குறிக்கிறார். அதே நாளில் தான் தன் கோயிலில் சிவபெருமானைக் குடியேற மன்னன் வேண்டுகிறார். பூசலாரின் மனக் கோவிலுக்குத் தான் சிவபெருமான் வருகிறார். மன்னனுக்கு அதிர்ச்சியும் வியப்பும் பூசலாரைத் தேடி வருகிறான். இங்குக் கோவில் எதுவும் இல்லை. பூசலார் தான் அமர்ந்து இருக்கிறார்.

கட்டிடமாக கோவில் கட்டுவதைவிட மனத்தில் கோவில் கட்டுவதைக் கூட சிவபெருமான் பெரிதும் ஏற்பார். கட்டிடமும் வேண்டும் மனதில் பக்தியும் வேண்டும். எனினும் பூசலாரின் அன்பு மேலானது. சிவபெருமானிடம் அன்பு கொண்டவர்கள் வறியவர்கள் என்றாலும் வணக்கத்திற்குரியவர். ஏழை என்று இகழ வேண்டாம். சிவபெருமான் எங்கும் இருக்கிறார். முக்கியமாக அவரை மனத்தில் எழுந்தருளச் செய்ய வேண்டும். சித்தம் தான் இறைவன் விரும்பி வந்து தங்கும் கோவில். இப்படியெல்லாம் சேக்கிழார் வழியே நாம் பொருள் கொள்ளலாம். இதற்கு மேலும் இக்கதையை பொருள்படுத்துவதற்கு ஒரு வாய்ப்பிருக்கிறது. நாம் விரும்புகிற உலகம் இன்றைக்கு இல்லை. சமத்துவமும், சமதர்மமும் செயல்படுகிற உலகம் தான் நாம் விரும்பும் உலகம். அந்த உலகத்தில் தான் மனிதர்கள் பகை இன்றி, பூசலின்றி, போட்டி பொறாமைகள் இல்லாமல் ஒருவரோடு ஒருவர் ஒத்து, ஒருவருக்கொருவர் உதவி செய்து தன்னலம் இல்லாமல் எல்லாவற்றையும் பகிர்ந்து கொண்டு வாழ முடியும். அத்தகைய உலகம் தான் இறைவனுக்கு உகந்த உலகம். இறைமை தங்கும் உலகம். ஏசுநாதர், வள்ளுவர், காந்தி, மார்க்ஸ்

முதலியவர்கள் கனவு கண்ட உலகம். இந்த உலகம் இன்று இல்லையென்ற போதிலும் இத்தகைய உலகத்திற்கான கரு நமக்குள் இருக்கிறது. விடுதலை, முக்தி, மோட்சம் என்றெல்லாம் சமயங்கள் ஓயாமல் சொல்லும் உலகத்திற்கான கரு என்பது இதுவாகத்தான் இருக்க முடியும். ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் பணக்காரர் தேவ அரசுக்குள் நுழைய முடியாது என்று ஏசுநாதர் சரியாகத்தான் சொல்லி இருக்கிறார். இந்த அரசு வருவதை சமனங்கள் தடைப்படுத்தக் கூடாது 'அன்பும் சிவனும் இரண்டு என்பர் அறிவிலார்' என்று திருமூலர் சொன்னதையும் இப்படித்தான் பொருள்படுத்த வேண்டும். மன்னர்கள் கோவில் கட்டலாம். எனினும் சிவபெருமான் விரும்பி வந்து தங்குவதற்குரிய இடம் பூசலார் நெஞ்சம் தான்.

இப்படியெல்லாம் சேக்கிழாரின் வேறு சில கதைகளையும் தம் நிகழ்கால தேவைக்கொத்த முறையில் பெருள்படுத்தலாம் மனுநீதிச் சோழன் தன் மகன் செய்தத் தவறுக்காக அவனை தானே தன் தேர்க்காலில் இட்டுக் கொன்றதாக ஒரு கதை. இது தமிழரின் மனு நீதி – மனித நீதி. இது வடவரின் மனு நீதிச் சாத்திரத்திற்கு எதிரான கதை.

## 16

இறைவன்தான் எல்லாவற்றையும் படைத்தான், தந்தான் என்பதை உண்மையாக நம்பும் எவரும் தனக்கென எதையும் வைத்துக்கொள்ள முடியாது. எல்லாவற்றையும் பிறரோடு பகிர்ந்துகொள்வதன் மூலமே இறைவனுக்குச் சேவை செய்யமுடியும்.

**நா**ன் யார் என்பது சமயத்தின் ஓர் அடிப்படையானக் கேள்வி. இன்று இந்தக் கேள்விக்கு நான் ஒரு வகையில் பதில் கூறலாம். நான் மனிதன். பரிணாம முறையில் நான் தோன்றினேன். சமுதாயச் சூழலில் நான் வளர்ந்தேன். வரலாற்றில் நான் வாழ்கிறேன். பெற்றோர், குடும்பம், கல்வி, தேசம் என்னை உருவாக்குவதில் பங்கு பெறுகின்றன. இவையெல்லாம் நான் உருவாவதற்குக் காரணம் என்பதால் இவற்றோடு நான் இணைந்து வாழ வேண்டும். இம்முறையில் எனக்குச் சில கடமைகள் உள்ளன. இவற்றை நான் நிறைவேற்ற

வேண்டும். சமூகத்திலுள்ள முரண்பாடுகள் எனக்குள்ளும் இருக்கின்றன. என் மனத்தோடு நான் போராட வேண்டும். சூழலோடு போராட வேண்டும். என்னை ஆக்கும் சக்திகளைப் போலவே அழிக்கும் சக்திகளும் எனக்கு உள்ளும் வெளியிலும் உள்ளன. ஆக்கும் சக்திகளோடு ஒத்து இயங்கி என்னை அழிக்கும் சக்திகளுக்கு எதிராக நான் போராட வேண்டும். இந்தப் பேராட்டத்தின் போதே நான் மனிதனாகிறேன். என் வாழ்வைப் புரிந்து கொள்கிறேன். வரலாற்றையும் புரிந்து கொள்கிறேன். நான் தனியாள் இல்லை. சமூகத்தில் நான் ஒரு அங்கம். உழைக்கும் மக்களோடு நான் இணைந்து இருக்கிறேன். இந்த உலகம் தான் நான் வாழ்வதற்கான உலகம். நான் விலங்கிலிருந்து வேறுபட்டவன். விலங்குக்கு தான் விலங்கு என்ற உணர்வு இல்லை. மனிதன் என்ற முறையில் எனக்குத் தான் தன்னுணர்வு உண்டு. வரலாற்றுக்கு முன்பு எனக்கு நாகரிகம் தெரியாது. எவ்வளவோ தெரிய வரலாற்றில் தான், எவ்வளவோ கற்று அனுபவித்து கேள்வி கேட்டு புரிந்து கொண்டு பிரமைகளில் வாழ்ந்து பின் அவற்றைக் கலைந்து கொண்டு மேலும் மேலும் சிறந்த மனிதன் ஆகி இருக்கிறேன். வரலாற்றைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு நான் சிறந்த மனிதன். வரலாறு, சமூகம் முதலியவற்றிலிருந்து என்னை நானே பிரித்துக் கொண்டு எனக்கு என் வாழ்க்கையை போதும் என்ற தன்னலத்தில் அமிழ்ந்து விடுகிற பொழுது மனிதத் தன்மையிலிருந்து குறைந்து ஒரு கட்டத்தில் நானும் விலங்குக்கு நெருக்கமாகி விடுகிறேன். தனி உடைமை, அரசதிகாரம் என்பவகைளும் கூட இல்லாமல் சமத்துவம் சமதர்மம் என்ற முறையில் வாழும் போது தான் நான் நிறை மனிதன் ஆவேன். என்னை யாரும் படைக்கவில்லை. படைப்புக்கு ஒருவன் தேவை என்றாலும் அவன் இப்பொழுது என் வாழ்வின் மையம் இல்லை. இந்த உலகம்தான் மனிதன் வாழும் உலகம். மனித வாழ்வின் எல்லைகள் என்பன அதிக அளவில் பிரபஞ்ச அளவில் விரிவு பெறலாம். அதற்கு மேல் மனிதன் சிந்தனை செய்வதற்கு இல்லை. வரலாறு எந்தச் சிக்கலை முன் வைக்கிறதோ அதன் தீர்வுதான் என்னை மனிதனாக்குகிறது.

நான் யார் என்று ஒரு சமயவாதி போல என்னை நானே இப்பொழுது கேட்டுக் கொள்வதில்லை. சமயவாதி போல கேட்பது என்றால் இதற்கு வேறு வகையான பதில் தான் சொல்ல வேண்டும். இப்படித்தான் சமயத்தை நம்பும் பலரும் கூற முடியும். இறைவன் தான் என்னைப் படைத்தான். அவன் எந்த நோக்கத்தோடு என்னைப் படைத்தான் என்று எனக்குத் தெரியாவிட்டாலும் எனக்கு நன்மை

செய்யத்தான் என்னை இந்த உலகச் சூழலில் வைத்துப் படைத்திருக்கிறான். உயிர் வாழ்க்கை என்று தோன்றியது என்று நமக்குத் தெரியாது. முற்பிறப்புகளில் நான் என்னவெல்லாம் செய்தேன் என்பதும் தெரியாது. இப்பிறப்பில் என்னை மனிதனாக இறைவன் படைத்தது எனக்கு ஒரு பேறு. முற்பிறப்புகளில் நான் செய்த நல்வினையின் பயனாக இப்பொழுது மனிதனாகி இருக்கிறேன். இந்தப் பிறப்பிலும் எத்தனையோ குறைகள், துயரங்கள், நெருக்கடிகள் முதலியவற்றை நான் எதிர்கொள்கிறேன். முற்பிறப்பில் செய்த தீவினைகளை நான் தீர்த்துக் கொள்வதற்காகவே இப்பிறப்பில் எனக்குத் துயரங்கள் முதலியவை நேர்கின்றன. இவற்றிலிருந்து விடுபடுவதற்கான நெறி எனக்குத் தெரிந்திருக்கிறது. புலன் இன்பங்களில் நான் மூழ்கி விடக்கூடாது. இறைவனை நான் நம்ப வேண்டும். இந்த உலகம் தான் என்னைத் தூய்மை செய்து கொள்வதற்கான இடம். இதற்காகத் தான் இறைவன் எனக்குத் துயரங்கள், சோதனைகள் என்று பலவற்றைத் தருகிறான். இறைவனை நான் ஐயுறக் கூடாது. நம்ப வேண்டும். இப்படி நம்புவதன் மூலம் இறைவன் எனக்கு நெருக்கமாகிறான். இனி எனக்கு அடுத்தப் பிறவி இல்லை. இப்பிறவி நீங்கிய பிறகு இறைவனோடு நான் கலந்து விடுவேன். என்னை இறைவன் மனிதனாகப் படைத்ததன் நோக்கம் இப்படித்தான் நிறைவு பெறும்.

இப்படி எல்லாம் சமயவாதிகள் இன்றும் கூறுகின்றனர். இவர்களைப் பொருத்தவரை உலக வாழ்க்கை என்பது ஓர் இடைக்காலம் மட்டுமே. இந்த உலகில் ஏற்படும் துயரங்கள் முதலியவை என்னைத் தூய்மைப்படுத்துவதற்கானவை. இந்த உலக வாழ்க்கை எனக்கு முதன்மையானது அன்று. வரலாறு என்று நான் கற்றுக் கொள்ள வேண்டியதில்லை. பொருளியல் பற்றி எனக்கு ஆய்வு தேவை இல்லை. பரிணாமம் முறையில் நான் இறுதியாக வந்திருக்கலாம். முதல் உயிரை ஓர் நோக்கத்தோடு படைத்தவன் இறைவன் தான். பிரபஞ்சம் தானே இயங்க முடியாது. தனி உடைமை, அரசு அதிகாரம் எல்லாவற்றினுள்ளும் செயல்படுபவன் இறைவன். அவன் தான் எல்லாவற்றையும் படைக்கிறான், அழிக்கிறான். என்னை உயர்ந்த இடத்தில் அமர்த்துபவனும் அவன்தான். கீழே இறக்குபவனும் அவன் தான். அவனன்றி ஓர் அணுவும் அசைவதில்லை.

இத்தகைய சிந்தனைகள் சமயம் சார்ந்த சிந்தனைகள் இவற்றைக் கொண்டு இன்று மனித வாழ்வை விளக்க முடியாது. சமயத்தை

முழு அளவில் இன்று எவரும் நம்புவதில்லை. சமயத்தை இறைவனை முழு அளவில் நம்பும் எவரும் பிற மனிதர் மீது ஆதிக்கம் செய்ய முடியாது. செல்வம் சேர்த்துக் கொள்ள முடியாது. அதிகாரம் செய்ய முடியாது. ஒரு வகையில் சொன்னால் இறைவன் தங்க வேண்டும் என்பதற்காக கோயில் கட்ட முடியாது. இறைவனுக்கு மனிதன் உணவு, உடை என்று தர முடியாது. எங்கும் இருக்கும் இறைவனை ஒரு வடிவில் ஒரு பெயரில் அடைக்க முடியாது. மற்றவர் உழைப்பைச் சுரண்டி தமக்குச் செல்வத்தையும் அதிகாரத்தையும் சேர்த்துக் கொண்டவர் ஏதாவது தானம் செய்து கோவில் கட்டி இறைவனை ஏமாற்ற முடியாது. இறைவன் தான் எல்லாவற்றையும் படைத்தான், தந்தான் என்பதை உண்மையாக நம்பும் எவரும் தனக்கென எதையும் வைத்துக் கொள்ள முடியாது. எல்லாவற்றையும் மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வதன் மூலமே இறைவனுக்குச் சேவை செய்ய முடியும். அரசனோ, செல்வனோ, மக்கள் மீது செய்யும் அதிகாரம் இறைவனுக்கு உகந்ததாக இருக்க முடியாது. இறைவன் என்ற நம்பிக்கையும் வைத்துக் கொண்டு கொள்ளையடிப்பது மக்களுக்கு எதையும் விட்டுக் கொடுக்காமல் அதிகாரம் செய்வது, இறைவன் எனக்கு மட்டுமே அருள் செய்து பீடங்களில் வைத்துள்ளான். எனது வாக்குத்தான் இறைவனுடைய வாக்கு. நான் இறைவனின் தூதன். இறைவனுக்குத் திருக்குமாரன். நான் இறைவனின் அவதாரம். எனக்கு நீங்கள் சேவை செய்ய வேண்டும். என் பெயரில் மத அமைப்பு ஒன்றை நீங்கள் உருவாக்க வேண்டும். இப்படியெல்லாம் இறைவனை வைத்து மோசடி செய்பவர்கள் எப்படி மனிதராகக் கூட இருக்க முடியும். நான் யார் என்ற அடிப்படையானக் கேள்விக்கு, நான் மனிதன். இவ்வுலகம் தான் எனக்கு வாழ்விடம். தொடக்க காலத்தில் மனிதன் யாருக்கும் அடிமையாக இல்லை. இயற்கையோடு அவன் இணைந்து இருந்தான். வரலாற்றுக் காலத்தில் தான் தனிவுடைமை, அரசு அதிகாரம் முதலியவை தோன்றி இறுகிய காலத்தில் தான் மனிதன் துயரங்களுக்கு உள்ளானான். தன்னை இழந்தான். மனிதத் தரத்திலிருந்தும் தாழ்ந்தான். அப்புறம் தன்னைப் புரிந்து கொண்ட நிலையில் ஆதிக்கங்களுக்கு எதிராகப் போராடி உலகத்தையும் வாழ்வையும் தன் வசப்படுத்தி எல்லாவற்றையும் எல்லோரும் பகிர்ந்து கொண்டதன் மூலம் இவன் மனிதனாக நிறைவு பெறுகிறான். நான் என்ற கேள்விக்கு இது தான் நிறைவான பதிலாக இருக்க முடியும்.

சமயம் என்பதை வரலாறு, பொருளியல் முதலிய சூழல்களில் இருந்து முற்றாகப் பிரித்து விட்டு இவற்றுக்குப் புறம்பாக இறைவன், படைப்பு, முன் வினை, ஆன்மா, தீவினை என்ற அடிப்படைகளை வைத்து மனித வாழ்வை விளக்க முடியாது. இறைவன் முதலிய அனைத்துக் கருத்தாக்கங்களும் இந்த உலகில், வரலாற்றுச் சூழலில் மனிதன் எதிர்கொண்டச் சிக்கல்களைப் புரிந்து கொள்ளும் முறையில் மனிதன் உருவாக்கிக் கொண்ட கருத்துக்கள் தான். இவை மனிதச் சூழலிலிருந்து முற்றாக விலக்கி வைத்து இறைவன் ஆன்மா வினை ஆகியவற்றைப் புரிந்து கொள்ள முடியுமா? இவை எப்படி தாமே தோன்ற முடியும்? முதலில் உலகம், உயிர்கள், மனிதன், வாழ்க்கை இவற்றிலிருந்து தான் இறைவன் ஆன்மா வினை முதலியக் கருத்தாக்கங்கள். இவற்றுக்கு சுயமான இயக்கம் இல்லை. இவை தாமே தோன்றுவதில்லை. குறைந்த அளவுக்கேனும் வரலாறு, அறிவியல் முதலியவற்றின் கல்வி அறிவு இல்லாமல், ஆய்வு இல்லாமல் சமயம் பற்றி பேசுவதற்கில்லை. பரிணாமக் கோட்பாட்டை ஏதோ கற்பனை என்று ஒதுக்கிவிட முடியாது. கோவில், மதபீடம், புரோகிதம் முதலியவை மனிதன் மீது சுமைகளாக அதிகாரம் செய்ய முடியாது. தனி உடைமையையும் அரசு அதிகாரத்தையும் கட்டிக் காப்பாற்றி வளர்ப்பவை எப்படி சமயங்களாக இருக்க முடியும். இவற்றை யார் என்னத் தேவைக்காக இன்னும் வைத்திருக்கின்றனர். மனிதனுக்கு இவை விடுதலை தருமா? வாழ்வைத் தருமா?

17

சமயம், கடவுள், ஆன்மா, ஆன்மீகம் முதலியவற்றை கருத்தாக்கங்கள் என்ற முறையில் புரிந்து கொள்ளும் முயற்சியை மேலும் தொடர்கிறேன். இறைவனுக்குப் பல பெயர்கள், பல்வேறு வடிவங்கள், இறைவனைப் பற்றி எவ்வளவோ கதைகள். இவை எல்லாமே

வாழ்வில் இதுவரை
கண்டவை பொய்யென்றும்
போலித்தனங்களென்றும்
உணரும்போது நாம் என்ன
ஆகிறோம். மயானத்தில்,
சுடலையில் சாம்பலைப்
பூசிக்கொண்டு
வெற்றுடம்போடு
நிற்கிறோம். ஆதாரமற்ற
பாழ்வெளியில் நிற்கிறோம்.

மனிதன் படைத்தவை. இறைவனுக்கு மனிதன் தன்னுருவில் வடிவம் தருகிறான். தன் தேவைகளை ஒட்டி இறைவனுக்கும் சிலத் தேவைகளை முன் வைக்கிறான். இறைவன் அவனுக்குரிய வடிவங்கள் முதலியவற்றை தன்னைக் கொண்டே படைக்கிறான். தன்னை ஒதுக்கி வைத்து விட்டு, தன் வாழ்வியல் அனுபவங்களை ஒதுக்கிவிட்டு, தன் கலை உணர்வை ஒதுக்கி வைத்து இவற்றையெல்லாம் அவனால் செய்ய முடியாது. கற்பனைகள் என்பவை வெறுமையிலிருந்து தோன்ற முடியாது. வாழ்வியல், அனுபவங்கள் தான் கற்பனைக்கான மூலங்கள்.

சைவ சமயவாதிகள் சிவன் என்றும் சக்தி என்றும் கூறும் பொழுது சக்திக்கு முதன்மை கொடுக்கின்றனர். சக்தி இல்லாமல் சிவனில்லை. சக்தி என்பது பெண், தாய்மை. சக்திதான் சிவனை இயக்குகிறாள். வரலாற்றுக்கு முன்னர் தேடிச் சென்றால் தொடக்க காலத்தில் இருந்தது தாய், தலைமைச் சமூகம். பெண்தான் குழந்தையைப் படைக்கிறாள். வேளாண்மையைக் கண்டு பிடித்தாள். ஆணை வைத்துக் குழந்தைக்கு அடையாளம் சொல்ல முடியாது. தலைமை தாங்கும் பெண்தான் ஆண்களை இயக்குகிறாள். கணவன், மனைவி என்ற உறவு அக்காலத்தில் இல்லை என்ற முறையில் நாம் இதைப் புரிந்து கொள்ள முடியும். பின்னர் காலம் மாறுகிறது. பெண்ணை வீழ்த்திவிட்டு ஆண் தலைமைக்கு வருகிறான். வேட்டையாடும் காலமும் மாறி கருவிகள், உற்பத்தி, தொழில் என வருகிற பொழுது ஆண் தலைமைக்கு வருகிறான். முன்னைய நினைவு மாறுவதில்லை. இந்த நினைவின் ஒரு கூறாகத்தான் சக்திதான் சிவனை இயக்குகிறாள் என்றக் கருத்து சைவ சமயத்தில் நிலைபெறுகிறது. பெண்ணை ஆண் வீழ்த்தினான் என்றக் கருத்தும், சைவ சமயக் கதையில் இடம் பெறுவதை நாம் அறிவோம். சிவன் கால் தூக்கி நடனமாடி, பெண் அப்படி ஆடமுடியாமல் செய்து அவளைத் தாழ்த்தினான் என்ற கதையின் உள்ளுரை இந்த உண்மையைத் தான் சொல்லுகிறது. ஆணும், பெண்ணும் சரி நிகர் என்ற உண்மையும் சைவத்தில் உள்ளதை அர்த்தநாரீஸ்வரர் என்ற வடிவம் புலப்படுத்துகிறது.

இவை எல்லாம் ஏற்கனவே பலர் சொல்லி நாம் அறிந்த உண்மைகள். இன்னும் சிலவற்றை இதே நெறியில் நாம் ஆய்ந்து கண்டறிய முடியும். வாழ்க்கையில் நல்லவை, தியவை என்று பலவற்றை நாம் உணர்கிறோம். வாழ்வின் ஆதாரங்கள் என்று நம்

அனுபவங்களைத் துருவி தேடிச் செல்லும் பொழுது சில உண்மைகள் நமக்குப் புரிய வருகின்றன. மனித வாழ்வில் ஆண்மைக்கும் இடம் உண்டு. பெண்மைக்கும் இடம் உண்டு. இரண்டும் முரணபட்டவை எனினும் இணைந்திருப்பவை. ஒன்றில்லாமல் மற்றதும் இல்லை. புலன் இன்பத்தில் ஆழ்ந்துச் செல்வதும் வாழ்வின் ஒரு கூறு. அப்புறம் அதிலிருந்து விடுவித்துக் கொண்டு புலன் இன்பத்தை ஒதுக்கி வைத்து ஆய்வுக்காக, புதியவைத் தேடலுக்காக ஊரைத் துறந்து உற்றவரிடமிருந்து விலகி, காடு மேடுகளில் அறிவைத் தேடி ஞானத்தைத் தேடி வாழ்வின் ஆதார உண்மை எது என்பதைக் கண்டறிவதற்காக தியானத்தில், தவத்தில், ஈடுபடுவதும் வாழ்வின் இன்னொரு ஆதாரக் கூறு. வாழ்வில் இதுவரை கண்டடைந்த உண்மைகள், வெற்றிகள், செல்வம், உறவு முதலியவை, பொய்யானவை. போலித்தனமானவை. நிலையானவை அல்ல என்ற உண்மை நம்மை எதிர்ப்படும் பொழுது நாம் என்ன ஆகிறோம். மாயானத்தில், சுடலையில், சுடுகாட்டில் சாம்பலைப் பூசிக் கொண்டு. வெற்று உடம்போடு நிற்கிறோம். ஆதாரம் எதுவுமற்ற பாழ் வெளியில் நிற்கிறோம். வாழ்வில் இதுவும் ஓர் பேரனுபவம். வாழ்க்கை நமக்கு முற்றிலும் வசமாகி, பேருண்மைகள் நம் கைக்கு வசப்பட்டு ஆனந்த நிலையில் பரவசத்தோடு நாம் பாடி, ஆடுகிறோம். பாட்டும், இசையும், கூத்துமாக நாம் ஆடுகிறோம். வாழ்க்கை நிரந்தரமில்லை. எங்கும் பெரு வெள்ளம், பேரழிவு, நிலங்கள் அதிர்கின்றன. கோட்டை கொத்தளங்கள் தவிடு பொடியாகின்றன. இப்படியும் வாழ்வின் ஒரு கட்டத்தை நாம் அறிகிறோம். அழிவை நாம் ஏற்பதில்லை. வருவது வரட்டும் என்று நிமிர்ந்து நிற்கிறோம். திருமணம், குழந்தைப் பேறு, உற்றார் உறவினரோடு திருவிழா இப்படியும் வாழ்க்கையில் ஒரு பேரின்பம்.

வரலாற்றுக் காலந்தோறும் வாழ்வின் பேரனுபவங்கள் என்று இப்படி இன்னும் பலவற்றைப் பார்க்க முடியும். பிரபஞ்ச இயக்கத்தினுள்ளும் இப்படி எத்தனையோக் காட்சிகள். வரலாற்றினுள்ளும் இப்படி பல கதிகள். இத்தகைய பேரனுபவங்களை கதைகளாக்கி, கலை வடிவங்களாக்கி, சமயத்திற்குள் பொதிந்து வைத்திருக்கிறான் மனிதன். பழங்கால மனிதன் தன் வாழ்வியல் அனுபவங்களை வேறு எங்கு எப்படி கொட்டி வைப்பான்? சிவபெருமானின் எத்தனையோ கோலங்கள், வடிவங்கள் – தட்சிணா மூர்த்தி என்று ஒரு தவ வடிவம். சுடலையில்

சாம்பல் பூசி ஆடும் நடன வடிவம். ஊர்த்துவ தாண்டவம். பிரம்மனின் மண்டையோட்டைக் கையில் தாங்கி, பிச்சைக் காரனாய் அலையும் பிச்சாடன மூர்த்தி வடிவம் - இப்படி எத்தனையோ வடிவங்கள். இவை குறித்த கதைகள். திருமாலுக்கும் இப்படி பல கதைகள், வடிவங்கள். கருணையும் கோபமும் கொண்ட காளியின் வடிவம். தீவினையை காலில் மிதித்து ஆயுதங்கள் பலவற்றை ஏந்தி ஆடுவதாக ஒரு வடிவம்.

இவை எல்லாம் வெறும் கதைகள் அல்ல. இவை எல்லாம் வாழ்வின், வரலாற்றின், பிரபஞ்சத்தின் பல்வேறு இயக்கங்களை உள்ளடக்கிய வடிவங்கள், கதைகள். சமய நம்பிக்கை உடையவர் நெறியில் இக்கதைகளை நாம் பொருள்படுத்தவில்லை. சமயம் என்ற வடிவத்திற்குள் வாழ்வு முதலியவற்றின் பேருண்மைகளை இவற்றின் வழியே நாம் காண்கிறோம்.

மானுடவியல், சமூகவியல் என்ற பல்வேறு வகையான ஆய்வுகளுக்குள் இப்படி எவ்வளவோ பேருண்மைகள் தட்டுப்படலாம். புராணக் கதைகளில் இப்படி எத்தனையோ உண்மைகளைக் காண முடியும். இவை குறித்த படிப்பறிவு, ஆய்வறிவு நமக்குத் தேவை. இவற்றையெல்லாம் வரலாற்றுச் சூழலில் மனிதனின் படைப்புகளாக, கலைகளாக கண்டறிவதை ஒதுக்கி வைத்து இவை பற்றிய ஆய்வில்லாமல் இந்த வடிவில் இவை என்றோ நடந்த வரலாற்று நிகழ்ச்சிகளாக இறைவன் இந்த உலகத்திற்கு வந்து செய்த ஆடல்களாக இப்படியெல்லாம் இன்றைய உலகத்தை, இன்றைய வரலாற்றை, இன்றைய மனிதச் சிக்கலை மக்கள் புரிந்து கொள்ளாமல் தடுப்பதோடு மீண்டும் நம் மக்களைப் பழங்காலத்திற்குள், மூடநம்பிக்கைகளுக்குள், ஆதிக்க சக்திகளிடம் தள்ளி விடுகிற முயற்சியை இன்றும் இவர்கள் வானொலியிலும் தொலைக்காட்சியிலும், திரைப்படங்களிலும், மேடைகளிலும் அவர்களுக்கு பெரும் பொருள் கொடுத்து வாழ்வித்துக் கொண்டு இருக்கிறார்கள். பழங்காலம் இன்னும் இவர்களுக்கு தேவையாக இருக்கிறது. இவை எல்லாம் கலைகள் என, கற்பனைகள் என மனிதத் தேடலின் பகுதிகள் என காண்பதன் மூலமே நம் வாழ்வு மேன்மை பெறும். தஞ்சைப் பெரிய கோவில் இன்று மாபெரும் கலைக்கூடம். தஞ்சையிலும் மதுரையிலும் கூட இப்படி கலைக்கூடங்கள். இப்படித்தான் வரலாற்றில் இவற்றைத் தக்க வைக்க வேண்டும்.

18

> கடவுள்தான் எனக்குள் ஆன்மாவாகத் தங்கி யிருக்கிறார் என்று சமயவாதிகள் கூறுவ தில்லை. உண்மயில்லை. இறைவன், ஆன்மாவைப் பற்றிய போதுமான புரிதல் இல்லை.

சமயம் பற்றிப் பேசுபவர்கள் ஆன்மா என்றும் ஆன்மீகம் என்றும் பேசுகின்றனர். அவர்களைப் பொருத்தவரை ஆன்மா என்பது தனித்து இயங்கக்கூடியது. ஒரு மனிதன் பிறப்பதற்கு முன்பும் ஆன்மா இருக்கிறது. இறக்கும் பொழுது அவனை விட்டு வெளியே செல்கிறது. இறைவனது ஆணையால் அல்லது வினைத் தொடர்பு காரணமாக பொருத்தமான இன்னொரு உடம்பு தேடிச் செல்கிறது. ஆன்மாவுக்கு அழிவு இல்லை. நல்வினைகளின் விளைவாக மீண்டும் பிறவி என்பது இல்லாமல் இறைவனோடு ஆன்மா சேர்ந்துவிடும். இறைவன்தான் ஆன்மா என்ற வடிவில் நமக்குள் இருக்கிறான். அவன் நம்முள் இருக்கிறான் என்பதை நாம் அறிந்து கொள்ள இயலாத முறையில் மாயை அல்லது மலங்கள் மறைத்து விடுகின்றன. தவத்தின் பயனாக அல்லது இறையருளால் மலங்கள் நீங்க ஆன்மாவின் உண்மை இயல்பை நம்மால் அறிய முடியும்.

இறை அனுபவம் எனக்கு உண்டு என்பதை எனது முன்னைய நூலில் எடுத்துரைத்திருக்கிறேன். இறை என்பதையும் ஆன்மா என்பதையும் கருத்தாக்கங்கள் அன்றி வேறு இல்லை என்பதையும் நான் விளக்கியிருக்கிறேன். மனிதனுக்கு மட்டுமே மனம் உண்டு என்பது கூட அதே வடிவில் உண்மையில்லை. மனம் என்பது நினைவுகளின் தொகுப்பு என்பது மட்டுமல்லாமல் சிந்தனைத்திறன், பகுத்தறிவு, உள்ளுணர்வு என்பதையும் கொண்டது. மனம் என்பது, இவற்றை உள்ளடக்கிய ஒரு கொள்கலம் என்று புரிந்து கொள்ளக் கூடாது. நினைவுத் திறன் என்பது விலங்குகளுக்கும் உண்டு, சிந்தனைத் திறனும் விலங்குகளுக்கு சிறிய அளவுக்கு உண்டு. நன்மை தீமை என்று தொடங்கி பல்வேறு உணர்வுகள் புரிதல் முதலியவை மனிதனுக்கு மட்டுமே உண்டு. இவற்றோடு உள்ளுணர்வு என்பதும் உண்டு. இவை பற்றியெல்லாம் உளவியல் அறிஞர் ஓரளவுக்கேனும் விளக்கியுள்ளனர். ஃபிராய்டு அடிமனம் பற்றி விரிவாகச் சொலுகிறார். யங் என்பவர் சமுதாயக் கூட்டு நனவிலி மனம் என்பது பற்றிச் சொல்லுகிறார். இன்னும் இப்படி எத்தனையோ ஆய்வுகள்.

இவர்கள் எல்லாம் மனம் என்பது பற்றித்தான் பேசுகின்றனர். இவர்கள் அறிவியல் ஆய்வாளர்கள். இவர்கள் சமயவாதிகள் அல்லர்.

1960–களில் Bliz என்ற இதழில் H.N. பானர்ஜி என்பவர் எழுதிய கட்டுரைகள் இன்னும் என் நினைவில் இருக்கின்றன. ராஜஸ்தான் பல்கலைக்கழகம் ஒன்றில் பாரா சைக்காலஜி (Para - Psycology) என்ற துறையில் பணியாற்றிவர். இப்பிறப்பிலும் முன்பிறப்பு நினைவுகள் ஏற்படுவது பற்றி ஏராளமான தகவல்களைச் சேகரித்து அவர் தொடர்ந்து எழுதினார். உதாரணமாக டெல்லியில் இருக்கும் ஒரு இளம் பெண் ஒரு விபத்துக்குள்ளாகி மண்டையில் அடிபட்டு பிறகு நினைவு திரும்பி வருகிற பொழுது புதியதாக தனக்கொரு பெயரையும் முற்பிறப்பில் தன் பெற்றோர் பற்றியும் தான் பிறந்து வளர்ந்த ஊர் லாகூர் என்றும் விரிவாகச் சொல்லுகிறார். லாகூருக்குச் சென்று அவர் குறிப்பிட்ட அடையாளங்களை வைத்து தேடிப் பார்த்தால் அவள் சொன்னவை எல்லாம் உண்மைதான் என்று தெரிய வருகிறது. இப்படி எத்தனையோ விவரங்கள். அறிவியல் ஆய்வாளர் என்ற முறையில் இதை விளக்குவதில் உள்ள சிக்கலை அவர் இறுதியில் குறிப்பிட்டார்.

நினைவுகள் என்பவை நம் மூளையில்தான் சேகரமாகின்றன. ஒருவர் இறக்கும் பொழுது மூளைச்செல்களும் இறக்கின்றன. எரிக்கப்படும் போதோ, புதைக்கப்பட்ட பிறகோ மூளைச் செல்கள் முற்றாக சிதைந்து விடுகின்றன. மூளைச் செல்களோடு சேர்ந்து நினைவுகளும் அழிந்து விடுகின்றன. நினைவுகள் தொடர்வதற்கு ஆதாரமாக எதுவுமில்லை. அப்படியானால் மறுபிறப்பு என்று ஒன்றில் மீண்டும் இந்த நினைவுகள் ஒருவருக்குள் ஏற்படுவது பற்றி நம்மால் சிந்திக்க முடிவதில்லை. வேறு எந்த ஆதாரத்தில் நினைவுகள் தொடர முடியும்? மனம் தொடர முடியும்? பானர்ஜி இத்துடன் நிறுத்திக் கொள்கிறார். இங்கும் சமயவாதிகள் நுழைந்து ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கலாம். நம்பிக்கை தரும் முறையில் நமக்கு விளக்கங்கள் கிட்டுவதில்லை.

பானர்ஜி மட்டுமில்லாமல் இன்னும் எத்தனையோ அறிஞர்கள் எவ்வளவோ எழுதியுள்ளனர். உயிர் என்பதும் இப்படி உண்டு என்று சமயவாதிகள் திரும்பத் திரும்ப சொல்வதையும் நம்மால் ஏற்க முடியவில்லை. உயிர் எனத் தனியே ஒன்று இல்லை. உயிர் இயக்கம் என்பது நம்மால் புரிந்து கொள்ளக் கூடியது. புரதம் முதலிய வேதிப்

பொருள்களின் இணைவோடு இது உறவுடையது. இந்த விவாதம் முடிவில்லாமல் மக்கள் மத்தியில் இன்னும் தொடரத்தான் செய்கிறது. இதற்கு முடிவு கட்டுவது அறிவியல் வளர்ச்சியோடு மட்டும் தொடர்புடையதாக இல்லை. கூடவே தத்துவம் முதலிய பிறவகை ஆய்வுகளும் தேவைப்படுகின்றன. நம் சமூகச் சூழலில் இவை வளர்ச்சி பெறவில்லை என்பது மட்டும் அல்ல. இவற்றை வளர்த்தெடுப்பதற்கான கல்வித்துறை முயற்சிகளும் செயல்படவில்லை. கல்வியாளர்களின் பெரும்பான்மையோடு சமய நம்பிக்கையிலிருந்தும் விடுபடவில்லை. மிகச்சிறந்த மருத்துவர் கூட இனி இறைவன் தான் இவரைக் காப்பாற்ற வேண்டும் என்று கைவிரிக்கின்றனர். மருத்துவரையும் மீறி ஒருவர் குணமாகிறார் என்றால் இது இறைவன் செயல்தான் என்று மக்கள் நம்பி விடுகின்றனர். மருத்துவர் மீது, மருத்துவத்தின் மீது இருக்கும் நம்பிக்கையைக் காட்டிலும் இறைவன் மீதிருக்கும் நம்பிக்கை இவர்களுக்கு மனநிறைவு தருகிறது.

என்னை நாத்திகன் என்று சொல்லமாட்டேன். இறைவன் என்பதை ஒரு கருத்தாக்கம் தான் என்று நாத்திகன் சொல்லமாட்டான். கருத்தாக்கம் என்று சொல்லும் பொழுது தேடலுக்கு இடம் இருக்கிறது. இப்படித் தேடுவதில் நாத்திகனுக்கு அக்கறை இல்லை. அறிவியலில், உளவியலில் இன்னும் தொடர்கிற சிக்கலில் நாத்திகனுக்கு அக்கறை இல்லை. உள்ளுணர்வு என்பதை நாத்திகன் ஏற்பதில்லை. இன்னும் எத்தனையோ வகைகளில் நாத்திகத்தோடு நான் முரண்படுகிறேன். இந்த ஆய்வு இப்பொழுது முக்கியம் இல்லை.

ஆன்மா என்பது தனித்ததாக ஒன்றில்லை என்பது என் அனுபவம். மனம் என்பதன் உள் இயக்கத்தின் நினைவு முதலியப் பலவற்றைக் கடந்து பார்க்கிறபொழுது தன்னுணர்வு என்பதாகிய ஒரு மையம் இருக்கிறது. விலங்குகளுக்கு தன்னுணர்வு இல்லை. மனிதனுக்கு மட்டுமே தன்னுணர்வு உண்டு. நான் மனிதன், நான் இன்னவன் என்று உணர்கிற உணர்வு இது. குழந்தைக்கு தன்னுணர்வு இல்லை. பெயர் சொல்லி பலமுறைக் கூப்பிட்டு அப்புறம் ஒரு கட்டத்தில் நான் இந்தப் பெயருக்குரியவன் என்ற புரிதல் ஏற்படுவதன் தொடக்கம் தான் இந்தத் தன்னுணர்வு. நான் அறிவுள்ளவன். நான் தமிழன் என்பனவெல்லாம் இதன் வளர்நிலைகள். மனச்சாட்சி என்று நாம் குறிப்பிடுவது இந்தத் தன்னுணர்வு சார்ந்தது. என் மனம் இப்படி

உணர்கிறது என்றெல்லாம் சொல்லும் பொழுது இந்தத் தன்னுணர்வைத்தான் குறிப்பிடுகிறோம். என்னால் இதைச் செய்ய முடியாது அல்லது இதைச் செய்வதற்காகத் தான் நான் உயிர் வாழ்கிறேன் என்ற பேருணர்வு இந்தத் தன்னுணர்வின் விரிவு. நான் கடவுள் என்ற உணர்வு கூட இந்தத் தன்னுணர்வு தான். மனத்தின் உள் இயக்கம் இது. மனநிலை திரிந்த நிலையில் அதாவது முழு அளவில் பித்துப் பிடித்த நிலையில் இத்தகையத் தன் உணர்வு அவனுக்கு இருப்பதில்லை. நான் இன்னவன் என்ற புரிதல் இருக்கும் வரை தான் ஒருவனைக் குணப்படுத்த முடியும். இந்த உணர்வு அற்றவனை மனிதனாக மீட்கவே முடியாது. நான் என்ற இந்த தன்னுணர்வு தான் நமக்குள்ளிருந்து நம்மைத் தூண்டுகிறது. வளரும் போது நம் வாழ்க்கையை அறிந்து கொள்ளும் பொழுது என் சூழல் மொழி, என் தேசம் என்பனவற்றை எல்லாம் நமக்குள் செரித்துக் கொள்ளும் பொழுது, என்னை நானே யார் என்று புரிந்து கொள்ளும் பொழுது, என் வாழ்வின் அர்த்தம் என்ன? என்றெல்லாம் என் சிந்தனை இயங்கும் போது எனது தன் உணர்வு வலிமை பெறுகிறது. என்னை நானே இழக்க முடியாது. நான் எவருக்கும் அடிமை அல்ல. எனக்குள் வரலாறு இயங்குகிறது. பிரபஞ்சம் இயங்குகிறது. உயிர்களோடு நான் ஒத்து இயங்குகிறேன். பிரபஞ்சம் தழுவிய பேரியக்கத்தின் ஒரு கூறு நான். வரலாற்றுச் சூழலிலிருந்து தான் என்னை நானே உயிர்ப்பித்துக் கொண்டேன். உரம் பெற்றேன். பார்வை பெற்றேன். காலங்காலமாக இறைவன் என்று பலரும் கூறி வரும் இந்தப் பேரியக்கம் தான் எனக்குள்ளும் இருக்கிறது. அந்தப் பேரியக்கமும் நானும் வேறு வேறு அல்ல. ஒன்று என்றும் இதைச் சொல்லலாம். 2 அல்லது 3 என்றாலும் தவறில்லை. எல்லாவற்றின் இணைவும் இயக்கமும் இங்கு ஒரு புள்ளியில் குவிந்திருக்கின்றன.

சமயவாதிகள் ஆன்மா என்று எதைக் குறிப்பிடுகின்றனரோ, ஆன்மா என்பதற்கு அவர்கள் எவ்வகையான விளக்கங்கள் தருகின்றனரோ, அதைத் தான் இங்கு என் அனுபவத்தின் வழியே புரிந்து கொண்டிருக்கிறேன். என்னால் உறுதியாக இப்பொழுது கூற முடியும். ஆன்மா என்று தனியே எதுவும் இல்லை. எனக்கு வெளியில் இதற்கு இருப்பு இல்லை. கடவுள்தான் எனக்குள் ஆன்மாவாக வந்து தங்கி இருக்கிறார் என்று சமயவாதிகள் கூறுவதில் உண்மையில்லை. இவர்களுக்கு இறைவனைப் பற்றியோ, ஆன்மாவைப் பற்றியோ கூடத் தேவையான புரிதல் இல்லை. முன்பே நான் கூறியபடி என்னை

மனிதன் என்று சரியாகப் புரிந்து கொள்வதற்கு சமயம் உதவியாக இல்லை. சமயம் என்றத் தடையை நீக்கிய பிறகு தான் நான் மனிதனாகிறேன். இப்பொழுது தான் வரலாறு, பொருளியல், அறிவியல் என்றெல்லாம் என்னால் கற்க முடியும். இவற்றை எல்லாம் கற்க விடாமல் சமயம் தடுக்கிறது. புலன்களின் தேவை என்ன? என்ற புரிதல் கூட எனக்கு ஏற்படாமல் சமயம் தடுக்கிறது. சமயம் என்று தொடங்கியது என்ற வரலாறு சமயத்திற்குத் தெரியாது. சமயம் குருமார்களைத் தான் உற்பத்தி செய்கிறது. அவர்களைப் புனிதப்படுத்துகிறது. அவர்களை உயர்த்தி வைக்கிறது. மனிதர்களிடமிருந்து அவர்களைப் பிரித்து வைக்கிறது. இறைவனை மனிதருக்குள் தேட வேண்டும், வரலாற்றுக்குள் தேட வேண்டும். மனித விடுதலைக்குள் தேட வேண்டும். இப்படியெல்லாம் தேடி மனிதர்களின் விடுதலைக்குப் பாடுபடுபவன் தான் உண்மையான குரு.

## 19

**ஜே.கே. நம் மனதிற்குள் கரையும்பொழுது நம்மால் பக்தி செய்ய முடியாது. அதிகாரம் செய்ய முடியாது. வணிகத்தில் ஈடுபாடு கொள்ளமுடியாது. ஜே.கே.வை மேற்கோள்காட்டி சொற்பொழிவு செய்ய முடியாது.**

சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவத்தை இங்கு சொல்ல வேண்டும். ஜே. கிருஷ்ண மூர்த்தியின் சிந்தனைகளில் ஆழ்ந்தப் பற்றுடைய ஒரு பெரியவர், தன் இல்லத்தில் ஒவ்வொரு சனிக்கிழமை அன்றும் மாலையில் ஜே.கே. வின் பதிவு செய்யப்பட்ட ஒளி.ஒலி நாடா உரையாடல் அல்லது உரையை தன் நண்பர்கள் சிலரை அழைத்து அவர்கள் கேட்கும் முறையில் ஓர் அமைப்பை ஏற்படுத்தியிருந்தார். நான்கைந்து முறை நானும் அங்கு சென்று நண்பர்களோடு அமர்ந்து ஜே.கே. உரையைக் கேட்டேன். கேட்ட பிறகு குறைந்தளவுக்கு ஒரு மணி நேரம் அந்த உரை பற்றியக் கருத்துப் பரிமாற்றம் நண்பர்களுக்குள் நடைபெறும். நண்பர்கள் அனைவரும் 50 வயதுக்கு மேற்பட்டவர்கள். நல்ல படிப்பாளிகள். ஒருவர் வள்ளலார் பற்றி உரை நிகழ்த்துபவர். இன்னொருவர் வருமான வரித்துறை அலுவலர். இப்படி இன்னும் சிலர்.

தொடக்கத்தில் நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொள்வேன். வள்ளலார் உரையாளர் எப்பொழுதும் திருநீற்றோடுக் காட்சி தருபவர். ஜே.கே.வின் கருத்தை வள்ளலாரும் கூறியிருக்கிறார் என்ற பாணியில் அவர் பேசுவார். சைவ சமயக் கருத்துக்களையும் இடையில் கலந்து சொல்வார். ஒருவர் அதிகாரி. இன்னொருவர் வணிகர். பேசி முடித்தப் பிறகு சிற்றுண்டி வந்து சேரும். உண்ட பிறகு நண்பர்கள் விடைபெற்றுச் செல்வார்கள்.

ஒவ்வொரு முறையும் இதே போல நண்பர்கள் வந்து, ஒலிப்பதிவைக் கேட்டு வியப்போடு உரையாடி சிற்றுண்டி முடித்து நண்பர்கள் பிரிந்து செல்வார்கள். வள்ளலார் தொண்டரிடம் பக்தி உணர்வு மாறவில்லை. அதிகாரியும் வணிகரும் முன்பு போலவே இருந்தனர். எனக்குப் புரியவில்லை. நானும் ஜே.கே.வை படித்திருக்கிறேன், படிக்கிறேன். ஜே.கே. சொல்லும் நிதர்சனம் எனக்குப் புரிகிறது. பழைய மரபுகளிலிருந்து அதிக அளவு நான் விடுபட்டு இருக்கிறேன். எதையும் திறந்த மனத்தோடு புரிந்து கொள்கிறேன். ஜே.கே.வோடு முற்றிலும் ஒன்றவில்லை என்றாலும் ஜே.கே.பற்றி எனக்கு எதிரிடையானக் கருத்து இல்லை. வள்ளலார் பக்தர் முன்பு போலவே இருக்கிறார். ஜே.கே.வைப் பற்றிய படிப்பு, அதிகாரியை, வணிகரை ஏதாவது செய்கிறதா? என்று என்னை நானேக் கேட்டுக் கொள்கிறேன். ஜே.கே. நம் மனதிற்குள் கரையும் பொழுது நம்மால் பக்தி செய்ய முடியாது. அதிகாரம் செய்ய முடியாது. வணிகத்தில் ஈடுபாடு கொள்ள முடியாது. ஏற்கெனவே நமக்கிருக்கும் சிந்தனைகளோடு ஜே.கே. எங்கெல்லாம் ஒட்டி வருகிறார் என்று மேற்கோள் காட்டிப் பேச முடியாது.

கடைசியில் ஒரு நாள் கொஞ்சம் மனம் திறந்து அவர்களோடு பேசினேன். அவர்கள் மறுத்தனர். ஜே.கே.வை எதற்காக அவர்கள் கேட்க வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. அவர்களோடு பேசிப் பயனில்லை. அதன் பிறகு நான் அங்கு செல்லவில்லை. ஜே.கே. உபாசனை அதன் பிறகும் அங்கு தொடர்ந்து நடைபெற்றது என்று அறிந்தேன்.

ஜே.கே.வை நிறைய நண்பர்கள் படிக்கிறார்கள். ஜே.கே. அவர்களுக்கு இதமாக இருக்கிறது. இந்தளவுக்கு நல்லது தான். இதைப் போல ஓஸோவையும் படிக்கிறார்கள். ஒவ்வொரு நூலும் வெளிவரும் பொழுதே தேடி அதை வாங்கிப் படிக்கிறார்கள். பேசவும் செய்கிறார்கள். மதம் எப்படியோ இவர்களுக்கு உடன்பாடில்லாமல் போய்விட்டது. அந்த அளவுக்கு நல்லது தான்.

ஜேகே insight - உள்ளொளி என்று பேசுகிறார் The timeless - காலம் கடந்தது என்று பேசுகிறார் சமயத்தன்மை என்று பேசுகிறார். இவை பற்றிப் புரிந்து கொள்ள நான் பெரிதும் விரும்புகிறேன். நிதர்சனம் என்ற முறையில் அவர் தரும் அற்புதமான ஒன்றிணைந்த காட்சிகளைப் பற்றிய வர்ணனைகள் என்னைப் பெரிதும் கவர்கின்றன. தன் உரை ஒன்றைக் கேட்க வந்த குரங்கோடு அவர் கை குலுக்கிக் கொண்டதையும் குரங்கின் உணர்வும் அவரது உணர்வும் ஒன்றிக் கலந்ததையும் அவர் எழுதுகிறார். எனக்குப் புரிகிறது. ஜேகே.யின் உணர்வு பிரபஞ்சத்தோடு தானும் ஒன்றிக் கலக்கிற உணர்வு. சில கணங்கள் தான் இந்த உணர்வு நமக்குள் நிற்கும். இந்தச் சில கணங்கள் அற்புதமானவை. இப்பொழுது காலம் இல்லை. நமக்குள் ஏற்படுவது ஒரு தரிசனம். ஓர் அகண்ட விசுவரூப தரிசனம் எல்லாவற்றையும் ஒன்றாகக் காணும் காட்சிப் பரவசம். உயிர்களும் நாமும் வேறல்ல என்றப் பேருணர்வு. உள்ளத்திற்கு இதமான ஓர் உணர்வு. இந்த உணர்வின் போது நமக்குள் ஏற்றத்தாழ்வுக்கு இடமில்லை. அதிகாரத்திற்கு இடமில்லை. இந்த உணர்வைப் பெற்றவனுக்குக் கடவுள் வழிபாடு தேவையில்லை. அல்லது வழிபாட்டின் போதும், தியானத்தின் போதும் கணங்களற்று, காலமற்று, வேறுபாடற்று, நமக்குள் நிறைகிறோம். இத்தகையப் பேருணர்வைத்தான் சமயங்கள், தமக்குள் பொதிந்து வைத்து அப்புறம் இதைப் பற்றிக் கதைகள் சொல்லி உருவங்கள் வைத்து வழிபாடு செய்யச் சொல்லி நம்மை ஏமாற்றுகிறார்கள். சமயத்தைக் கலைந்து நமக்குள் நாமே நிறைகிற பேரனுபவத்தை பெறுவதற்கான சாட்சி ஜே.கே.

## 20

> சமயத்திற்குள் உறைந்திருக்கும் சமதர்மம் என்ற கடவுள்தான் நம்மை மனிதராக்கும். நமக்கு விடுதலை தரும். இவ்வகையிலும் பெரியார் நமக்கு உதவுகிறார்.

பெரியார் சமய மறுப்பாளர் என்பதில் ஐயமில்லை. எனினும் சமயத்தினுள் உறைந்திருக்கும் அர்த்தத்தைப் பெரியார் வழி நாம் காண முடியும். பெரியார் தொண்டர்களும் காணத் தவறிய ஒரு கட்டுரைப் பற்றி நான் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். தோழர் ஆனைமுத்து அவர்கள் தொகுத்த 'பெரியார் சிந்தனைகள்' என்ற

நூலில் இந்தக் கட்டுரையை நண்பர்கள் காண முடியும்.

பெரியார் இந்தக் கட்டுரையில் எழுதுகிறார். வேதாந்தத்திற்கும் கம்யூனிசத்திற்கும் வேறுபாடு இல்லை என்று சொல்லும் பெரியார் தன் கூற்றை விளக்குகிறார். வேதாந்தம், நானே பிரம்மம் என்கிறது. நானும் கடவுள், நீயும் கடவுள். நீயும் கடவுள் எல்லோரும் கடவுள். கல்லும் மண்ணுமே கடவுள். இப்படி இருக்க நீ என்ன பெரியவன் அல்லது பிராமணன். நான் என்ன சிறியவன் அல்லது சூத்திரன். நாம் அனைவரும் சமமானவர்கள். உலகம், உற்பத்தி எல்லாமே நமக்குப் பொதுவானவை. இதைத் தான் கம்யூனிசமும் சொல்லுகிறது இப்படி விளக்குகிறார் பெரியார்.

மதமும் கம்யூனிசமும் ஒன்ற என்று மேலும் சொல்லி அதைப் பெரியார் விளக்குகிறார். கடவுள் தான் நம் எல்லோரையு'ம் படைத்தார். நாம் எல்லோரும் கடவுளின் குழந்தைகள். நாம் அனைவரும் சகோதரர். கடவுள் நமக்கு இந்த உலகத்தைக் கொடுத்திருக்கிறார். இந்த உலகமும் உற்பத்தியும் நம் அனைவருக்கும் பொதுவானவை. உழைத்து, உற்பத்தி செய்து நாம் பகிர்ந்து கொள்ள வேண்டும். இப்படித்தான் கம்யூனிசம் சொல்கிறது. இப்படிப் பெரியார் மதத்தை விளக்குகிறார். மதம் என்பதனுள் உள்ள புரோகிதத்தை பெரியார் போல நாமும் ஒப்புக் கொள்ளவில்லை. கோவில், வழிபாடு, சடங்குகள், சாத்திரங்கள் இவற்றையெல்லாம் உருவாக்கி, பெருக்கி, இவற்றை வைத்து மக்களை மடையராக்கும் புரோகிதத்தை நாமும் சாடுகிறோம். இவை ஆதிக்கத்தோடு ஒத்து இயங்குகின்றன. ஆதிக்கம் நம்மை அழிக்கிறது. நமக்கு இவை வேண்டாம். ஆனால் மதத்திற்குள் இருக்கும் பிரம்மம் / கடவுள் என்பதை நாம் மீட்கத்தான் வேண்டும். கடவுள் என்பதற்கு நாம் பொருள் காண வேண்டும். ஆதிச் சமூகத்தில் ஆண்டான் அடிமை இல்லை. எல்லோருக்கும் இயற்கை பொது. சமூகத்தில் ஏற்றத் தாழ்வில்லை. இந்த ஆதிச் சமூகம் அழிந்து / மறைந்து தனி உடைமை, அரசதிகாரம், ஏற்றத்தாழ்வு ஆகியவற்றைக் கொண்ட வர்க்கச் சமூகம் ஏற்பட்டது. இப்பொழுது இயற்கை ஒரு சிலருக்கே சொந்தம். பலர் உழைக்க வேண்டும். சிலர் அனுபவிக்க வேண்டும். ஒரு சிலர் ஆதிக்கம் செய்ய, பலர் அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும். இந்தச் சமூகத்தில் தான் மனிதன் துயரங்களுக்குள்ளாகிறான். விடுதலை இழந்து தவிக்கிறான். எனினும் இவனுக்குள் அந்த ஆதிச் சமூகம் அழிந்து விடவில்லை. ஆதிச் சமூகம் இவன் கனவுக்குள்,

கற்பனைக்குள், கதைகளுக்குள் இருக்கிறது. அந்த சமூகத்தின் அற்புதக் குணங்கள் இவனுக்குள் இன்னும் உணர்வாக உறைந்திருக்கின்றன. இந்த உணர்வு தான் இப்பொழுது அவனுக்குக் கடவுள் / தெய்வம்.

கடவுள் / பிரம்மம் என்பதை இப்படி நம்மால் புரிந்து கொள்ள முடியும் என்றால் நமக்குப் பிராமணர் தேவையில்லை. வழிபாடுகள், சடங்குகள் தேவையில்லை. சாத்திரங்கள் தேவையில்லை. கடவுள் என்பதன் கருத்தை நாம் விளங்கிக் கொள்கிற பொழுது நமக்குள் கோவில்கள் தேவையில்லை. இவற்றுக்கு மாறாக ஏற்றத்தாழ்வை, தனி உடைமையை, அரசு அதிகாரத்தை தகர்க்க நாம் முற்படுவோம். எல்லாவற்றையும் எல்லோருக்கும் பொதுவாக்குவோம். இதுதான் சமதர்ம நெறி. கடவுள் என்பது ஒரு பேருணர்வு. சமதர்மம் என்ற பேருணர்வு. சமங்கள் இந்தப் பேருணர்வை தமக்குள் உள்ளுரையாக்கி அப்புறம் அதை மூடி மறைத்து அதன் மீது என்னென்னவோ எழுப்பி முடக்கி வைத்திருக்கின்றன. சமயத்தின் வடிவத்தைத் தகர்க்க விடாமல் புரோகிதர்களும், அரசும், ஆதிக்கவாதிகளும் நம்மைத் தடுக்கிறார்கள். உண்மையில் சமதர்மம் என்ற அந்தக் கடவுள் தான் நம்மை மனிதராக்கும். நமக்கு விடுதலை தரும். இப்படிப் புரிந்து கொள்வதற்கும், பகுத்தறிவு நமக்கு உதவும். இம்முறையிலும் பெரியார் நமக்குத் தேவைப்படுகிறார்.

## 21

> கடவுள் என்னைவிட
> பெரியவராகவே
> இருக்கட்டும். என்னோடு,
> எனக்கு உதவியாக
> இருக்கும்வரைதான் அவர்
> எனக்குக் கடவுள்.
> இல்லையென்றால் அவர்
> எனக்கு வேண்டாம்.

இளமைக் காலத்தில் நான் வாழ்ந்த கிராமத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி குறித்து இங்குச் சொல்ல வேண்டும். இன்றளவும் எனக்கு வியப்பு தருகிற நிகழ்ச்சி இந்த நிகழ்ச்சியைப் பலமுறை பலருக்கு சொல்லுகிறேன். கடவுளைப் பற்றி கிராமத்து உழவனின் அனுபவம் எத்தனை அர்த்தங்களை உள்ளடக்கியதாக இருக்க முடியும் என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒரு சான்று.

இளமையில் சுள்ளிப்பாளையம் என்ற கிராமத்தில் என் பெற்றோரோடு நான் வாழ்ந்த காலம். பள்ளியில் படித்துக்

கொண்டிருந்தேன். ஊருக்குத் தென்புறத்தில் ஒரு முனீஷ்வரன் கோவில் பெரிய மண் குதிரையின் மீது வண்ணம் தீட்டிய பெரிய மீசையோடு கையில் வாளேந்திய முனீஷ்வரனின் உருவம். கீழே தரையில் முக்கோண வடிவில் சில கடவுள் உருவங்கள். கோயிலைச் சுற்றி பெரிய மரங்கள். கற்சிலைக்கு முன்னர் ஓர் உயரமான வேல். கருப்பராயன் கோவில் என்றும் இதைச் சிலர் சொல்லுவார்கள். பகல் வேளையில் அங்கு மணியடித்து ஒரு பெரியவர் வழிபாடு செய்வார். ஆண்டுக்கொருமுறை பெரிய அளவில் திருவிழா. அப்பொழுது கிராமத்து மக்கள் பொங்கல் வைத்து வழிபாடு செய்வார்கள். பூசாரிக் கவுண்டர், ஊர்க்கவுண்டருங்கூட திருவிழாக் காலங்களில் வெண்மையான துணியால் வாயைக் கட்டிக் கொண்டு மணியடித்துப் பூசை செய்வதைப் பார்த்திருக்கிறேன்.

இரவு நேரங்களில் பெரிய பெரிய மரங்கள் சூழ்ந்த அந்தக் கோவிலில் காற்றடிக்கும் போது மரக்கிளைகள் சலசலப்பது எங்களுக்கு அச்சமாக இருக்கும். கோவிலுக்கு அருகில் உள்ள வழியில் செல்லும் பொழுது சில சமயம் நிற்காது ஓடுவோம். விடுமுறைக் காலங்களில் நண்பர்கள் பலர் சேர்ந்து மரங்களில் தாவி ஏறி நாங்கள் விளையாடுவதும் உண்டு. ஊர்க்கவுண்டரின் தோட்டம் ஊருக்கு கிழக்குப் புறத்தில் இருந்தது. பெரியபெரியத் தென்னைமரங்கள். ஊரிலிருந்துப் பார்க்கும் போதே தெரியும். தோட்டத்தில் ஒரு கிணறு. கோடைக் காலத்தில் கிணற்றில் நீர் குறைந்து விடும். கிணற்றில் இரு புறங்களில் குடங்குகள் அதாவது தண்ணீர் அரித்து அரித்து மண் கரைந்து விட உள்ளே சுமார் 10 அடி அளவுக்கு குடங்கு - குகை போன்ற இருண்ட பகுதி. கிணற்றில் நாங்கள் இறங்கிக் குளிக்கும் போது அல்லது நீந்தி விளையாடும் போது குடங்கிலிருந்து நீர்ப்பாம்புகள் எட்டிப் பார்க்கும்.

ஓர் கோடைக்காலத்தில் கிணற்றில் நீர் முற்றாக வற்றிய நிலையில் கிணற்றைத் தூறெடுக்கவும் ஆழப்படுத்தவும் சிலர் மண்வெட்டி, கடப்பாறை முதலியவற்றோடு இறங்கி வேலை செய்தார்கள். யாரும் எதிர்பாராத முறையில் ஒரு விபத்து. குடங்கினுள் படிந்திருந்த மண்ணை அகற்றும் போது மேலே இருந்த மண் தரைப்பகுதி திடீரென சரிந்து குடங்கில் வேலை செய்த ஊர்க்கவுண்டரின் மகனை மூடிவிட்டது. கவுண்டருக்கு ஒரே மகன். நான் பார்த்திருக்கிறேன். சிவந்த மேனி. நெடிய உருவம். தலைக்குப் பின்னால் கட்டுக்குடுமி. நீண்ட நேரம் மண்ணைத் தோண்டி அவர் உடலை எடுத்த போது உடம்பில் உயிரில்லை. ஒரே மகன்

திருமணமாகி ஓராண்டு கூட நிறைவு பெறவில்லை. பூசாரிக் கவுண்டர் முடிவு செய்து விட்டார். இனி கருப்பராயருக்குப் பூசையில்லை. நான் செய்ய மாட்டேன். எனக்கு ஒரே மகன். எனக்குப் பிறகு இவன் தான் உனக்குப் பூசை செய்ய வேண்டியவன். இந்த உண்மை உனக்குத் தெரியாதா என்ன? அவன் எப்படிச் சாகலாம்? ஆகவே இனி நான் உனக்குப் பூசை செய்ய மாட்டேன். ஊர்க்காரர்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். பூசை செய்ய உரிமை உடையவர் இவர் தான் – இந்தக் குடும்பத்தினர் தான்.

தொடர்ந்து 12 ஆண்டுகள் கோவிலில் பூசை இல்லை. செடிகள் எல்லாம் வளர்ந்து காடு மாதிரி ஆகிவிட்டது. 12 ஆண்டு கழித்து ஊர்க்கவுண்டர் இறந்தார். அதன் பிறகு அவர் தாயாதிகளில் ஒருவரை கோவில் பூசாரியாக ஊர் மக்கள் நியமனம் செய்தார்களாம். அப்போது அந்த ஊரில் நான் இல்லை. படிப்பதற்காக வேறு ஊர் சென்று விட்டேன். அந்த ஊரில் வாழ்ந்த என் அத்தை இந்தக் கதையின் முடிவை எனக்குப் பல ஆண்டுகள் கழித்துச் சொன்னார்கள்.

நான் இப்பொழுதும் நினைத்துப் பார்க்கிறேன். ஊர்க்கவுண்டர் சொன்ன மாதிரி அந்தக் கடவுளுக்கு உண்மைத் தெரிந்திருக்க வேண்டும். அவரது ஒரே மகனை சாக விட்டிருக்கக் கூடாது. கடவுள் ஏன் அந்த மகனைக் காப்பாற்றவில்லை. இப்படிப்பட்டக் கடவுளுக்கு எதற்காக வழிபாடு செய்ய வேண்டும்? பூசை இல்லாமல் கடவுள் கிடக்கட்டும். ஊர்க்கவுண்டரின் மன உறுதி எத்தனை வியப்புக்குரியது. உழைப்பை நம்பும் ஒருவருக்குத் தான் இப்படி மன உறுதி வர முடியும். உனக்கு நான் இருக்கிறேன். எனக்காக நீ இருக்க வேண்டும். நீ எது செய்தாலும் நான் எற்றக் கொண்டு, நீயே கடவுள் என்று உன்னை நம்பி உன் காலடியில் என்னைக் கிடத்திக் கொள்ள முடியாது. நான் உழைக்கிறேன். நீ இல்லாமலும் என்னால் வாழ முடியும். என் மீது அக்கறை இல்லாத நீ எனக்கு இனி வேண்டாம். இப்படிக் கவுண்டர் முடிவு செய்திருக்கக் கூடும்.

இப்படி ஒரு மனிதனின் பார்வை நமக்குள் எத்தனைப் பேருக்குச் சாத்தியப்படும்? இப்படி நமக்கு யார் அறிவு கொளுத்த முடியும்? இந்த மனிதர் எனக்குள் இன்னும் இருக்கிறார். இவரிடமிருந்து தான் கற்றுக் கொள்கிறேன். வறுமையைப் படைத்த இறைவன், அவனும் வறுமையால் அலைந்து துன்புறட்டும் என்றுக் கூறிய வள்ளுவருக்குள்ளும் இருப்பவர் இந்த மனிதன் தானே. கண்ணகிக்கு

முன் வர அஞ்சி. கண்ணகியின் பின்னால் வந்து கண்ணகியைக் கெஞ்சிக் கேட்டு தீயிலிருந்து மதுரை நகருக்கு விடுதலை வாங்கிய மதுராபதி தெய்வத்தை இளங்கோவடிகள் எங்கிருந்துப் படைத்திருக்க முடியும். கடவுளும் எனக்கு நிகரானவர்தான். என்னைவிட அவர் பெரியவராக இருக்கட்டும். என்னோடு எனக்கு உதவியாக இருக்கும் வரை தான் அவர் எனக்குக் கடவுள். இல்லையென்றால் அவர் எனக்கு வேண்டாம்.

வரலாற்றின் தொடக்க காலத்தில் இப்படி மனிதனால் சிந்திக்க முடியும். காலங்கள் மாறும் பொழுது, மனிதன் மீது ஆதிக்கங்கள் அதிகரித்து. அவனுக்குள்ளும் நுழைந்து அவன் மன உறுதியையும், அறிவையும், மெல்ல மெல்லத் தகர்த்து அவனை ஒன்றுமில்லாமல் செய்த நிலையில் தான் கடவுள் என்ற பிம்பத்திற்குப் பெரிய அளவுக்கு மரியாதை கிடைத்தது. கடவுள் மலையானான். மனிதன் தூசு ஆனான்.

## 22

புலன்களுக்கு எட்டாத உண்மைகள் நம்வாழ்வில் குறுக்கிடும்போது அயலாரைச் சந்திப்பதைப்போல, புதிய பிரதேசங்களைக் காண்பதைப்போல இவற்றை நாம் எட்டிப்பார்க்கத்தான் வேண்டும் இவை இல்லை என்று மறுத்துப் பேசுவதில் பயனில்லை.

இவ்வளவும் நான் சொன்ன பிறகு நீங்கள் என்னைக் கேட்கலாம். நானும் என்னைக் கேட்டுக் கொள்கிறேன். மதவாதிகள் கூறுகிற கடவுள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. கடவுளை வழிபட நான் கோவிலுக்குச் செல்வதில்லை. மதம் தொடர்பான சடங்கு எதனையும் நான் செய்வதில்லை என்றாலும் இந்து மதம் என்ற சார்பு எனக்கு உண்டா? இல்லையா?

உடனடியாக இந்தக் கேள்விக்கு நான் மறுப்புச் சொல்ல முடியவில்லை. இந்து மதம் என்பது ஆங்கிலேயர்கள் நமக்குத் தந்த பெயர். நான் சைவனும் இல்லை. வைணவனும் இல்லை. என் மதம் இந்து மதம் என்று நான் சொல்லவில்லை. மக்கள் தொகைக் கணக்கெடுப்பவர் என்னை இந்து மதத்தில் சேர்த்து எழுதிவிட்டார். நான் மறுத்தேன். அவர் கேட்கவில்லை. எனினும் வழிவழியாக நம்

குடும்பங்களின் வழியே வந்த இந்து மதச் சார்பை என்னால் கலைந்து கொள்ள முடியவில்லை.

என் மனைவி இந்து மதச் சார்புடைய எல்லாப் பண்டிகைகளையும் கொண்டாடுகிறாள். கடவுளுக்குப் படைக்கும் உணவு முதலியவற்றை நானும் உண்ணுகிறேன். திருவாதிரையின் போது என் மனைவி மாங்கல்யத்தை மாற்றிக் கட்ட என்னை அழைக்கிறாள். என்னால் மறுக்க முடியவில்லை. புது வீட்டில் குடியேறிய போது பார்ப்பனரை வைத்து கணபதி ஹோமம் முதலியவற்றைச் செய்தார். நம்பிக்கை இல்லையென்றாலும் நான் அமர்ந்தாக வேண்டும். முன்பே நான் கூறியபடி 60 ஆண்டு நிறைவின் போது திருக்கடவூருக்குச் சென்று வந்தேன். இப்படி எவ்வளவோ நிகழ்ச்சிகள். நான் இந்து இல்லை என்றாலும் குடும்பச் சூழலில் என்னை இந்து என்றால் என்னால் மறுக்க முடியாது.

நம் சமூகத்தில் சமய நம்பிக்கைகள் இன்னும் விடாப்பிடியாகத் தொடர்கின்றன. தந்தையார் இறந்த போது என்னதான் திராவிட இயக்கத்தவர் என்றாலும் உறவினர்க்காக, ஊர்க்காரர்களுக்காக மறுக்க முடியாமல் சில சடங்குகளைச் செய்து திர வேண்டியிருக்கிறது. பெண் வீட்டார் வற்புறுத்தலுக்காக தன் மகனுக்கு சுயமரியாதை திருமணம் செய்து வைக்க முடியாமல் செலவு குறையட்டுமே என்ற முறையில் கோவிலில் வைத்து திருமணம் செய்ய நேர்கிறது. சுயமரியாதைத் திருமணம் என்று சொல்லிக் கொண்டு மணமகளின் மாலைக்குள் தாலியை மறைத்து வைத்துப் போடுவதை தலைவரும் மறுப்பதில்லை. நம் சமூகத்தில் தவிர்க்கவே இயலாமல் இப்படியெல்லாம் கம்யூனிஸ்டுகள் மட்டுமல்லாமல் திராவிட இயக்கத்தினரும் செய்ய வேண்டி இருக்கிறது.

இப்படி எத்தனையோ சடங்குகள். இத்தகைய முரண்பாட்டோடுதான் நாம் வாழ நேர்ந்திருக்கிறது. நம் குடும்பங்களில் கணவன் பகுத்தறிவுவாதி அல்லது கம்யூனிஸ்டு என்ற போதிலும் மனைவி உறுதியான கடவுள் நம்பிக்கை உடையவளாக இருக்கிறாள். விரதங்கள், சடங்குகள் முதலியவற்றைத் தவறாமல் செய்கிறாள். ஆணுக்கும் சேர்த்து இப்படிச் சிலவற்றை மனைவி நம்பிக்கையோடு செய்கிறாள். கடவுள் முதலியவற்றை ஆண்கள் உதறிக் கொள்ளலாம். பெண்களால் முடியவில்லை. ஆண்கள் அளவுக்கு பெண்ணுக்குக் கல்வியில்லை. பகுத்தறிவு முதலிய இயக்கங்களோடு தொடர்பு இல்லை. குடும்பத்தை நிர்வாகம் செய்கிற பெரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் பெண், ஆண்

விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் இவற்றை விடாப்பிடியாக செய்கிறாள். குழந்தைகளுக்கு கடவுள் நம்பிக்கையைக் கற்பிக்கிறாள். ஆண் தலையிட முடிவதில்லை. எவ்வளவுதான் பகுத்தறிவு, அறிவியல் முதலியவை வளர்ந்திருந்த நிலையிலும் வானொலியும் தொலைக்காட்சியும் விடாப்பிடியாக கோயில் விழாக்கள் முதலியவற்றை ஒலி, ஒளி பரப்புகிறார்கள். பிரதோசம் முதலிய புதிய வகை நம்பிக்கைகளையும் பரப்பி வருகிறார்கள். கோவில்களைப் பற்றிய ஒலி பரப்புகளில் எந்த வகையிலும் வரலாற்றோடுத் தொடர்பில்லாத தல புராணங்கள் சொல்லும் பொய்களை பெரிய படிப்பாளிகளைக் கொண்டு பரப்புகிறார்கள். வாஸ்து முதலிய புதுப்புது நம்பிக்கைகள் – இவையெல்லாம் அறிவியல் ஆதாரமுடையவை என்றெல்லாம் கூசாமல் சொல்லுகிறார்கள். சமயச் சார்பின்மை என்றக் கொள்கையை அரசு வெளிப்படையாகக் கைவிடுகிறது.

இப்படி எவ்வளவோ சொல்வதற்கு இடமிருக்கிறது. கடவுளை மறுப்பவர்கள் கூட பணத்தை, பதவியை, தலைவரை கடவுளாக வழிபடுகிறார்கள். இவை பற்றியும் நாம் பேச வேண்டி இருக்கிறது. சமய நம்பிக்கைகள் நெடுங்காலத்திற்கு மாறும் என்று தோன்றவில்லை. சமயத்தை நேரிடையாகத் தாக்கி அழிக்க முடியாது என்பதும் உண்மைதான். ஆகவே தான் சமயம், வரலாற்றில் எப்படித் தோன்றியது, ஏன் தோன்றியது? சமய நம்பிக்கை யாருக்குப் பயன்படுகிறது? யார் சமயத்தைப் பரப்புகிறார்கள்? யார் சமயத்தைத் தாங்கிப் பிடிப்பார்கள்? என்றெல்லாம் ஆராய வேண்டி இருக்கிறது. கடவுள், ஆன்மா முதலியவை கருத்தாக்கங்கள்தான் என்றும் ஆராய வேண்டி இருக்கிறது. மார்க்ஸ் கூறியபடி மனிதரின் துயரங்கள், நெருக்கடிகள் தான், சமயத்தை நம்ப வைக்கின்றன. மனிதத் துயரங்களுக்குக் காரணமான பொருளியல் சக்திகளை மாற்றினால் ஒழிய சமயத்தின் வேர்கள் அழிவதற்கில்லை. அதுவரை சமயம் குறித்து விடாப்பிடியாக விமர்சனங்களையும் முன் வைக்கத்தான் வேண்டும்.

இறுதியாக இன்னும் ஒன்றைச் சொல்ல வேண்டும். சோதிடம், கைரேகை, எண் கணிதம் முதலியவை நம் ஆய்வுக்கு எப்படி சில உண்மைகளைக் கூறுகின்றன. உள் உணர்வு, நம் அறிவுக்கு எட்டாத சில உண்மைகளை வெளிப்படுத்துகிறது. இவற்றை எல்லாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு உண்மை என்ன என்ற ஆய்வை செய்து முடிக்க வேண்டும் என்ற முறையில் இன்று நாம் திட்டமிடுவதற்கு வாய்ப்புக்கள் இல்லை. இவ்வகை ஆய்வில் ஈடுபட்டு நம்மை நாமே

தொலைத்துக் கொள்ள நம்மால் முடியாது. நமக்கு இந்த உலகம் இருக்கிறது. இயற்கை, வரலாறு, கலை, இலக்கியம் என்று எவ்வளவோ இருக்கின்றன. இவற்றின் வழியே நம் வாழ்வியலை மேம்படுத்திக் கொள்வதற்கு அறிவுப பூர்வமான வாய்ப்புக்கள் இருக்கின்றன. இவற்றிலிருந்து நம்மால் விலகிக் கொள்ள முடியாது. புலன்களுக்கு எட்டாத உண்மைகள் என்பவை சில நம் வாழ்வில் குறுக்கிடக் கூடும். அவை இல்லையென்று நாம் அடித்துப் பேசுவதற்கில்லை. அயலாரைச் சந்திப்பது போல புதிய பிரதேசங்களை காண்பதைப் போல புதிய அறிவுத் துறைகளை எட்டிப் பார்ப்பதைப் போல இவற்றைப் பார்க்கத்தான் வேண்டும். இவற்றுக்கும் கடவுளுக்கும் நேரிடையான உறவு இருப்பதாகத் தோன்றவில்லை. கடவுள் என்பதை ஒரு கருத்தாக்கம் என வைத்துப் பிரபஞ்ச அளவிலான பேரியக்கத்தோடு நமக்கு ஏற்படும் உறவு நம்மை, நம் அறிவை, நம் கலை உணர்வை, உயிர் நேயத்தை எவ்வாறெல்லாம் வளப்படுத்துகிறது என்பதை நிறையப் பார்த்து விட்டோம்.

இந்த அளவுக்கு இப்பொழுதைக்கு நாம் நிறுத்திக் கொள்ளலாம். மக்கள் வாழ்வில் மேன்மை அடைய வேண்டும். இதற்குத் தடையான சக்திகளோடு நாம் ஒத்துழைக்க முடியாது. சமயத்தை மட்டும் அல்லாமல் கல்வி, மருத்துவம், அரசியல், கலாச்சாரம், பத்திரிக்கை, தொலைக்காட்சி இன்னும் எத்தனையோ வழிகளில் மக்களின் வாழ்வை மேம்படுத்துவதற்கு மாறாக, மக்கள் வாழ்வின் தரத்தை அழிப்பதன் மூலம் தம்மை வாழ்வித்துக் கொள்கிற ஆதிக்க சக்திகள் குறித்து தான் நாம் அதிகம் கவலைப்பட வேண்டியிருக்கிறது. சமதர்மம்தான் மக்களின் வாழ்வை மேம்படுத்தும். சமதர்ம சமூகம் நிலவுகிற காலத்திலும் சமயம், கடவுள் முதலியவை இருக்குமா? இன்னும் தேவைப்படுமா? என்றெல்லாம் பிறகுப் பார்த்துக் கொள்ளலாம். அறிவுதான், உழைப்புதான் இன்று நம்மைக் காப்பாற்றும். கடவுள் நம்மைக் காப்பாற்ற முடியாது. மதவாதியை நம்புவதில் ஒரு பயனும் இல்லை. அரசியல்வாதிகளிடமும் நாம் மோசம் போய்விடக் கூடாது. கல்வி என்ற பெயரிலும் அறிவியல் என்ற பெயரிலும் மூடத்தனங்களை பரப்ப முடியும். மருத்துவர்களும் நோய்களை உற்பத்தி செய்கிறார்கள். தியானம் தவறில்லை. மனத்தை பல திசைகளிலும் திறந்து வைத்திருக்க வேண்டும். சடங்குகள் எத்தனையோ வகைகளில் இன்னும் நெடுங்காலத்திற்கு நீடிக்கும். இவற்றில் நாம் ஏமாந்து விடக்கூடாது. நம் வாழ்க்கையை நாமேத் தீர்மானித்துக் கொள்கிற அறிவும் திறனும் நமக்குத் தேவை

இணைப்பு: 1

# ஆவி நேயம் – ஞானி

பெறுநர்

சிந்தனைச் செம்மல் கு.ச. ஆனந்தன் அவர்கள்

கோபிச்செட்டிபாளையம்

மதிப்பிற்குரியீர்

தங்கள் 'ஆவிநேயம்' நூல்படியைக் கவனமாக, அவ்வப்பொழுது வியப்புணர்வுடனும், அதிர்ச்சி உணர்வுடனும் படித்து முடித்த போது ஆவிகளைப் பற்றிய சிறிய அளவுக்கேனும் எனக்கிருந்த நம்பிக்கை என்னை விட்டு அகன்றது. ஒரு வேலை தங்களைப் போல் ஆவிகளைப் பற்றிய விரிவான ஆய்வில் நானும் என்னை ஈடுபடுத்தியிருப்பேன் என்றால் தங்கள் ஆய்வு ஆவி பற்றிய நம்பிக்கையை உறுதிபடுத்தி யிருக்கக் கூடும். எனினும் தங்கள் நூல் வெளிவருவதையே பெரிதும் விரும்புகிறேன். பெரியாரும் மார்க்சியரும் ஆவி குறித்து விவாதித்துத் தெளிவு ஏற்படுத்திக் கொள்வதற்கு இந்நூல் உதவ முடியும். ஆவி என்பதே இல்லை என்ற முடிவு செய்வதற்கும் கூட இந்த நூல் அவர்களுக்குப் பயன்படலாம். தங்கள் மீது சேற்றை வாரி இறைக்காமல் இதுவரையிலான தங்கள் சாதனையை அவர்கள் மறுத்துரைக்காமல் தங்களின் ஆய்வு மனப்பாங்கைப் பாராட்டுகிற உணர்வு அவர்களுக்கு இருக்க வேண்டும். இது குறித்து அவர்களிடம் எனக்கிருப்பது ஐய உணர்வுதான். ஆய்வு செய்ததில் தாங்கள் பட்ட சிரமங்களையாவது அவர்கள் மதிக்க வேண்டுமென்பது என் விருப்பம்.

ஆவி பற்றிய நம்பிக்கை என்பது இன்னும் எத்தனையோ நம்பிக்கைகளை உடன் இழுத்துக்கொண்டு வருவதாகத் தங்கள் விரிவுரையிலிருந்து நான் அறிந்து கொள்கிறேன். உடலில் இருந்து உயிர் பிரிந்து உடலுக்கு வெளியில் வாழ்கிறது. புலன்களோ மூளையை உள்ளடக்கிய நரம்புத் தொகுதியோ இல்லாத நிலையிலும் ஆவி பார்க்கிறது, கேட்கிறது, சிந்திக்கிறது, இயங்குகிறது. ஆவிகளில் நல்ல ஆவிகள் என்றும் கெட்ட ஆவிகள் என்றும் இருக்கின்றன. ஆவிகளுக்கு மரணமும் மறுபிறப்பும் நேர்கிறது. ஆவிகள் சந்திரனிலும் சூரியனுக்கப்பால் உள்ள வெளியிலும் தங்கி இருக்கின்றன. ஆவிகளைக் காலமோ, வெளியோ

கட்டுப்படுத்துவதில்லை. நினைத்த இடத்திற்கு அவை பயணம் செய்ய முடியும். ஆவிகளுக்கு இறை உணர்வு உண்டு. ஆவிகள் மனிதர்களோடு தொடர்பு கொள்ள விரும்புகின்றன. இப்படி ஒன்றோடொன்று தொடர்வதாகிய எத்தனையோ நம்பிக்கைகளோடு தான், ஆவி பற்றிய நம்பிக்கையும் அமைகிறது.

ஏற்கனவே மதவாதிகள் நெடுங்காலமாகவே இத்தகைய நம்பிக்கைகளை மக்கள் மத்தியில் பரவவிட்டிருக்கின்றனர். ஒரு வேளை அவர்களும் ஆவிகள் பற்றிய சோதனையில் ஈடுபட்டார்களா? என்பது தெரியவில்லை. அன்றியும் ஆவிகளைப் பற்றிய ஆய்வை ஆவிகளைக் கொண்டுதான் செய்ய முடியும் என்பது தங்கள் கருத்து. ஏற்கனவே மதவாதிகள் முதலியவர்கள் மூலம் நம் மக்கள் மத்தியில் பதிந்திருந்த நம்பிக்கையைத் தான் தங்கள் ஆய்வு மீண்டும் உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

ஊடகர்கள் வழியே ஜே.வி.ஜி. இன்னும் தங்களுக்கு அறிமுகமான சில பெரியவர்கள் மற்றும் காந்தியடிகள், விவேகானந்தர், ஐன்ஸ்டீன், கார்ல்மார்க்ஸ், லெனின், எம்.என்.ராய் முதலியவர்களோடும் தொடர்பு கொண்டு ஏராளமான செய்திகளை பதிவு செய்திருக்கிறீர்கள். காந்தி, விவேகானந்தர் ஆகிய சில பெரியவர்களின் சிந்தனைகள் இளமைக்காலம் முதலே தங்களுக்குள் ஆழமாக பதிந்திருப்பதையும் குறிப்பிட்டுள்ளீர்கள். மார்க்சியமும் குறித்து தங்களுக்கெனத் தனித்த கருத்துக்களும் இருக்கின்றன. பாட்டாளி மக்கள் சர்வாதிகாரத்தை தாங்கள் ஏற்கவில்லை. மாவோவின் மார்க்ஸ்சியம் தங்களுக்கு உடன்பாடில்லை. மார்க்ஸ் முதலியவர்களின் கருத்துக்களோடு தங்களுக்கு உடன்பாடு இல்லையென்றால் குறிப்பிட்ட பதிவுகளிலிருந்து விலகி தாங்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

அடிமனம் என்பது எத்தனையோ விந்தைகளை உள்ளடக்கியதாகத் தான் இருக்கிறது. பிராய்டு முதலியவர்கள் ஆய்ந்து கூறியதை காட்டிலும் அடிமனம் இன்னும் ஆழமானது என்பதை யங் முதலியவர்கள் விளக்கியுள்ளனர். இந்தியச் சிந்தனையாளர்கள் கருத்து வழி பார்த்தால் இன்னும் ஆழமான அடுக்குகளைக் கொண்டது மனம். கருத்துகளும் இந்த உண்மையை உறுதிப்படுத்துகின்றன எனப் புரிந்து கொள்கிறேன். ஆவிகள் ஊடகர்களின் அடிமனத்தோடு உறவு கொள்கின்றன என்று கூறுகிறீர்கள். நம் நனவு மனம் என்னதான் முயன்றாலும் கூட

அடிமனத்தை நேரடியாக அறிய முடியாது. மிகச் சில தருணங்களில் மட்டும் அடிமனம் தானே திறந்துகொண்டு தன் அடையாளத்தை பிறர் புரிந்துகொள்ள முடியாதபடி முகமூடி தறித்துக் கொண்டு வெளிவருகிறது. அடிமனம் என்பது சிக்கலான முரண்பாடுகளைத் தனக்குள் கொண்டிருக்கிறது. அடிமனத்தின் தீவிரமான இயக்கத்தை நம்மால் மதிப்பிடவும் முடியாது. விடியற்காலை நாலு மணிக்கு எழ வேண்டுமென்று அடிமனத்திற்கு நாம் சொல்லிவைத்தால் சரியாக 4 மணிக்கு எழுப்புகிறது. சிக்கலான பிரச்சனைகளை அல்லது கணக்குகளை அடிமனத்திற்குள் தள்ளினோமென்றால் அது விழித்திருந்து பிறகு நமக்குத் தீர்வு சொல்கிறது. கலைஞர்கள் தம் படைப்பின் தொடக்கப் புள்ளியை அறிந்தே தொடங்குகிறார்கள். ஆனால் பயணத்தின் போது தான் முன்பு அறிந்திரா வெளிகளில் பயணம் செய்து அற்புதமான ஓவியம் முதலிய படைப்புகளை வெளிபடுத்துகின்றனர். மெண்டலின் அணுக்கரு குறித்த பட்டியலை கனவில் கண்ட மரத்திலிருந்து ரஷ்ய அறிஞர் வகுத்திருக்கிறார். அடிமனத்தின் ஆற்றல் மற்றும் சிக்கல் குறித்து இன்னும் நம்மால் அளந்தறிய முடியவில்லை என்பது உண்மைதான்.

இப்பொழுது என் அனுமானம் குறித்து சிலவற்றைச் சொல்கிறேன். ஜே.வி.ஜி. முதலியவர்கள் தங்கள் அடிமனத்தில் ஆழமாகப் பதிந்துள்ளனர். இவர்களைப் போலவே காந்தி முதலியவர்களும் தங்கள் அடிமனத்தினுள் வாழ்கின்றனர். நனவு மன இயக்கத்தின் போது வெளிப்படாத இவர்கள் அடிமனம் திறந்து கொள்ளும் போது வெளிப்படுகிறார்கள். அவர்களே பேசுகிறார்கள் எழுதுகிறார்கள். அவர்கள் தங்கள் கையெழுத்துக்களை தங்கள் விரலின் மூலம் தாளில் இடுகிறார்கள். காந்தி முதலியவர்களை நானோ இன்னொருவரோ எத்தனை ஒருமித்த உணர்வோடு படித்திருப்போமோ அதைக் காட்டிலும், ஒரு வேளை 100% ஒத்த உணர்வோடு தாங்கள் படித்திருக்க வேண்டும். இதனால் தான் அவர்களின் நடை அழகு அப்படியே தங்கள் விரல் மூலம் வெளிப்படுகிறது.

நான் என் சிறுவயதில் சிலர் பேயாடியதைப் பார்த்திருக்கிறேன். கொலை செய்யப்பட்டு கிணற்றில் வீசப்பட்ட ஒருவர், ஒரு பெண்ணின் மூலம் தன் கதையைச் சொன்னார். இது எப்படி என்று தொடர்ந்து சிந்திக்கிறேன். கோரமாகக் கொலை செய்யப்பட்டவர்

பற்றி யார் மூலமோ அறிந்த பெண், தனக்குள் அதிர்ச்சியுற்று, திரும்பத் திரும்ப அதைப் பற்றியே நினைத்து, அதைப் பற்றி பிறரிடம் பேசவும் அஞ்சி தனக்குள்ளே மறைத்து வைத்துக் கொண்ட நிலையில், ஏதோ ஒரு கணத்தில் கொலை செய்யப்பட்டவரின் உணர்வை இந்தப் பெண்ணும் பெற்றிருக்கக் கூடும். இத்தகைய ஒருமையுணர்வு சாத்தியமான ஒன்றுதான்.

இப்படித்தான் தங்களுக்குள்ளும் ஜே.வி.ஜி அவர்களுடன் ஒன்றித்த உணர்வு, அடிமனத் தூண்டலின் போது தங்களுக்குச் சாத்தியப் பட்டிருக்கிறது என்று நான் கருதுகிறேன். ஆவி பற்றிய நம்பிக்கையும் தியானம் முதலியனவும் இதற்கு அனுசரணையாக இருக்கின்றன. இதற்கு மேல் எதையும் சொல்வதற்கில்லை. ஒரு வேளை நான் ஊடகராக இருந்திருப்பேன் என்றால், மார்க்சும், லெனினும் என் வழியே சிறப்பாக மாவோவைக் கொண்டிடாடி இருப்பார்கள். ஆங்கிலத்தை நானும் கற்றேனென்றாலும் ஆங்கிலத்தில் நான் எழுதிப் பழகவில்லை. பேசிப்பழக வில்லை. ஆனால் சில சமயம் கனவுகளில் ஆங்கிலத்தில் சிறப்பாக நான் பேசுகிறேன். படைப்பு இயக்கத்தின் போது எனக்குள்ளிருந்து எவ்வளவோ விந்தைகள் வெளிப்படுவதை அனுபவித்திருக்கிறேன். இந்த பாணியில் தங்கள் அனுபவங்கள் அனைத்தையும் என்னால் விளக்க முடியுமென்று தோன்றவில்லை. இறைவன், ஆன்மா, காலம், வெளி என்றெல்லாம் தாங்கள் எழுதும் போது தங்களுக்குள் ஏற்கனவே பதிந்திருக்கிற கேள்வி மற்றும் படிப்பறிவைத்தான் வெளிப்படுத்துகிறீர்கள் என நான் கருதுகிறேன். ருக்கு, கமலம், கோவிந்தன் போன்ற ஆவிகள் குறித்து தாங்கள் தரும் செய்திகள் எனக்கு அதிர்ச்சி தருகின்றன. கோவிந்தன் செய்யும் கலவரத்தை என்னால் விளக்க முடியவில்லை. ஏற்கனவே, தேர்வு எண்களையோ, பரிசு சீட்டில் உள்ள எண்களையோ ஆவிகள் சொல்ல முடியாது.

உள்ளுணர்வு, தொலைவில் உணர்தல், முன் உணர்வு போன்ற சில உணர்வுகள் குறித்துப் பலர் சொல்லிக் கேட்டிருக்கிறேன். எனக்கும் சில அனுபவம் உண்டு. கைரேகை, சோதிடம், எண்கணிதம் மூலம் சில செய்திகள் கேட்டு நான் வியந்து இருக்கிறேன். பிரபஞ்ச இயக்கம் பற்றிப் படிக்கிற போது ஒரு இறைவன் பற்றிய உணர்வு கூட எனக்கு எழுந்திருக்கிறது. இந்த உணர்வுகள் எழும் மனநிலைக்குள் செல்வது எனத் தொடங்கினால் அப்புறம் இந்தப் பயணத்திலிருந்து

மீண்டு வரவே முடியாது. இடைவெளியில் எங்கோ நான் தொலைந்து போவேன். ஆகவே தான் 'அக்கல்டிசம்' என்று பெயரிடப்பட்டுள்ளது. இந்த ஆய்வு களத்தை முற்றாக மறுக்காமலே நமக்கு உறுதியாக தெரிகிற அறிவு நெறிப் பயணமே போதும் என்று நான் வாழ விரும்புகிறேன். அவ்வப்பொழுது பிரபஞ்சம், வரலாறு, வாழ்க்கை என்ற களங்கள் வழியே தென்படும் புதிர்களைக் கண்டு வியந்து, உறைந்து பிறகு வழிவிலகி வந்து விடுகிறேன். உள்ளுணர்வைக் கூட மறுக்கிற பகுத்தறிவை, அப்படியே நான் நம்புவதில்லை. படைப்பு இயக்கத்தை மறுக்கிற இருகிய கோட்பாடு எனக்கு உடன்பாடு இல்லை. தங்களிடம் நான் நேரில் கூறியபடி என் மரணத்திற்குப் பிறகு ஆவி உலகம் எனக்கு வேண்டாம் என்பதோடு நிறுத்திக் கொள்கிறேன். உயிரியக்கம் என்பது உடலியக்கத்தோடு முடிந்து விடத்தான் வேண்டும். புலன்கள் இல்லாமல் நரம்புத் தொகுதி இல்லாமல் பேசவோ, சிந்திக்கவோ இயலாது என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். காலத்திற்கும் வெளிக்குமான உறவு குறித்து மேலும் மேலும் ஆய்வுக்கு இடம் இருக்கிறது என நான் நம்புகிறேன். ஆனால் காலத்தையும் வெளியையும் மறுக்கிற இயக்கத்தை என்னால் ஏற்க இயலவில்லை. சந்திரனிலோ, சூரியனுக்கு அப்பாலோ ஆவிகள் வாழ்கின்றன என்பதை எப்படி ஏற்க முடியும். மனிதனுக்கு மட்டுந்தான் ஆன்மா என்று தத்துவம் பேசுபவர்கள் கருத்தை என்னால் ஏற்க முடியவில்லை. பிற உயிர்களுக்கும் சிறிய அளவுக்கேனும் ஆன்மா உண்டு என்று சொன்ன பிறகுதான் மனிதனின் ஆன்மா குறித்து பேச வேண்டும். வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தொடங்கி இன்றுவரை இருக்கிற மனிதர்கள் எண்ணிக்கை முதலியவற்றை வைத்து கணக்கிட்டுப் பார்த்தால் ஆவிகள் பற்றிய கணக்கைத் தரமுடியுமா? கணிக்க முடியுமா?

ஆவி பற்றிய ஆய்வை ஆவிகளைக் கொண்டுதான் செய்யமுடியுமென்று தாங்கள் கொண்ட அடிப்படையிலிருந்து தான் எல்லா விலகல்களும் தொடங்குகின்றன என நான் கருதுகிறேன். ஆனால் ஒன்றை நான் உறுதியாகச் சொல்ல முடியும். தங்கள் ஆய்வுகளின் வழியே பார்த்தால் அடிமனம் எவ்வளவு செறிவானது என்பது புரிகிறது. அடிமனம் பற்றிய ஆய்வுக்குத் தங்கள் நூல் ஒரு பெரும் பங்களிப்பைச் செய்ய முடியும். காந்தியோ விவேகானந்தரோ இன்னும் ஆவி உலகில் வாழ்ந்து நமக்கு அறிவு புகட்ட வேண்டிய தேவையிருப்பதாக என்னால் கருதமுடியவில்லை. நிகழ்கால

நிலவரங்களுக்கு ஒத்த புரிதல்கள் ஆவி உலகிலும் அவர்களுக்கு ஏற்பட வாய்ப்பு இல்லை என்றே கருதுகிறேன். அப்படியானால் மார்க்ஸோ, லெனினோ மாவோ பற்றித் தீர்ப்பு உரைக்க முடியாது.

இறுதியாக, தங்களைக் குறை சொல்லுகிற நோக்கம் என்னிடம் எள் அளவும் இல்லை என்பதை மிகுந்த பணிவோடு தெரிவித்துக் கொள்வதோடு ஆய்வுப் பயணத்தில் நெடுந்தொலைவு செல்லுகிற தங்கள் ஆற்றல் குறித்து இந்த நூல் எனக்குப் பெரும் நம்பிக்கை ஏற்படுத்துகிறது என்பதையும் இங்கு சொல்ல விரும்புகிறேன். திசை அறியாத காட்டு வழியில் நீங்கள் பயணம் செய்திருக்கிறீர்கள். திரும்பி வந்திருக்கிறீர்கள். இடையில் தாங்கள் தொலைந்து போய்விடவில்லை. இது குறித்து எனக்கு மிக்க மகிழ்ச்சி. என் கருத்துகள் தங்களுக்குச் சிறிதளவும் பயன்படாது என்ற போதிலும் தங்கள் அன்பான கட்டளையை நிறைவேற்றுகிற மனநிறைவோடு இந்த மடலை முடிக்கிறேன். இறுதியாக ஒரு சொல். ஆவியென்று இருக்குமானால் அப்புறம் நான் என்ன செய்ய முடியும்? ஆவியைப் பற்றிய ஆய்வில் இப்பொழுது என்னால் ஈடுபட முடியாது என்றாலும் ஆவி உலகில் நான் வாழ நேரும் பொழுதிலேனும் நான் என்னை ஆவி என்று உணர்வேனா, என்னவோ தெரியவில்லை. தங்களுக்கு என் மனம் நிறைந்த அன்பும், வணக்கங்களும்.

*6.10.98*

தங்கள்

கி. பழனிச்சாமி

குறிப்பு: 'மலர்க மாநில சுயாட்சி' திருக்குறள் உண்மைப் பொருள் முதலிய அற்புதமான ஆய்வு நூல்களை எழுதியவரும் நீதியரசர் சர்க்காரியாவினால் பெரிதும் பாராட்டப்பட்டவருமாகிய வழக்குரைஞர் திரு. கு.ச. ஆனந்தன் அவர்கள் தன் கல்லூரிக் காலத்து அனுபவங்களில் ஒரு பகுதியை ஆதாரமாக வைத்து ஆவிநேயம் என்ற நூலின் தட்டச்சுப்படிகளை எனக்கு அனுப்பி இந்நூலை வெளியிடுவதன் தகுதிபற்றி என் கருத்தைக் கேட்டிருந்தார். அவருக்கு நான் எழுதிய மடல் இது. பிறகு இந்நூல் வெளியாயிற்று. சில ஆண்டுகளுக்கு முன் காலமான அவர் என்றும் என் மரியாதைக்கு உரியவர்.

*இணைப்பு: 2*

## பகவத் கீதை – என் வாசிப்பு

1. பகவத் கீதையை இது காலம் வரை எத்தனையோ மனிதர், தங்கள் தேவைக்கு ஒத்த முறையில் பொருள்படுத்தி இருக்கின்றனர். சமய நோக்கிலும், வர்ணாசிரம தர்ம நோக்கிலும் அதிகம் பேர் பொருள்படுத்தி இருக்கின்றனர். அரசியல் நோக்கிலும் கீதையை பொருள்படுத்தியவரும் உண்டு. நம் காலம், முந்திய காலத்திலிருந்து பெரிதும் வேறுபடுகிறது. நம் தேவைகளும் வேறுபட்டவை. பகவத் கீதையை, ஒரு நூல் என்ற முறையில் வாசிக்க முடியும். எழுதியவர் வியாசர். வேதங்களிலிருந்தும் உபநிடதங்களிலிருந்தும் கருத்துக்கள் பலவற்றை கீதையில் திரட்டித் தருகிறார். வியாசருக்கு பிறகும் கீதை விரிவுபடுத்தப்பட்டிருக்கக்கூடும். போர்க்காலச் சூழலில் இத்தனை விரிவாக கீதையைச் சொல்லி இருக்க முடியாது. மகாபாரதத்தில் கீதை ஒரு இடைச்செருகல் என்று நாம் விவாதிப்பதில் பயன் இல்லை. கீதை, வழிபாட்டுக்குரிய நூல் என்று கருதுபவர்க்கு நாம் இப்படிக் கூறுவது உவப்பாக இருக்க முடியாது. கீதை எழுதப்பட்ட காலத்தில் சாங்கியம் முதலிய பல்வேறு தரிசனங்கள் செல்வாக்கோடு இருந்திருக்கின்றன. இவற்றை மறுக்கிற அதே சமயத்தில் சாங்கியத்தில் இருந்தும் பிற தரிசனங்களிலிருந்தும் பல கருத்துக்களை கீதையின் ஆசிரியர் எடுத்துக் கொண்டிருக்கிறார். ஒரு கவிதை நூல் என்று சொல்லும் அளவுக்கு கீதை மொழி நடையும் வர்ணனைகளும், தாக்கமும், உரையாடல் திறமும் அமைந்திருக்கின்றன. இந்தியாவின் தத்துவ வரலாற்றில் கீதைக்கு தரப்படுகின்ற உயர்ந்த இடம் நமக்கு உடன்பாடு இல்லை. இந்துத்துவவாதிகள் இதை கொண்டாடுவதற்கான காரணங்கள் நமக்கு உடன்பாடில்லை. வர்ணாசிரம தர்மத்தை நாம் மறுக்கிறோம். இந்த நிலையில் நம் காலத்திற்கு ஒத்த முறையில் நம் சமூகத் தேவைகளுக்கு ஒத்த முறையில் கீதையை வாசிப்பதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

2. போர்க் காலத்தில் அர்ச்சுனன் போரிட மறுக்கிறான். உறவினர்களோடு தன் ஆசிரியர்களோடு போரிடுவது எப்படி என்று கேட்கிறான். கண்ணன் பலவற்றைச் சொல்லி அவனைப் போர் செய்யுமாறு தூண்டுகிறான். அர்ச்சுனனும் போரிடுகிறான். போர் என்பது வெறுக்கத்தக்க அளவில் ஒரு கொடிய செயல் என்பதில் ஐயமில்லை. ஆனால் போர் என்பது நெடுங்கால

வரலாற்றில் தவிர்க்க முடியாத ஒரு பெருஞ்செயல். ஏற்றத்தாழ்வுகள், வர்க்க வேறுபாடுகள், நாடுகளுக்கிடையில், இனங்களுக்கிடையில் பகைமை முதலியவை இருக்கும் காலம் மட்டும் சிறிய அளவிலோ பெரிய அளவிலோ போரைத் தவிர்க்க இயலாது. தனி உடைமையும் அரசு அதிகாரமும் மதப் பகைமையும் மக்களிடத்தில் பிளவுகளுக்கும் பகைமைக்குமான காரணங்கள். தன் வாழ்வுக்கு பாதுகாப்பு என்ற முறையில் சிலர் தமக்கு கூடுதலான வசதிகளையும் அதிகாரங்களையும் சேர்த்துக் கொள்கின்றனர். தனது நாட்டில் நிலம் போதவில்லை. நீர் போதவில்லை என்ற காரணத்திற்காகவும் அடுத்த நாட்டின் மீது போர் தொடுக்கின்றனர். பல்வேறு சூழல் காரணமாக தனி மனிதனுக்குள்ளும் விருப்பு, வெறுத்தனம் முதலிய தீய குணங்கள் மனத்தில் ஆழமாக குடி கொண்டிருக்கின்றன. தனி உடைமை, அரசு அதிகாரம், மதம் முதலியவை தகர்ந்து, தளர்ந்து அறவே இல்லாமல் போகும் காலம் வரையும் ஏதாவது சில வடிவங்களில் போர்கள் நடக்கத்தான் செய்யும்.

3. பாரதப்போர் நிகழ்ந்ததற்கான காரணங்கள் வெளிப்படையாய் தெரிகின்றன. போரைத் தவிர்ப்பதற்கான முயற்சிகள் பயன்படவில்லை. நாடு முதலியவற்றை வைத்து சூதாடுவது, மன்னர் மரபில் ஒரு வகையான பொழுதுபோக்கு. உறவினர்களுக்கிடையில் போர் தேவைதானா? என்று கேட்பதில் பயனில்லை. தேவைக்கொத்த முறையில் உடைமைகளை பகிர்ந்து கொள்வது சாத்தியம் தான் என்ற போதிலும் ஒரு சாரருக்கு இதில் உடன்பாடு இல்லை என்றால் மறு சாரார் இதைச் செயல்படுத்த முடியாது. இப்படி இன்னும் எத்தனையோ காரணங்கள். பெண், தன்னை இகழ்ந்தாள் என்பதனால் கூட போர் ஏற்படலாம். போரில் பலருக்கு அழிவு நேரும் என்பதை போலவே போரினால் இடையில் சிலருக்கு சில தேவைகள் நிறைவேறும். ஆகவே பாரதத்தில் நடைபெற்ற போரை, இதற்கு உடைமை என்று சொல்லி நாம் ஒதுக்க முடியாது. போர் வேண்டாம் என்று தனி ஒருவர் என்னதான் விரும்பினாலும் போர் நடைபெறுவதை தவிர்க்க முடியாது. ஆகவே அர்ச்சுனனைக் கண்ணன் போர் செய்யத் தூண்டியதை ஒரு குற்றம் என்று சொல்வதற்கில்லை. நம் காலத்திலும் போரைத் தவிர்க்கக் கூடிய சூழல் இல்லை. நம் காலச் சூழலிலும் மக்கள் மத்தியில் பகைமைக்கும் மோதலுக்கும் காரணங்கள் பல உள்ளன. என்னதான்

அமைதி பற்றி பேசினாலும் பகைமைச் சூழலை மாற்றுவதற்கு வழி இல்லை. பயங்கரவாதம் அமெரிக்க ஆதிக்கம் என இன்று எவ்வளவோ நாம் சொல்ல முடியும். மோதலுக்கும் அழிவுக்கும் கூட நாம் தயாராகத்தான் இருந்தாக வேண்டும்.

4. பகவத் கீதையில் வருணக் கோட்பாடு பெரிய அளவில் இடம்பெறுகிறது என்பது உண்மைதான். வர்ணங்களின் தோற்றத்திற்கான மூலம் பற்றியும் கீதை பேசுகிறது. இயற்கையில் முக்குணங்கள் பற்றி கண்ணன் குறிப்பிடுகிறார். முக்குணங்களுக்கும் வர்ண அமைப்புக்கும் உள்ள தொடர்பு பற்றியும் கீதை செல்கிறது. வர்ணங்களின் அடிப்படையிலான தர்மம் பற்றி கீதை அழுத்தமாகச் சொல்லுகிறது. அவரவர்க்குரிய தர்மத்திலிருந்து பிறழக்கூடாது என்றும் கீதை வற்புறுத்துகிறது.

மனிதர்களுக்கிடையில் குண வேறுபாடுகள் உள்ளன. சாந்தம், வீரியம், மந்தம் என்பன மட்டுமே மனிதரின் முதன்மையான குணங்கள் என்று நம்மால் சொல்ல முடியவில்லை. ஒரு குணத்திலேயே முழுமையாக ஒருவர் எல்லாச் சமயங்களிலும் நிலைத்திருப்பதும் இல்லை. தற்கால உளவியல் நோக்கிலும் இதைப்பற்றி நாம் பேசுவதற்கு இடமுண்டு.

இயற்கையிலிருந்தே முக்குணங்கள் தோன்றுகின்றன என்பதை விளக்குவது இயலாது. மனிதரின் குணங்கள், குண வேறுபாடுகள் பல்வேறு சூழல்களில் ஏற்படுகிறது. வரலாறு, பொருளியல், குடும்பம், வளர்ப்பு என்று எவ்வளவோ காரணிகளை நாம் சொல்ல வேண்டும். இப்படி எவ்வளவோ காரணிகளை அடுக்கினாலும் கூட ஒருவரின் குணத்தை திர்மானமாக வரையறுப்பது கடினம்.

5. அப்புறம் இயற்கையின் தோற்றம், இயக்கம் பற்றியும் கீதை பேசுகிறது. இயற்கை வேறு, பிரம்மம் வேறு என்றில்லாமல் இரண்டும் ஒன்றுதான் என்றும் கீதை சொல்லுகிறது. இனி உலகம், பிரபஞ்சம் ஆகியவற்றின் தோற்றம், இயக்கம் பற்றி நாம் பேசி ஆக வேண்டும். நம் காலத்து அறிவியல் பார்வையும் பழங்காலம் முதல் தொடர்ந்து வரும் மதவாதிகளின் பார்வையும் எப்படி எல்லாம் வேறுபடுகின்றன, இவற்றிற்கிடையில் ஏதேனும் உறவு உண்டா என்றும் கேட்டுக் கொள்ள வேண்டி இருக்கிறது. இந்தக் கேள்விகளுக்கெல்லாம் இறுதியான, அறுதியான விடை நம் கைகளில் இல்லை.

ஆனால் இத்தகைய கேள்விகளுக்கெல்லாம் வரலாற்றின் எந்தக் கட்டத்திலும் தெளிவான, உறுதியான விடை கிடைக்கவில்லை. நாம் எங்கிருந்து தோன்றினோம், எப்படித் தோன்றினோம், யார், எந்த நோக்கத்தோடு நம்மைத் தோற்றுவித்தார்கள், நம் வாழ்வுக்கு இறுதி இலக்கு என்ன? இயற்கையோடு, பிரபஞ்சத்தோடு என்ன உறவு? இத்தகைய கேள்விகள் பழங்காலச் சூழலில் மிக மிகக் கடுமையான கேள்விகளாக இருந்திருக்க முடியும். இத்தகைய கேள்விகளுக்கு விடை தேடித்தான் மனிதர்கள் காடுகளில் அலைந்தார்கள், பட்டினி கிடந்து தவம் செய்தார்கள், உயிரைக் கொடுத்தும் இவற்றிற்கு விடை தேடி அவர்கள் அலைந்தார்கள். நம் காலத்திலும் இத்தகைய கேள்விக்கான விடை தேவையான அளவுக்கு கிடைத்ததாகச் சொல்ல முடியாது. சிலவற்றில் நாம் தெளிவு கண்டிருக்கிறோம். புதிய கேள்விகளும் எழுந்திருக்கின்றன.

ஆனால் இயற்கையையும் இறைவனையும் ஒன்று என நம்மால் கருத முடியவில்லை. இறைவன் உயிர்களைப் படைத்தான் என்பதிலும் நமக்கு உடன்பாடு இல்லை. இயற்கையிலிருந்தே மனித குணங்கள் தோன்றின என்றும் நாம் கருதவில்லை. இயற்கையிலிருந்து கீதை விவரிக்கிறபடி எல்லாமே எப்படி ஒன்றையடுத்து மற்றவை தோன்றின என்ற விவரிப்பும் நமக்கு உடன்பாடில்லை. அனுபவத்திலிருந்து உருவம் அல்லது உணர்விலிருந்து பொருள் அல்லது சிந்தனையிலிருந்து செயல் என்ற முறையில் சாங்கியத்தின் பரிணாமக் கொள்கையை இது உண்மையில்லை என்றாலும் புரிந்து கொள்ளலாம். இந்தக் கொள்கையைத்தான் கீதை எடுத்துக் கொள்கிறது. அப்புறம் இயற்கையும் பிரம்மனும் ஒன்று எனச் சேர்த்துக் கொள்கிறது. இது கருத்து முதல்வாதம். நாம் இதை ஏற்க முடியாது.

6. வர்ணக்கோட்பாடு என்ன என்பதை நாம் ஓரளவிற்கு புரிந்து கொள்ள முடியும். தொடக்க காலத்தில் ஒருவருடைய வர்ணம், பிறப்பிலிருந்தே தீர்மானிக்கப்படுவதாக இல்லை. ஒருவனுடைய குணமும் செயலும் அவனுடைய வர்ணத்தைத் தீர்மானிக்கிறது. பிற்காலத்தில் இந்த முறை மாறி பிறப்பே வர்ணத்தை தீர்மானிக்கும் என்ற கொள்கை இடம் பெற்றது. ஒருவகையில் சமூகம் தமக்குள் இறுகிய காலத்தில் இப்படி ஏற்பட்டிருக்க முடியும். வளர்ச்சிக் காலத்தில் இத்தகைய இறுக்கத்திற்கு இடம் இல்லை.

சமூகத்தில் ஆட்சி புரிவோர் அறிஞர்கள், படைவீரர்கள், வணிகம் செய்வோர், உழவர்கள், கலைஞர்கள், குற்றேவல் செய்வோர் என்ற பிரிவுகள் நிலவுகின்றன. இவற்றிற்கிடையில் ஏற்றத்தாழ்வுகள் முதலியவை இருக்கத்தான் செய்கின்றன. சமூகத்தில் இத்தகைய பிரிவுகள் இல்லாமல் செய்து விட இயலாது. மன்னர்கள், நிலவுடைமையாளர், முதலாளிகள், அரசு ஊழியர்கள், அதிகார வர்க்கத்தினர் கூடவே ஆதிவாசிகள் என்று முன்பும், நிலவின. இன்றும் நிலவுகின்றன. இந்தப் பிரிவுகள் இல்லாமல் முடியாது என்று சிலர் தர்க்கம் செய்கின்றனர். சில வகையான சமூகப் பிரிவுகளில் உள்ளவர்களுக்கு சில வசதி வாய்ப்புக்கள் கூடுதலாக இருப்பதனாலும் இவர்கள் பிடிவாதமாக இவை தேவை என்று பேசுகின்றனர். நம் காலத்திலும் சாதிப்பிரிவுகள், ஏற்றத்தாழ்வுகள், வேண்டாம் என்றுதான் பேசுகிறோம். இப்படிப் பேசுபவர்களும் இவற்றையெல்லாம் எந்த அளவுக்கு விட்டுக் கொடுப்பார்கள் என்றும் சொல்வதற்கில்லை.

கீதையில் சொல்லப்படும் இந்த வர்ணப் பாகுபாட்டை நாம் ஒருவாறு புரிந்து கொள்ள முடியும். கீதையின் ஆசிரியரும் இந்த வர்ணப் பாகுபாட்டில், வசதிகளைச் சேகரித்துக் கொண்ட வர்ணத்தவராக இருக்கிறார் என்பதையும் புரிந்து கொள்ள முடியும். வர்ணங்கள் கலப்பதை அவர் ஏற்கவில்லை. இதற்கு மாறாக அவரவர் தம் கடமைகளை சரிவரச் செய்ய வேண்டும் என்று விடாப்பிடியாகச் சொல்லுகிறார். வருணங்களுக்கிடையில் தவிர்க்க இயலாமல் கலப்பும் மோதலும் நிகழ்வதை எவராலும் தடுக்க இயலாது. கீதை ஒரு தடைச் சுவரை எடுக்க முயற்சி செய்கிறது. கீதைக்கு உதவியாக மனுநீதி, வரலாற்றில் வந்து சேர்ந்திருக்கிறது. மனுநீதியை கீதை கண்டிப்பதாக இல்லை. கீதை சொல்லும் நீதி நமக்கு உடன்பாடு இல்லை எனினும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். இதனால்தான் இந்துத்துவம் கீதையைக் கொண்டாடுகிறது. இன்று சாதி வேண்டாம் ஏற்றத்தாழ்வு வேண்டாம் என்று நாம் பேசுகிறோம். இதற்குரிய செயல்பாடுகள் இல்லை அன்றியும் தனி உடைமை, அரசு அதிகாரம் முதலியவற்றை வைத்துக் கொண்டு சாதி வேண்டாம் ஏற்றத்தாழ்வு வேண்டாம் என்று பேசுவதிலும் பொருளில்லை. கீதைக்கு எதிராக பேசுபவர்கள் இதுபற்றிச் சிந்திக்க வேண்டும்.

6. கீதை கர்ம நெறி என்றும் ஞான நெறி என்றும் தியான நெறி

என்றும் பக்தி நெறி என்றும் பலவகையான நெறிகளைப் பேசுகிறது. இவற்றிற்கிடையில் முரண்பாடுகள் இல்லாமல் இல்லை. எந்த நெறியைக் கடைப்பிடித்தாலும் இறுதியில் என்னை வந்து சேரலாம் என்று கண்ணனாகிய இறைவன் கூறுகிறார். இறைவனை அடைதல் என்பது ஒரு வகையில் மனித விடுதலை / மோட்சம் / முக்தி என்றும் சமயவாதிகள் குறிப்பிடுவர். மனித விடுதலை என்பது சமயநெறியில் சாதிப்பதாக இருக்க முடியாது. பற்றுகளிலிருந்து விடுதலை என்பது சமய வகைப்பட்ட விடுதலை. தனிவுடைமை முதலியவற்றை வைத்துக் கொண்டு பற்றுக்களிலிருந்து விடுதலைப் பெற முடியாது. தியானம் என்பது குறைந்த அளவுக்கு ஒரு தற்காலிக விடுதலை அவ்வளவுதான். வரலாறு, பொருளியல், இயற்கை, மனித வாழ்க்கை, பசி, காமம் முதலியவை பற்றி எத்தனையோ ஆய்வுகளோடுதான் மனித விடுதலை பற்றிப் பேச முடியும். அவ்வப்பொழுது இறைந்த அளவுக்கு மனத்தின் விடுதலை பற்றி பேசிக் கொள்ளலாம். சமத்துவம், சமதர்மம் என்ற அடிப்படையில்தான் மனித விடுதலை சாத்தியப்படும். இதற்கு எவ்வளவோ காலம் செல்லும். ஜே.கே., ஓசோ என்று கொஞ்ச காலம் பேசலாம். கடமையைச் செய் பலனை எதிர்பாராதே என்பது தான் கர்ம நெறி என்று விளக்கம் கூறுகின்றனர். பலன் கருதி, பலனை முக்கியப்படுத்தி எதையும் சரிவரச் செய்ய முடியாது. கீதை சொல்லும் இந்தக் கூற்றை உழைத்துக் கொண்டே இரு ஊதிய உயர்வை எதிர்பார்க்க கூடாது என்றெல்லாம் பேசக் கூடாது என்று கீதை கூறுவதாக சிலர் பொருள்படுத்துகின்றனர். இந்தக் கூற்றை இப்படி குறுகிய அரசியல் நெறியில் பொருள்படுத்துவது நேர்மையாகாது. நல்ல நோக்கத்தோடு நாம் செயல்படுகிறபோதிலும் நாம் நினைக்கிற அதே அளவுக்கு விளைவுகள் அமையும் என்று நம்புவதற்கில்லை. சமூகம் எத்தனையோ சிக்கல்களோடு, முரண்பாடுகளோடு செயல்படுகிறது. நினைத்தது நிறைவேறவில்லை என்றால் அதற்கான காரணங்கள் குறித்து நாம் ஆராயத்தான் வேண்டும். குறுகிய நோக்கம் எந்த வடிவத்திலும் சரி என்று விவாதிக்க முடியாது.

இந்த இடத்தில் இன்னொன்றையும் சொல்ல வேண்டும். கீதை சொல்லும் பல்வேறு நெறிகளுக்கிடையில் முரண்பாடுகள் இருக்கின்றன என்பதை முதன்மைப்படுத்தி முரண்பாடு என்று அறவே இல்லாத ஒரு தத்துவம் என்று ஒன்றை மெய்ப்பிக்க முடியாது. முரண்பாடுகள் இல்லாத இயக்கம், அமைப்பு, நிறுவனம் என்று

எதுவும் இல்லை. கீதைக்குள்ளும் முரண்பாடுகள் இருப்பதை குற்றம் என்று சாட முடியாது. குறிப்பிட்ட ஒரு வரலாற்றுச் சூழலில், குறிப்பிட்ட சில தேவைகளை முன்வைத்து கீதை அமைகிறது. இந்நிலையில் வரலாறு மற்றும் சமூகத்தின் முரண்பாடுகள் கீதைக்குள்ளும் இடம்பெறத்தான் செய்யும் – அன்றியும் எல்லாக் காலத்திற்கும் உரிய நூல் என்று கீதையை சிலர் கொண்டாடலாம். நமக்கு இது முடியாது. கீதைக்குள்ளும் முரண்பாடு என்று சொல்வதன் மூலம் கீதையை இகழ்வதும் தவறாகி விடும்.

7. மேலும் ஒன்று கீதை எழுந்த சமூகச் சூழலில் பல்வேறு சமூகப் பிரிவுகளுக்கிடையில் முரண்பாடுகள் மட்டுமல்லாமல் மோதல்களும் இருந்திருக்கின்றன. எத்தனையோ வகை வகையான இனக் குழுக்களுக்கிடையில் மோதல், இனக்குழுக்களுக்கும், அரசுகளுக் கிடையில் மோதல், பல்வேறு கலாச்சாரங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றுக்கிடையிலும் மோதல். எத்தனையோ வகைவகையான தெய்வங்கள், வழிபாட்டு நெறிகள் இவ்வகை முரண்பாடுகளுக்கு மத்தியில் ஏதோ ஒரு வகையில் இசைவு இல்லாமல் சமூக இயக்கம் சாத்தியமில்லை. நீங்கள் எங்கிருந்து வழிபட்டாலும் எந்த முறையில் வழிபட்டாலும் நீங்கள் எல்லோருமே என்னைத்தான் வழிபடுகிறீர்கள். என்னை வந்து சேர்வீர்கள் என்று கண்ணன் கூறுகிறான். முரண்பாடுகளுக்கிடையில் ஓர் இணக்கம் கருத்தியாக இந்தக் கூற்றை பொருள்படுத்த முடியும். கண்ணன் கருதுகிறபடியும் இணக்கம் நடைபெறுவதும் சாத்தியமில்லை.

8. ஆன்மாவிற்கு அழிவில்லை என்பது கீதையின் ஒரு முழுமையான அடிப்படை வாசகம். ஆன்மா என்பது பற்றி பல்வேறு சமயங்கள் விடாப்பிடியாகப் பேசுகின்றன. ஆன்மா என்பதை ஏற்றுக் கொள்ள சமயங்களும் உண்டு. உடலை விட்டுத் தனித்தியங்குவது ஆன்மா என்று பலர் நம்புகின்றனர். இதை மெய்ப்பிப்பது கடினம். ஆன்மாவையும் இறைவனையும் ஏதோவொரு வகையில் உறவுபடுத்தியும் சமயவாதிகள் கூறுகின்றனர். இறைவன் நமக்குள் ஆன்மாவின் வடிவத்தில் இருக்கிறான் என்று இவர்கள் நம்புகின்றனர். உயிர் இயக்கத்தை ஆன்மா என்றும் சிலர் கூறுகின்றனர். இவை பற்றி எல்லாம் விவாதித்து எல்லோரும் ஒப்புக்கொள்கிற முறையில் விடைகள் காண்பது கடினம். தன்னுணர்வு என்பதை சமயம் கூறும் ஆன்மா என்று புரிந்து

கொள்ள முடியும். உடல் அழிந்த பிறகு தன் உணர்வு தொடர்வதில்லை.

கீதையைப் பொறுத்தவரை பிரம்மம் என்பதுதான் ஆன்மா என்ற வடிவில் நமக்குள் இயங்குகிறது. பலவகையான திரைகள் ஆன்மாவை மறைத்திருப்பதால் ஆன்மா தன்னை பிரம்மம் என்று அறிவதில்லை. இப்படி அறிய நேரும் பொழுது எல்லையற்ற பிரம்மமும் தானும் ஒன்று என்பதை ஆன்மா உணர முடியும். இத்தகைய உணர்வைத் தேடும் ஆன்மா சூரியன் முதலிய அனைத்தையும் தனக்குள் காணமுடியும். இதைத்தான் விசுவரூப தரிசனம் என்று கீதை குறிப்பிடுகிறது. இத்தகைய பேரான்மாவை வெட்ட முடியாது. துண்டிக்க முடியாது என்றெல்லாம் கீதை கூறுவதை நாம் புரிந்து கொள்ள இயலும்.

இந்தக் கூற்று இதே வடிவில் உண்மை என நாம் கருதுவதற்கில்லை. அறிவியல், வரலாறு, உளவியல் பற்றிய உண்மைகள் வளர்ந்துள்ள நம் காலச் சூழலில் நாம் வேறு வகையில் நாம் இதைப் புரிந்து கொள்ள முடியும். வரலாறு மற்றும் சமூக இயக்கத்தில் நாம் இருக்கிறோம். பிரபஞ்சம் முழுவதும் விரிந்துள்ள மாபெரும் உயிர் இயக்கத்தில் நாம் ஒரு துளியாக இருக்கிறோம். நமக்குள்ளும் வரலாறு இயங்குகிறது பிரபஞ்சம் இயங்குகிறது. நமக்கும் தான் அழிவில்லை.

வரலாறு, சமூகம், இயற்கை பற்றிய ஆய்வுகள் வளராத பழங்காலச் சூழலில் கீதை கூறியதை நம் காலச் சூழலில் வைத்து சரியாகப் புரிந்து கொள்ள முடியும். கீதை சொல்வதனுள்ளும் இருக்கிற உண்மையை இப்படித்தான் புரிந்து கொள்ள முடியும். வியாசரால் விளக்க முடியாததை நம்மால் விளங்கிக் கொள்ள முடியும்.

9. கீதை சொல்வன எல்லாவற்றையும் இடைக்காலத்தில் வந்த உரையாசிரியர்கள் நியாயப்படுத்துகின்றனர். வரலாற்றுச் சூழல் மாறுபடுவதற்கு ஒத்த முறையில் ஒவ்வொரு நூலும், ஒவ்வொரு தத்துவமும் பொருள்படுத்தப்படுவதை நம்மால் புரிந்து கொள்ள முடியும் அன்றியும் இவ்வாறு பொருள் கூறும் உரை ஆசிரியர் தான் சாந்திருக் ற சமூகப் பிரிவை ஒப்பிடவும் நூலுக்கு பொருள் காண்பா உண்மையை காண்பதற்கான ஆய்வு என்பது ஒன்று உண்மையை மறைப்பதற்கெனவும் நடைபெறும் இன்னொரு வகை

ஆய்வு. தான் காணும் புதிய உண்மைகளை, தான் வாசிக்கும் நூலின் மீது ஏற்றிச் சொல்வது இன்னொரு முறை இப்படியும் ஆய்வுகள் நடைபெறுகின்றன.

கீதைக்கு வியக்கத்தக்க முறையில் எத்தனையோ வகைவகையான ஆய்வுரைகள் எழுதப்பட்டுள்ளன. இந்தியச் சமுதாயத்தில் கீதை இந்த முறையில் மிக முக்கியமான ஒரு நூலாக, ஒரு தத்துவமாக, ஒரு ஆயுதமாக விளங்கியதை நாம் மதிக்கத்தான் வேண்டும். நமக்கும் ஒத்த முறையில் கீதைக்கு உரை காண்பதும் தேவைதான். கீதையை மறுத்துரைப்பதற்கு பதிலாக நாம் காணும் உரையும் கீதைக்கு இன்னும் ஓர் உரையாக இருப்பதில் தவறில்லை.

கீதையை இன்னும் ஆழமாக புரிந்து கொள்ளும் முறையில் மேலும் ஒன்றைச் சொல்லலாம். கர்ம நெறி முதலிய நான்கு நெறிகள் பற்றி கீதை சொல்கிறது. எந்த ஒரு மனிதனும் இந்த நான்கு நெறிகளையும் ஏதாவது ஒரு விகிதத்தில் தனக்குள் கொண்டு தான் வாழ முடியும். கர்மங்களையே ஒரு விதி போல முழுமையாகக் கடைபிடித்து வாழ நேர்ந்த ஓர் அடிமைக்கு ஞானநெறி சாத்தியப்பட வாய்ப்பில்லை. கர்மத்தோடு, அதாவது உடல் உழைப்பு முதலிய செயல்பாடுகளோடு முழு அளவில் உறவு இல்லாதவனுக்கு ஞானம் வாய்க்காது. சில வகையான செயல்களில் ஈடுபடும் பொழுதோ அல்லது ஈடுபட்ட பிறகு முன் செய்த செயல்களின் அர்த்தம் என்ன என்று தனக்குள்ளே நிதானமாகச் சிந்தனை செய்வது ஒரு வகையில் தியானம் என்றால், இத்தகைய தியானத்தில் தொடர்ச்சி இல்லாமல் ஞானம் வாய்க்காது. தன் தந்தையிடம் அல்லது ஆசிரியனிடம் அல்லது தன் வளர்ச்சிக்குக் காரணமான ஓர் அமைப்பினிடம் நம்பிக்கை கொள்ளாமல் மனிதன் வாழ முடியாது. இவர்கள் நம்மை வளர்த்தவர் என்ற முறையில் அவரிடம் பக்தி உணர்வு கொள்வதற்கான நியாயம் இருக்கிறது. இவ்வகையில் பார்க்கும் பொழுது கர்மம் முதலிய நான்கு நெறிகளும் ஒன்றோடு ஒன்று உறவுடையவை. ஒன்றின் ஊடுறுவல் இல்லாமல் இன்னொன்று இல்லை என்பதைப் புரிந்து கொள்ள முடியும்.

சமூகத்தில், வரலாற்றில் நெடுங்காலமாக எவ்வளவோ நடைபெற்று வருகின்றன. ஆதிக்கங்களும், அடிமைத்தனமும் இவற்றின் ஊடே கலந்து வந்திருக்கின்றன. இவற்றையும் மீறி, கடந்து மனிதன் வாழ்கிறான். அனுபவங்களைச் சேகரித்துக் கொள்கிறான். அனுபவங்கள் சேரச் சேர இவற்றின் தூண்டுதலில் மனிதன் புதிய

அறிவை, ஞானத்தைப் பெறுகிறான். சிந்தனை அல்லது தியானத்தின் திவிரத்தோடு தான் ஞானத்தைப் பெற முடியும். ஞானம் என்பது கூட அனுபவங்களின், அறிவின் தொகுப்பாக இருக்க முடியாது. புலன்களின் வழியே சேர்ந்த அனுபவங்களிலிருந்து ஒரு பாய்ச்சலைப் போல மனிதன் சிந்தனை அமைகிறது. புலன்களோடு மட்டும், பொருள்களோடு மட்டும் மனிதன் வாழ்வதில்லை. இவற்றிற்கு அப்பாலும் மனிதன் இயங்குகிறான். இயற்கை, பிரபஞ்சம், வாழ்க்கை, வரலாறு என்று பலவற்றையும் தனக்குள் வைத்துச் சிந்திக்கிறான். இது குறித்துச் சிந்திக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிற போது இவனுக்குள் புதிய சிந்தனைகள் எழுகின்றன. வாழ்வு, இயற்கை, பிரபஞ்சம் என்ற சிந்தனைகளைத் தொடரும் பொழுதுதான் இவனுக்குள் ஆன்மா, இறைவன் முதலிய கருத்தாக்கங்கள் எழுகின்றன. தர்க்கம் என ஒன்றை விடாப்பிடியாகக் கடைப்பிடிக்கிறான். தர்க்கங்கள் அறுபடும் சூழலும் இவனுக்கு நேர்கிறது. இவனுக்குள் புதிய ஒளி பாய்கிறது. அனுபவங்கள் பெருமளவு சேராமல் புதிய பாய்ச்சல் ஏற்பட வழி இல்லை.

சமூகத்தின் இயக்கம் நேர்கோட்டில் நடைபெறுவதில்லை. குறுக்கும் நெடுக்குமாக எவ்வளவோ நடைபெறுகின்றன. முன்னோக்கிச் செல்வதும் பின்னோக்கிச் செல்வதும் வரலாற்றின் எந்தக் கட்டத்திலும் சாத்தியம்தான். அடிமைகள் கலகம் செய்யாமல் இருப்பதில்லை. ஆதிக்கவாதிகள் புதிய கருவிகளைக் கண்டுபிடிப்பதைப் போலவே புதிய கருத்தாக்கங்களையும் படைக்கின்றனர். தனிஉடைமை, அரசு, மதம் முதலிய அமைப்புக்கள் இல்லாமல் வரலாறு நடைபெறவில்லை. ஒரு கட்டத்தில் இவை சமூகத்தின் வளர்ச்சிக்கு தேவை என்பதைப் போலவே இன்னொரு கட்டத்தில் சமூகத்தின் வளர்ச்சிக்கு இவை தடையாகவும் அமைகின்றன. இத்தகைய வரலாற்று நிலவரங்களின் மத்தியில் வைத்துத்தான் கர்மநெறி, ஞானநெறி, தியான நெறி, பக்திநெறி, ஆகியவற்றைப் புரிந்து கொள்ள முடியும். பிராமணர்களுக்கு ஞான நெறி என்பது இயல்பானதில்லை. துறவிகளுக்கு மட்டுமே தியான நெறி என்பதும் உண்மையில்லை. ஓய்வு கிடைப்பவருக்குத்தான் பக்தி நெறி தேவை என்பதும் உண்மை இல்லை. இந்த நான்கு நெறிகளும் எல்லாக் காலத்திலும் எந்த ஒரு சமூகத்திலும் இயல்பாக நடைபெறக் கூடியவைதான்.



கேவை ஞானி அவர்கள் ஆசிரியர், இதழாளர், கவிஞர், மார்க்சியர், எழுத்தாளர். எல்லாவற்றுக்கும் மேலாக அபூர்வமான மனிதர். இவரது இயக்கங்களுள் ஒன்றான வெளியீடு மிகவும் குறிப்பிடத் தக்கவை.

காவ்யா

Cover Design P. Madhavan